Composition 100% cotton
Composizione 100% cotone
Composición 100% algodón
Composició 100% cotó
Composico 100% algoco
Samenstelling 100% katoen
Material 100% Baumwolle
المكوّنات 100% قطن



## Composition 100% Coton


Composition 100% cotton
Composizione 100% cotone
Composición 100% algodón
Composició 100% cotó
Composico 100% algoco
Samenstelling 100% katoen
Material 100% Baumwolle
المكوّنات 100% قطن




உ

கடவுள் துணை.

ஜாதக ராஜ "பாவ இருவாக்ஷி"

பாகம் நெ. 1 என்னும்

# ஆயுள் பாவம்

மலர் 1

(Astrological Dogmas employed mostly in Nadi Granthas.)

இரண்டாம் பதிப்பு.

இது நாடிக் கிரந்தங்களில் உபயோகப் படுத்தப்பட்ட விதிகளின் திரட்டு முதலியன ஆகும்.



இது சென்னை முத்தியாலுப்பேட்டை ஐ ஸ்கூல் சைன்ஸ் உபதியாயராயிருந்தவரும், கணித சாஸ்திரத்தில் பி. ஏ. பட்டம் வகித்தரும், நாமகள் சுத்த திருக்கணித பஞ்சாங்க கணிதரும், தென்னாட்டு வாக்கிய பஞ்சாங்க கணிதரும் இராஜ ஜோதிட கணிதம், கிரக சட்பலம் ஆயுள் கணிதம், ஜாதக கணிதம் இரண்டாம் பாகம் என்ற ஜாதக பலாபலன்கள் நிர்ணயம், பல பாகக் கிரதங்களாகிய ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் ஒன்று, இரண்டு, ஜாதக லக்கின ஸ்புட பாவ ஸ்புட கணனம் இவைகளின் ஆசிரியரும், பிருஹத்ஜாதகத்தின் மொழி பொழிப்புரை ஆசிரியருமாகிய,

## C. G. ராஜன், B. A., (*Mathematics*)

அவர்களால் ஆக்கப்பட்டது.

C. சுப்பிரமணியம் அண்டு பிரதர்ஸ்,

புக்செல்லர்ஸ் அண்டு பப்ளிஷர்ஸ்,

அவர்களால் தமது

"சி. ஜி. பூரேனியா" அச்சியந்திரசாலையில்

அச்சிடப்பட்டது.

 1947 [விலை ரூ. 

உ

# நாமகள் திருக்கணித

## சர்வ முகூர்த்த பஞ்சாங்கம்.

இந்தத் தமிழ் பஞ்சாங்கம் சுமார் 27-வருஷங்களாகப் பஞ்சாங்க கண தத்தில் பழக்கமுள்ளவரும் (1) ஜாதக கணிதம் முதல் பாகம் என்னும் ஜோதிட கிரக சட்பலம், ஆயுள் கணிதம், (2) ஜாதக கணிதம் இரண்டாம் பாகம் என்னும் ஜாதகப் பலாபலன்கள் நிர்ணயம், (3) ஜாதக கணிதம் மூன்றும் பாகம், நான்காம் பாகம் என்னும் ஜாதக மனோரஞ்சிதம் மல 1, 2, (4) ஜாதக சிரோன்மணி என்னும் வராஹமிஹிரருடைய பிருஹ ஜாதகம், (5) நவக்கிரக ஸ்புட கணனம், (6) லக்கின ஸ்புட பாவஸ்புட கண னம், (7) ஜாதக பாவ இருவாகூதி-ஆயுள், ஜீவன, களத்திர, புத்ர, பாவம் (8) ஜாதக ஜம்புநாதீயம், (9) ஜாதக சர்வார்த்த சிந்தாமணி; (10) சென் 63 வருஷத்திய கிரகங்களின் கிராந்தி, (11) சுகப்பிரம்ம ரிஷி வாக்கிய என்னும் சுகர்நாடி, (12) தெசாபுக்தி சிந்தாமணி, (13) தெசாரிஷ்ட நிவ ரணி ஆகிய முதலிய ஜோதிடப் புத்தகங்களின் ஆசிரியர்கள் முதலிய வாகிய C. கோவிந்த ராஜன், B. A., (Mathematics), C. S. மணிய என்னும் சி. சுப்பிரமணியம், B. A. (Honours) இவர்களால் தயாரிக்க பட்டது. இப்பஞ்சாங்கத்தை எல்லா வர்ணத்தாரும், மதஸ்தரும், எல்ல கொள்கையுடையவரும் உபயோகப்படுத்தும்படியாய் விரதாதி; உற்சவாதி ஸ்ராத்தாதி முதலிய விஷயங்கள் அவரவர்கள் கொள்கை பிரகாரம் தய ரிக்கப் பட்டிருக்கிறது. வைஷ்ணவ, சைவ, ஸ்மார்த்த, மத்வ, மதா சாரம், பரம்பரை வழக்கம் ஆகிய இவைகளை அனுசரித்து விரதாதி, உ வாசம், பண்டிகை முதலியவைகளை அவாளவாள் அனுஷ்டித்து வருகி தர்ம சாஸ்திரம் ஆகிய இவைகள் பிரகாரம் நிர்ணயிக்கப் பட்டிருப்பதா இதை எல்லா மதஸ்தரும் உபயோகப்படுத்தலாம். மேலும் இதில் ஜோ திடர்களுக்கும், மற்றவர்களுக்குங்கூட மிகவும் உபயோகமாய் இருக்கு படியாய் அனேக ஜோதிட பொது விஷயங்கள் கூட மிகவும் விவரிசைய கவும் தெளிவாய் இருக்கும்படியாயும், சுலபமாய்த் தெரியும்படியாயு கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதில் நவக்கிரக ஸ்புடம் தினந்தோறு கொடுக்கப்பட்டிருப்பதால் நமக்கு தேவையான மணி, நிமிஷத்திற்கு கிரகஸ்புடம் துல்லியமாய்க் கணித்துக்கொள்ளலாம். இதில் அனே ஜோதிட விஷயங்கள் சுலபமாய் அறிந்துகொள்ளும்படியாய்க் கொடு திருப்பதால் ஜோதிடந் தெரியாதவர்கள்கூட இவ்விஷயங்களைச் சுல மாய்த் தாமே தெரிந்துகொள்ளலாம். இதில் உபயோகப்படுத்தப்ப டுள்ள கிரஹணம், கிரஹஸ்புடம் முதலிய கணன விதிகள் தற்காலத் உன்னத நிலையிலிருக்கின்ற கணன விதிகள் பிரகாரம் கணிக்கப்பட உபயோகப் படுத்தப்பட்டு வருகின்றன. இது ஜோதிடர்களுக்குக் மிகவும் உபயோகமானது. இப்பஞ்சாங்கத்தை எல்லோரும் உபயோ படுத்துமாறு கோரப்படுகிறது.

உ

கடவுள் துணை.

ஜாதக ராஜ "பாவ இருவாக்ஷி"

பாகம் நெ. 1 என்னும்

# ஆயுள் பாவம்

மலர் 1

(Astrological Dogmas employed mostly in Nadi Granthas.)

பாகம் நெ. 1 ஆயுள் பாவம்.

இது நாடிக் கிரந்தங்களில் உபயோகப் படுத்தப்பட்ட விதிகளின் திரட்டு முதலியன ஆகும்.



இது சென்னை முத்தியாலுப்பேட்டை ஐ ஸ்கூல் சைன்ஸ் உபதியாயராயிருந்தவரும், கணித சாஸ்திரத்தில் பி. ஏ. பட்டம் வகித்தரும், நாமகள் சுத்த திருக்கணித பஞ்சாங்க கணிதரும், தென்னாட்டு வாக்கிய பஞ்சாங்க கணிதரும் இராஜ ஜோதிட கணிதம், கிரக சட்பலம் ஆயுள் கணிதம், ஜாதக கணிதம் இரண்டாம் பாகம் என்ற ஜாதக பலாபலன்கள் நிர்ணயம், பல பாகக் கிரதங்களாகிய ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் ஒன்று, இரண்டு, ஜாதக லக்கின ஸ்புட பாவ ஸ்புட கணனம் இவைகளின் ஆசிரியரும், பிருஹத்ஜாதகத்தின் மொழி பொழிப்புரை ஆசிரியருமாகிய,

**C. G. ராஜன், B. A., (*Mathematics*)**

அவர்களால் ஆக்கப்பட்டது.

கிடைக்கும் இடம்:—C. சுப்பிரமண்யம் & பிரதர்ஸ்,
நெ. 31, ஆயலூர் முத்தையா முதலி தெரு
சௌகார்ப்பேட்டை போஸ்டு, சென்னை.

 1947 [விலை ரு



சி. ஜி. யூரேனியா அச்சுயந்திரசாலையில்
அச்சிடப்பட்டது, சென்னை.

# முன்னுரை.



இப்புத்தகம் என்னுடைய "ஜாதக கணிதம் மூன்றும் பாகம், நான்காம் பாகம் என்னும் ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் 1, மலர் 2, என்ற இரண்டு புத்தகங்களின் தொடர்ச்சியாகும். மேலும் இது ஜாதக கணிதம் இரண்டாம் பாகம் என்னும் ஜாதகப் பலா பலன்கள் நிர்ணயம்" என்ற என்னுடைய புத்தகத்தில் ஏழாவது அத்தியாயம் 115-வது அயிட்டமாகிய "துவாதச லக்கின ஜாதகப் பலன்கள்" என்ற பகுதியின் தொடர்ச்சியாகும். இப்போது ஜோதிட கிரந்தங்கள் அனேக கிரந்தங்கள் அச்சிடப்பட்டிருக்கின்றன. அவைகளில் கிரகங்களின் நிலைமை மேஷ லக்கினம், ரிஷப லக்கினம் முதலிய துவாதச லக்கினங்கள் ரீதியாய் அனுசரித்துச் சொல்லாமல் அதாவது லக்கினம் இன்ன ராசியிலிருக்கின்றதென்று குறிக்காமல் பொதுவாய் லக்கினத்திற்கு இத்தனையாவது வீட்டில் அல்லது பாவத்தில் அல்லது ராசியில் கிரகம் இருந்தால் இந்த இந்த பலன்கள் நேரிடும் என்று சொல்லி இருக்கின்றது. லக்கினத்தை இன்ன லக்கினம் என்று நிர்ணயத்து விட்டால் கிரகங்களின் ஆதிபத்தியமும் சுபா அசுப குணங்களும் தானாகவே நிர்ணயிக்கப்பட்டு விடுகின்றன; அப்போது கிரகங்கள் தங்கள் தங்களுடைய நிலைமையும் பார்வையையும் சம்மந்தத்தையும் அனுசரித்துக் கொடுக்கும் . லன்கள் அந்தக் குறித்த லக்கினம் வரையிலும் ஸ்திரமாகவும் துல்லியமாகவும் அமைக்கப்படுகின்றன. இவ்விதமாக லக்கினம் இன்ன ராசியிலிருக்கின்றது என்பதைக் குறிக்காமல் பொதுவாய்ப் பலன சொல்லத் துணிவோமானால் கிரகங்களின் ஆதிபத்தியமும் சுபா அசுப குணங்களும் தானாகவே நிர்ணயிக்கப்படாமல் போய் விடுவதால் ஜோதிடர்கள் அந்தந்தக் கிரகத்தின் ஆதிபத்தியத்தையும் சுபா அசுப குணங்களையும் தாங்களே நிர்ணயஞ் செய்து அதனால் பலா பலன்களில் ஏற்படும் பேதா பேதங்களைச் சிரமப்பட்டு தாங்களே நிர்ணயஞ் செய்ய வேண்டியதாயிருக்கும். இத்தகையசிரமத்தை நீக்கும் பொருட்டும், ஜோதிடர்கள் தாங்களே நிர்ணயஞ் செய்வதில் தவறுகள் ஏற்படக்கூடுமாகையால் அத்தவறுகள் கூடியமட்டும் நேரிடாமலிருக்கும் பொருட்டு நமது மகரிஷிகள் தங்களுடைய கிரந்தங்களில் லக்கினத்தை நிர்ணயஞ் செய்தும், அப்படி நிர்ணயஞ்

செய்வதாலுண்டாகும் கிரகங்களின் ஆதிபத்தியத்தையும் சுபா அசுப குணங்களையும் அனுசரித்து பலா பலன்கள் சொல்லியிருக்கின்றார்கள்.

(2) இவ்வித பலாபலன்கள் அடங்கியுள்ள கிரந்தங்களில் பெரும்பான்மையான கிரந்தங்கள் அழிந்துபோய் விட்டபடியால் இப்போது அவை ஓலையிலாவது அல்லது காகிதத்திலாவது கிடைப்பது அபூர்வமாக விருக்கின்றது. மேலும் அக்கிரந்தங்களில் தற்காலம் அகப்படக்கூடிய சிற்சில கிரந்தங்கள் ஓலையில் எழுதப் பட்டு சில குடும்பங்களில் தங்களால் மாத்திரம் உபயோகப்படுத் தப்பட்டும் உபயோகப் படுத்தப்படாமல் செல்லுக்கும், பாச்சைக் கும் இரையாக இருப்பதாலும் அவை பொது ஜனங்களுக்குக் கிடைப்பது மிகவும் அரிதாயிருக்கின்றது. அழிந்து போய்விட்ட கிரந்தங்களில் கொடுக்கப்பட்டுள்ள விதிகள் நாடிக் கிரந்தங்களில் மேற்கோளாக அதாவது பிரமாண வாக்கியங்களாக (Authority)க் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவ்வித நாடிகள் "சுக்கிர நாடி, கேரள நாடி, துருவ நாடி, சத்திய சம்ஹித நாடி, யோக நாடி" என பெயரிட்டு வழங்கி வருகின்றன. இந்த நாடிகள்கூட பொது ஜனங்களுக்கு அகப்படாமல் சிலரிடத்திலிருப்பதாலும், இவைகள் சமஸ்கிருத பாஷையில் இருப்பதாலும் அனேகருக்குப் பயன் படாமல் இருக்கின்றன. இந்த நாடிகளில் விவரித்திருக்கும் பலா பலன்களுக்கு ஆதாரமாகச் சில மகரிஷிகளையும் பூர்வீக கிரந்த கர்த்தர்களையும் கிரந்தங்களையும் இந்த நாடிகளில் குறித்திருக் கின்றது. இப்படிக் குறிக்கப்பட்ட மகரிஷிகளும் கிரந்த கர்த்தா களும் விருத்த வசிஷ்டர், பராசர், நாரதர், காசிபர், ஜெயமுனி, கர்கர், பிருகு, சத்தியாச்சாரி, மனு, விஷ்ணு, ஈசுவரர், யவனர், மயன் முதலானவர்களாவர். இப்படிக் குறிக்கப்பட்ட கிரந்தங்கள் சூரிய நாடி, சந்திர நாடி, குஜ நாடி, புத நாடி, குரு நாடி, சுக்கிர நாடி, சனி நாடி, சாம்பசிவ நாடி, கார்கிய நாடி, ஐம்புநாதீயம், கர்மயோக பலாத்யாயம், லக்கினாதி பதி நாடி, பாவநாடிகள், காலார்ணவம், தேவ கேரளம் என்ற சந்திரகலா நாடி, சுகர் வாக்கியம் என்ற சுகர் நாடி, பிருஹத் பராசர ஹோரை, நாரதீயம், பார்க்கவ நாடி, யோக நாடி, லக்ஷ்மி நரசிம்ம சம்வாதம் முதலியவைகளாகும். ஆகையால் மேற்சொல் லிய நாடிகளில் ஆதாரமாகக் கொடுக்கப் பட்டுள்ள விதிகள் மேற் சொல்லிய மகரிஷிகளால் ஏற்படுத்தப்பட்டும் கிரந்த கர்த்தர்களால் தங்கள் காலங்களில் தங்களுக்குக் கிடைத்தமட்டும் திரட்டப்

பட்டும் உபயோகப்படுத்தப்பட்டும் வந்துள்ள விதிகளாகும். இவ்வித விதிகள் லக்கினவாரியாக ஒன்றாய்த் திரட்டிச் சேர்க்கப்பட்டு இப்புத்தகத்தில் என்னால் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

(3) இப்புத்தகத்தில் உபயோகப்பட்டுள்ள நாடி அம்சங்களைக் கணிக்கும் விதம் எனது "ஜாதக கணிதம் இரண்டாம் பாகமாகிய ஜாதக பலாபலன்கள் நிர்ணயம்'' என்ற புத்தகத்தில் ஏழாவது அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அதையும் வாசிக்கவும். நாடிக் கிரந்தங்களில் லக்கினம், கிரகங்கள் இவைகள் இருக்கும் நாடி அம்சங்களைக்கொண்டு பலாபலன்களைத் துல்லிபமாகச் சொல்லியிருக்கின்றார்கள். நாடி அம்சங்களின் உதவியால் பெரும்பாலும் ஜாதகன் பிறந்த இடத்தின் நகரச்சிறப்பு, ஜாதகனுடைய குலத்தில் ஜாதி, ஜாதகன் இத்தனையாவது பிறவி என்பது, ஜாதகனுடைய சகோதர சகோதரியின் சங்கியை முதலிய துல்லிபமான அம்சங்கள் நாடிக் கிரகங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. நாம் பரிசீலனை செய்யும் ஜாதகத்தின் நாடி அம்சமும் விதிகளில் கொடுக்கப்பட்டுள்ள நாடி அம்சமும் சரிபட்டுவந்தால் ஸ்தூல பலன்களும் (broad details) அதிக விபரமான (minute details) பலன்களும் நாடிக் கிரந்தங்களில் உபயோகப்படுத்தப்பட்டு இந்த புத்தகத்தில் திரட்டிக் கொடுக்கப்பட்ட விதிகளில் சொல்லியபடி துல்லிபமாயிருக்கும். அப்படி நாடி அம்சம் சரிபடாவிட்டால் நாடி அம்சந்தில் ஏற்படும் வித்தியாசத்திற்குத் தகுந்தபடி துல்லிபமான பலாபலன்கள் கொஞ்சம் மாறுதலடையும். ஆயினும் கிரக யோகங்கள் சரியாக அமையப்பட்டு நாடி அம்சங்கள் மாத்திரம் வித்தியாசப்பட்டால் ஸ்தூல பலாபலங்கள் (i.e., broad details) கூடியமட்டும் சரியாயிருக்கும் என்ற காரணத்தைக்கொண்டே நாடி கிரந்தங்களில் உபயோகப்படுத்தப்பட்ட மேற்கோள்களாகிய மூலக் கிரந்தங்களின் விதிகள் இங்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவ்விதிகளில் சொல்லிய கிரகநிலை, கிரகதிருஷ்டி, கிரகசம்மந்தம் முதலியவைகள் பிரகாரமே நாம் பரிசீலனை செய்யும் ஜாதகத்தில் அமைந்தால் இவ்விதிகளில் சொல்லிய பலாபலன்கள் சரிபட்டு வரும், அப்படிக்கன்றி விதிகளில் சொல்லியதற்கு அதிகமாகக் கிரகசம்பந்தமாகிலும் அல்லது கிரக பார்வையாகிலும் இருந்தால் இந்த அதிக கிரக சம்பந்தத்தாலும் அல்லது அதிக கிரக பார்வையாலும் பலாபலன்களில் உண்டாகும் பேதங்களையும் ஆலோசித்துப் பதிமூன்றாவது அத்தியாயத்தில் கொடுத்துள்ள பிரகாரம் நிர்ணயித்துச் சரி

படுத்தி, ஒழுங்குபடுத்திப் பலாபலன்களைச் சாமர்த்தியமாயும் திறமையாயும் யூகித்துச் சொல்லவேண்டும். [நாம் பரிசிலனை செய்யும் ஜாதகத்திலுள்ளகிரக அமைப்புகள் பல விதிகளில் பொருந்தி சரிபட்டு வருமாகில் அதாவது சிலகிரக அமைப்பு ஒரு விதியிலும், இன்னும் சிலகிரக அமைப்பு இன்னொரு விதியிலும், இனனும் சில கிரக அமைப்பு இன்னொரு விதியிலும் பொருந்திச் சரிப்பட்டு வருமாகில் இந்த மூன்று வித விதிகளில் சொல்லியுள்ள பலாபலன்களை ஒரு காகிதத்தில் குறித்துக்கொண்டு இப்பலாபலன்களை ஒன்றுதட்டி ஒழுங்குபடுத்தி மிகர பலாபலன்களை யூகித்துச் சொல்லத் துணியவேண்டும். இதுதான் ஜோதிடர்களுடைய திறமையாகும்; இதுதான் அவர்களுடைய பெயரைப் பிரகாசப் படுத்தி அவர்களுக்கும் ஜோதிட சாஸ்திரத்திற்கும் புகழையும் கீர்த்தியையும் நல்ல பெயரையும் உண்டாக்கும்.]

(4) இப்புத்தகத்தில் உபயோகப் படுத்தப்பட்டுள்ள விஷயங்கள் பல கிரந்தங்களில் இருந்து சேகரிக்கப்பட்டு இருக்கின்றன. இக் கிரந்தங்கள் மிகவும் அருமையானதால் இவைகள் எனக்குக் கிடைப்பதற்காகச் சில கனவான்களுடைய சகாயத்தையும், சில ஜோதிடர்களுடைய சகாயத்தையும் நான் கோரலாயிற்று. அவர்களில் எனக்கு முக்கியமாகவும், விசேஷமாகவும் கிரந்தங்கள் கிடைக்கும்படியாய் மிக்க அன்புடன் சகாயம் செய்தவர்கள் முறையே (1) கனம் பிரம்மஸ்ரீ R. கிருஷ்ணமாசாரியார் அவர்கள் B.A., B.L., ரிட்டயர்ட்டு அட்வகேட், மதராஸ். (2) கனம் பிரம்மஸ்ரீ டாக்டர் G. ஸ்ரீனிவாசமூர்த்தி அவர்கள் B.A., B.L., M.B. & C.M., Vaidya Ratna ஆனரெரி டைரெக்டர், அடையார் தியஸாபிகல் லைப்ரரி. (3) கனம் வித்தியாசாகர வித்தியாவாஸஸ்பதி பிரம்மஸ்ரீ P. P. சுப்பிரமண்ய சாஸ்திரியார் அவர்கள் B.A., (Cxon) M.A. Madras, சான்ஸ்கிரிட் புரொப்பெஸர், பிரசிடென்சி காலேஜ், கூரேடர், ஓரியண்டல் லைப்ரரி சென்னை. எனக்கு புத்தகங்கள் கிடைக்கும்படியாய் உதவி செய்ததற்காக இவர்களுக்கும், மேற்சொல்லிய மற்றுமவர்கட்கும் நான் என்னுடைய அன்பார்ந்த வந்தனத்தை மிகவும் வணக்கத்துடன் அளிக்கிறேன். இந்த புத்தகத்திற்குத் தேவையான விஷயங்கள் அடங்கிய புத்தகங்களைச் சேகரிப்பதிலும், எழுத்துப் பிரதி (காப்பி) எடுப்பதிலும், என் திரவியசகாயம் பெற்றுக்கொண்டு எனக்கு உதவி புரிந்தவர்களில் சிலருக்கும் என்னுடைய வந்தனத்தை அளிக்கிறேன். அடையார் தியாசாபிக்கல் லைப்பிரி

ஸ்டாப் (Staff) உத்தியோகஸ்தர்களுக்கும், ஓரியண்டல் லைப்ரரி ஸ்டாப் (Staff) உத்தியோகஸ்தர்களுக்கும், ஷை லைப்ரரிகளி லுள்ள புத்தகங்களை உபயோகஞ் செய்யும் விஷயத்தில் அவர்க ளுடைய அன்பிற்காக என்னுடைய வந்தனத்தை அளிக்கிறேன்.

(5) எழுத்துப்பிழை சொற்பிழை முதலியவைகளிருந்தால் அவைகளை மன்னித்து இந்தப் புத்தகத்திலுள்ள சாராம்சத்தை ஏற்றுக்கொண்டு இந்தப் புத்தகத்தை ஆமோதிக்கும்படியாய் இதை வாசிக்கும் பெரியோர்களையும் சிறியோர்களையும் மிகுந்த வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இப்புத்தகத்தைப் பலர் படித்துப் பலாபலன்களைச் சொல்ல ஆரம்பிப்பதற்கு முந்தி இப்புத்தகத்தில் கொடுத்துள்ள "பிழை திருத்தம்" என்பவை களில் உள்ள பிழைகளை முக்கியமாய்த் திருத்திக்கொள்ள வேணு மென்று கேட்டுக் கொள்ளுகின்றேன். மேலும் இப்புத்தகத்தை இன்னம் விருத்தி செய்வதற்காக யாராகிலும் தெரியப்படுத்தும் அபிப்பிராயங்களை மிகுந்த வணக்கத்துடன் அங்கிகாரஞ் செய்வ துடன் அவ்வபிப்பிராயங்களுக் கிணங்க விருத்திகளை அடுத்தப் பதிப்பில் செய்ய சித்தமாயிருங்கின்றேன்.

(6) சிலர் என் பெயரைச் சொல்லி அதனுல் பிரகாசிக்க வேணும் என்று கெட்ட எண்ணங்கொண்டு இருக்கின்முர்கள். அவர்கள் எனக்குத் தெரியாமல் தாங்கள் சி. ஜி. ராஜன் அவர்க ளிடம் ஜோதிடத்தில் பழகினவர்கள் என்று தெரிவித்துக்கொண் டால் அதை நம்பவேண்டாம். மேலும் அச்சிட்டு வெளியாகி வந்து விட்ட சி. ஜி. ராஜனுடைய ஜோதிட புத்தகங்கள் விஷய மாக அவைகள் இப்போது செலவாகிவிட்டன, கிடைக்காது என்று தெரிவித்தாலும் அதையும் நம்பவேண்டாம், அவைகள் எப்போதும் கீழ்கண்ட விலாசத்தில் தவக்கமின்றி கிடைக்கும் என் பதையும் தெரிந்துகொள்ளும்படி இதனுல் கோரப்படுகின்றது.

நெ. 7, வெங்கடேச மேஸ்திரி தெருவு,
கிருஷ்ணப்ப நாய்கன் குளம் அருகில்,
சௌகார்பேட்டை போஸ்டு,
சென்னை.
1941.

C. G. ராஜன் B.A.,

# விஷய அட்டவணை







உ

கடவுள் துணை.

# ஜாதக ராஜ "பாவ இருவாக்ஷி"

பாகம் நெ. 1 என்னும்

# ஆயுள் பாவம்.

மலர் 1.



## 1-வது அத்தியாயம்.

மானிட ஜென்மத்தின் ஆயுள் பலவிதமாகும்; அதாவது அற்பாயுள், மத்திமாயுள், பூர்ணாயுள், பரமாயுள் என்ற தீர்க்காயுள், சித்தாயுள் என்ற அபரிமிதமாயுள் என்று ஐந்து விதமாகும். இவற்றில் அற்பம், மத்திமம், பூரணம் பரமாயுள் என்கிற நான்கு விதம் தான் உலகில் பெரும்பாலும் பொருந்தத்தக்கது. சித்தாயுளானது பரம ரகசியமானது; இது மகரிஷிகளுக்கும் சித்தர்களுக்கும் தான் உரியது. மேற்படி, அற்ப, மத்திம, பூர்ணாயுள்களில் ஒவ்வொன்றும் மூன்று பிரிவு உள்ளது; அதாவது அற்பத்தில் அற்பம்; அற்பத்தில் மத்திமம், அற்பத்தில் பூரணம் எனவும், மத்திமத்திலற்பம், மத்திமத்தில் மத்திமம், மத்திமத்தில் பூரணம் எனவும், பூர்ணத்திலற்பம், பூரணத்தில் மத்திபம், பூரணத்தில் பூரணம் எனவும் ஆக ஒவ்வொன்றிலும் மூன்று பிரிவுகளாக மொத்தத்தில் ஒன்பது பிரிவுகளுள்ளன. இவை தவிர பாலாரிஷ்டம், சத்தியோரிஷ்டம், யோகாரிஷ்டம், அபமிருத்து, திரையக் கண்டாந்தங்களாகிய ராசிக்கண்டம்; திதிக் கண்டம், நக்ஷத்திரக் கண்டம் முதலிய கண்டகெண்டங்களுமுண்டு. இவைகளுமன்றி அகஸ்மாத் மரணம் என்ற திடீரென்ற மரணமும் உண்டு. ஜீவன்களாக ஜெனித்த பிறகு அஜ் ஜீவன்களுக்கு மரணம் என்பது திண்ணம். அது எக்காலத்திலும் நேரிடலாம். மனிதர்களின் ஆயுள் பரம தெய்வ ரகசியமாகும். அதை நிர்ணயிப்பது மிகவும் கஷ்டமான காரி

யம். அதை மிகுந்த விசாரணையாலும், ஆராய்ச்சியாலும், யுக்தி சாதுர்யத்தினுலும், சரியாகத் தீர்மானஞ் செய்யும் தீர்மானசக்தியாலும் நிர்ணயிக்கவேணும்.

# துவாதச லக்கினங்கள்.

## மேஷ லக்கின ஜாதகத்தின் ஆயுள் நிர்ணயம்.

1. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி சூரியன் விருச்சிக ராசியில் தனுசு நவாம்சத்தில் இருந்து மேற்படி சூரியன் ராகுடன் கூடி விருச்சிக ராசியிலிருந்து சனியாலிவர்கள் பார்க்கப்பட்டாலும், மேற்படி சனியுடன் செவ்வாய் கூடி யிருந்தாலும் இவர்களை எல்லோரையும் குரு பார்த்தால் வயது நார்பத்தைந்து (45) ஆகும். இதற்கே தனுசில் சந்திரனிருந்து சனியுடன் கூடிய செவ்வாயால் சந்திரன் பார்க்கப்பட்டால், பிறந்த 7-8-11-13 இந்த மாதங்களிலும், 4-ம் வயதிலும் ஆபத்துண்டாகும். மேலே சொல்லியபடி ராகு இருந்து அவர் திசை வரும்போது அல்லது அதற்கு முன்பே செவ்வாய் திசை முடிவின் திசைசந்தியில் அப மிருத்து பயமுண்டாகும். அக்காலத்தில் தப்பிப் பிழைத்தால் ராகு திசையில் தவறுமல் மரண மேற்படும்; வயது மேற்படி நாற்பத்தைந்து (45) தான் உண்டாகும்.

2. ஜென்ம லக்கினம் மேஷமாகி லக்கினுதிபதி மிதுன ராசியில் இருந்து, சனி லக்கினத்தில் இருந்தாலும் ஜாதகன் அறுபத்தெட்டு (68) அல்லது அறுபத்தென்பது (69) வயதடைவான். இதற்கே சந்திரன் விசாகம் 3-வது பாதத்திலிருந்தால் சூரிய தெசையின் முதலில் அல்லது சுக்கிர தெசையின் கடைசியில் தெசா சந்தியில் மரணம் நேரிடும்.

3. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி, மித்திர க்ஷேத்திரத்தில் சனி யிருந்து ஐந்தாமிடத்தில் செவ்வாயிருந்தாலும், லக்கினுதிபதி ஐந்திலிருக்க சனி 2-மிடத்திலிருந்தாலும் எழுபத்தைந்து (75) வயதுண்டாகும். இத்துடன் சந்திரன் சுவாதி 4-வது பாதத்தில் இருந்து துலாத்திலிருக்கும் சுக்கிர தெசை வந்தால் மேற்படி தெசை சனி புக்தியில் நிரியாணம் நேரிடும்.

4. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கினுதிபதி 6-ல் சுக்கிரனுடன் கூடி யிருந்து, 8-மிடத்தில் சனி, ரவி, புதனுடன் இருந்

தால் அறுபத்தெட்டு (68) வயது உண்டாகும். இத்துடன் ரோகிணி 2-ல் சந்திரனிருந்தால் மேற்படி புதனுடைய திசையில் கிரியாணமுண்டாகும். ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கினத்தில் சந்திரன், சுக்கிரன் கூடி யிருந்து லக்கினதிபதி 10-ல் இருந்து இவர்களைப் பார்த்தாலும் 11-ல் ராகு இருந்தால் தீர்க்காயுளாக எழுபத்தைந்து (75) வயதுண்டாகும். மேற்படி சந்திரன் பரணி 4-வது பாதத்தில் இருந்தால் பாலியத்திலும் அறுபத்திரண்டு (62) வயதிலும் அப மிருத்து பயமுண்டாகும். அக்காலங்களில் சாந்தி செய்தால் மேற்படி வயது பூர்ணமாகும்.

5. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஒராமாதி உச்சத்திலும் குரு 3-லும், இருந்து சந்திரன் கேந்திர கோணங்களிலிருந்தாலும் ஐம்பத்திமூன்று .(53) வயதுண்டாகும். மேற்படி சந்திரன் பரணி 1-வது பாதத்திலிருந்தால் 2-மிடத்திலுள்ள ராகு தெசை சுக்கிர புத்தியில் மேபடி வயதில் பங்குனி மாதத்தில் சுக்கில பக்ஷ ஏகாதசியில் வெள்ளிக்கிழமை விடியற்காலையில் கிரியாணமுண்டாகும்.

6. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஒராமாதி 4-லும் சுக்கிரன் 7-லுமிருந்தால் அறுபத்தைந்து (65) வயதுண்டாகும்.

7. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி எட்டாம் பாவாதிபதியும் லக்கினதிபதியும ஸ்திர * (சிம்ம) ராசியிலிருந்து பன்னிரண்டாமாதி சர * (மகர) ராசியில் இருந்தால் வயது அறுபத்தைந்து (65) ஆகும்.

* குறிப்பு :—சர ராசிகள் நான்கு ஆகும். ஸ்திர ராசிகள் நான்கு ஆகும். உபய ராசிகள் நான்கு ஆகும். சர ராசி என்று பொதுவாய்ச் சொல்லிப் பிறகு சர ராசிகளில் ஒன்றைக் குறிப்பிட "சர (மகர) ராசியில்" என்று எழுதினல் மகர ராசியாக சர ராசியில் குறித்த பாவாதிபதி இருந்தால் குறித்த வயதாகிய அறுபத்தைத்து வயது பெரும்பாலும் தவறுமல் ஏற்படும் என்றும், இதர சர ராசிகளாகிய மேஷம், கடகம், துலாம் இந்த சர ராசிகளில் மேலே குறிப்பிட்ட பாவாதிபதி இருந்தால் வயது அறுபத்தைந்திற்குக் கொஞ்சம் ஏற்றக் குறைச்சலாக ஏற்படும் என்றுணறியவும். இந்த அர்த்தத்தைத் தெரிவிக்கும் பொருட்டே "சர (மகர) ராசியில்" என்று எழுதி இருக்கிறது. இவ்விதமாகவே இந்த அயிட்டத்தில் எழுதியுள்ள "ஸ்திர (சிம்ம) ராசியிலிருந்து"

என்று எழுதி இருப்பது ஸ்திர ராசியாகிய சிம்மத்திலிருந்தால் வயது அறுபத்தைந்து பெரும்பாலும் தவறாமல் ஏற்படும் என்றும் இதர ஸ்திர ராசிகளாகிய ரிஷபம், விருச்சிகம், கும்பம் ஆகிய இந்த ராசிகளில் மேலே குறிப்பிட்ட பாவாதிபதி இருந்தால் வயது அறுபத்தைந்திற்குக் கொஞ்சம் ஏற்றக் குறைச்சலாக ஏற்படும் என்று அறியவும். இவ்விதமாகவே உபய ராசிக்கும் அறிந்து சொள்ளவும். நமக்குக் கிடைத்த நாடிக் கிரந்தங்களில் உதாரண ஜாதகங்களைக் கொடுத்து அந்த ஜாதகத்தின் பலனைச் சொல்லு கையில் இந்த உதாரண ஜாதகத்தில் மேற்சொல்லிய பாவாதிபதி இருக்கின்ற ராசியைத் தெரிவிக்கும்பொருட்டு "சர (மகர) ராசி" என்றும் "ஸ்திர (சிம்ம) ராசி" என்றும் இப் புத்தகத்தில் நாம் எழுதி இருக்கிறோம். ஆனால் இங்கு கொடுத்துள்ள வயது இந்த உதாரண ஜாதகத்தின் கிரக நிலைக்காக நாடிகளில் பிரத்தியேகமாக வயதைத் தெரிவித்து நாடிகளில் உபயோகப்படுத்தியுள்ள பொது விதிகளில் வருகின்ற சர ராசி, ஸ்திர ராசி, உபய ராசி என்று பொதுவாக ராசிகளையும் சொல்லி இருப்பதாலும், ஒரு இனத்தைச் சேர்ந்த நான்கு ராசிகளில் ஒன்று ஒரே கிரகத்திற்கு ஆட்சி யாகவும் மற்றொன்று நீச்சமாகவும், மற்றொன்று உச்சமாகவும் இவ்வித வித்தியாசதுடன் நேரக்கூடுமாகையால் ஒரு இனத்தைச் சேர்ந்த பிராக்கெட்டிற்குள்ள ராசி தவிற இதற அதே இன ராசி களில் கிரகம் இருந்தால் குறிப்பிட்ட வயதில் உச்சம், நீச்சம், ஆட்சி முதலியவை அனுசரித்து கொஞ்சம் வித்தியாசம் ஏற் படும் என்று அறியவும். உதாரணமாக மேஷத்திற்குப் பன்னி ரண்டாம் பாவாதிபதி குருவாக வந்து குரு மகரத்தில் நீச்சமாக விருப்பதற்கும் கடகத்தில் உச்சமாக விருப்பதற்கும் பலன் வித்தி யாசப்படும். மேஷம், கடகம், துலாம், மகரம் இவைகள் சரராசி இனமாகிய ஒரே இனத்தைச் சேர்ந்ததாகும்.

குறிப்பு (2):—லக்கின பாவாதிபதியும் எட்டாம் பாவாதிபதி யும் பாவச்சக்கிர ரீதியாய் ஒரே கிரகமாயும் அல்லது வெவ்வேறு கிரகமாயும் நேரிடக்கூடும். என்னுடைய ஜாதக கணிதம் ஓராம் பாகத்தைப் பார்க்கவும்.

குறிப்பு (3):—மேலும் இந்தப் புத்தகத்தில் கொடுத்துள்ள ஒவ்வொரு பாவத்தின் விதிகளையும் படிப்பதுமன்றி இப் புத்தகத் தில் லக்கின வாரியாய் எழுதியது போலவே லக்கின வாரியாய் அச்சிட்டுள்ள எனது புத்தகங்களாகிய (1) ஜாதக கணிதம் இரண்

டாம் பாகமாகிய ஜாதக பலா பலன்கள் நிர்ணயம் என்ற புத்தகத்திலும் (2) ஜாதக கணிதம் மூன்றாம் பாகமாகிய ஜாதக ராஜ மனோரஞ்சிதம்—மலர் 1 என்ற புத்தகத்திலும் (3) ஜாதக கணிதம் நான்காம் பாகமாகிய ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் 2 என்ற புத்தகத்திலும் ஆயுள் முதலிய அந்தந்தப் பாவங்களின் விஷயமாக நாடிக் கிரந்தங்களிலுருந்து எடுத்து கொடுத்துள்ள விதிகளையும் படிப்பது நலந்தரும் என்று அறியவும்.

குறிப்பு(4):—இந்த ஜாதக ராஜ "பாவ விருவாக்ஷி" என்ற புத்தகமும் மேலே 3-வது குறிப்பில் சொல்லியுள்ள மூன்று புத்தகங்களும் ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாகும்.

8. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி, எட்டாம் பாவாதிபதி இவர்கள் சர (துலா) ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலிருந்தால் அறுபத்தேழு (67) வயதுண்டாகும்.

9. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவதிபதி சர (துலா) ராசியிலுமிருந்தால் அறுபத்தைந்து (65) வயதுண்டாகும்.

10. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதியும் எட்டாம் பாவாதிபதியும் ஸ்திர (சிம்ம) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் இருந்தால் வயது மத்திமத்தில் பூரணமாகும்; அதாவது வயது அறுபத்தைந்து (65) ஆகும். அறுபதாவது வயதில் அசுகம் உண்டாகி அது சாந்தி மூலம் நிவர்த்தியாகி சுகம் உ ண்டாகும்.

11. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்களிருவரும் உபய (கன்னி) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலுமிருந்தால் அறுபத்தேழு (67)வயதுண்டாகும்.

12. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதியும் எட்டாம் பாவாதிபதியும் சர (துலா) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலிருந்தால வயது அறுபத்தைந்து (65) உண்டாகும். அறுபதில் தேக பீடையும், பிறகு சாந்தி செய்வதால் சுகமும் உண்டாகும்.

13. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாவது பாவாதிபதி இவர்கள் ஸ்திர (ரிஷப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதை யடைவான். அறுபதாவது வயதில் ஜாதகன் தேக பீடையை அடைவான்; பிறகு சாந்தி செய்யச் சுகமுண்டாகும்.

14. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் ஸ்திர (கும்ப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னி) ராசியிலுமிருந்தால் ஜாதகனுக்கு எழுபத்தொன்று (71) வயதுண்டாகும்.

15. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் சர (துலா) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலுமிருந்தால் ஜாதகனுக்கு வயது எழுபத்தொன்று (71) உண்டாகும்.

16. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் உபய (மீன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலுமிருந்தால் வயது ஜாதகனுக்கு எழுபத்திரண்டு (72) ஆகும்.

17. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி பன்னிரண்டாம் பாவாதிபதி இவர்கள் ஸ்திர (சிம்ம) ராசியிலிருந்தால் ஜாதகனுக்கு எழுபது வயதுண்டாகும்.

18. ஜென்ம லக்கின ம்மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதடைவான்.

19. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் (மிதுன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலு மிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதடைவான்.

20. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் ஸ்திர (சிம்ம) ராசியிலும் பன்னி

ரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்திநான்கு (64) வயதடைவான்.

21. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் சர (கடக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலு மிருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று வயதடைவான்.

22. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் ஸ்திர (ரிஷப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலு மிருந்தால் வயது அறுபத்தேழு (67) ஆகும்.

23. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் சர (மகர) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னி) ராசியிலு மிருந்தால் ஜாதகன் அறுபத்தாறு (66) வயதடைவான்.

24. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் உபய (கன்னி) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ரா சியிலும் இருந்தால் ஜாதகன் ஐம்பத்தேழு வயதுடையவனுன்.

25. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் ஸ்திர (சிம்ம) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ரரசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தொன்று (71) வயதடைவான்.

26. ஜென்ம லக்கினம் மேஷமாகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் உபய (மிதுன) ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபது (70) வயதடைவான்.

27. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் ஸ்திர (கும்ப) ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தெட்டு (68) வயதடைவான்.

28. ஜென்ம லக்கினம் வேஷம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் உபய (மீன) ராசியிலும் பன்னிரண்டாம பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் இருந்தால் ஜாதகன் ஐம்பத்தைந்து (55) வயதடைவான்; ஐம்பத்தாறு (56) என்றும் சொல்லி உள்ளது.

29. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதியும் எட்டாம் பாவாதிபதியும் ஸ்திர (ரிஷப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலு மிருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதடைவான்.

30. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஜென்ம லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் உபய (தனுசு) ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவதிபதி சர (துலா) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்தொன்று (71) வயதடைவான்.

31. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதியும் எட்டாம் பாவாதிபதியும் சர (துலா) ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதடைவான்.

32. ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மீன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலுமிருந்தால் ஜாதகனுக்கு வயது எழுபத்திரண்டு (72) ஆகும்.

குறிப்பு (1):—அற்பாயுள் ஒன்று முதல் முப்பத்திர்ண்டு வரையிலும், மத்திமாயுள் முப்பத்திமூன்று முதல் அறுபத்தாறு வரையிலும், பூர்ணயுள் அறுபத்தேழு முதல் எழுபத்தைந்து வரையிலும், பரமாயுள் என்ற தீர்க்காயுள் என்பது எழுபத்தாறு முதல் நூற்றிருபது வரையிலும் பெரும்பாலும் ஆகும். இது இந்த புத்தகத்திற்கு உபயோகப்படுத்தப்பட்ட மதம் அல்லது கொள்கை என்று அறியவும்.

குறிப்பு (2):—இன்னும் அதிக விதிகள் 2-வது மலரில் கொடுக்கப்படும்.



# 2-வது அத்தியாயம்.



## ரிஷப லங்கின ஜாதகத்தின் ஆயுள் நிர்ணயம்.

1. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கினத்தின் ஆரூடாதிபதி உச்சத்திலிருந்தாலும் செவ்வாய் எட்டாம் பாவபத்தின் ஆரூடாதிபதியானல் ஆயுளின் விருத்தி உண்டாகும். இந்தக் கிரஹயோகத்திற்கே ஹஸ்த நக்ஷத்திரம் ஒராவது பாதத்தில் சந்திரனிருந்தால் எழுபத்தைந்தாவது (75) வயதில் புத திசையில் மரண முண்டாகும்.

குறிப்பு:—ஆரூடம் அல்லது லக்கின ஆரூடம் அல்லது ஆரூட லக்கினம் அல்லது பத லக்கினம் என்பது லக்கினதிபதி லக்கினத்தி லிருந்து எத்தனையாவது வீட்டிலிருக்கின்ருரோ அத்தனை வீடு லக்கினதிபதி இருக்கும் வீட்டில் இருந்து எண்ண வருகின்ற வீடே ஆகும். உதாரணமாகத் தனுசு லக்கினத்திற்கு ஐந்தாவது வீடாகிய மேஷத்தில் குரு இருந்தால் ஆரூட லக்கினம் என்பது சிம்மம் ஆகும். ஏனென்ருல் லக்கினதிபதியாகிய குரு மேஷத்திலிருப்பதால் லக்கினம் முதல் மேஷம் வரையிலும் எண்ண ஐந்து வீடாகும். லக்கினதிபதியாகிய குரு இருக்கும் வீடாகிய மேஷத்திலிருந்து மேலே எண்ணிவந்த ஐந்து வீட்டை எண்ண சிம்மம் வரும். ஆகையால் சிம்மம்தான் ஆரூட லக்கினமாகும். லக்கினத்திற்கு அதாவது லக்கினபாவத்திற்கு ஆரூடம் இருப்பது போலவே ஒவ்வொரு பாவத்திற்கும் ஆரூடம் உண்டு; அதாவது தனரூடம, சகோதர ஆரூடம், மாதுராரூடம், புத்திராரூடம், களத்திராரூடம், பிதுராரூடம் போன்ற முதலிய ஆரூடங்கள் உண்டு. ஒரு பாவத்திற்கு ஆரூடம் அறிய வேண்டுமானல் அந்த பாவத்தையே லக்கினமாகப் பாவித்து லக்கின ஆரூடம் கண்டு பிடிப்பது போல அந்த பாவத்திற்கு கண்டுபிடிக்க வருகின்ற வீடே அந்த பாகத்தின் ஆரூடமாகும். உதாரணமாகத் தனுசு லக்கின ஜாதகத்தில் குரு மேஷத்திலிருந்தால், இதற்கு மாதுரு ஆரூடம் கணிப்போம். தனுசு லக்கினத்திற்கு மாதுருபாவம் மீனம் ஆகும். ஆகையால் மீனத்தை லக்கினமாகப் பாவிக்கவும். இப்படி பாவிக்க இந்த மீன லக்கினதிபதியாகிய குரு மேஷத்தில் அதாவது மீனத்திலிருந்து இரண்டாவது வீட்டி

லிருக்கின்றார். ஆகையால் மேஷத்திலிருந்து இரண்டு வீடு எண்ண ரிஷபம் வரும். ஆகையால் இந்த ரிஷபமே மாதுரு ஆரூடமாகும். தனுசுலக்கின ஜாதகத்தில் சூரியன் மகரத்தில் இருந்தால் இந்த ஜாதகத்திற்குப் பிதுராரூடம் அறிவோம். பிதுர் ஸ்தானம் தனுசுலிருந்து ஒன்பதாவது வீடாகிய சிம்மம் ஆகும். சிம்மத்திற்கு அதிபதியாகிய சூரியன் மகரத்தில் அதாவது சிம் மத்தில் இருந்து ஆறுவது வீட்டில் இருக்கிறார். ஆகையால் இந்த ஆறு வீடு மகரத்திலிருந்து எண்ண வருகின்ற மிதுனமே பிதுரு ஆரூடமாகும். இவ்விதமாகவே ஒவ்வொரு பாவாத்திற்கும் ஆரூடம் கண்டறியவும்.

2. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி புதன் லக்கினத்தின் ஆரு டாதிபதியாகவும், குரு அஷ்டமத்தின் ஆரூடாதிபதியாகிச் சந் திரன் புனர்பூசம் ஒராம் பாதத்திலிருந்தாலும், அல்லது ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகிச் சுக்கிரன் சர ராசியி (மகரத்தி) லும் குரு தனுசிலுமிருந்து ஹோரா லக்கினம் சரமானாலும், சந்திரன் புனர் பூசம் ஒராவது பாதத்திலுமிருந்தாலும் ஐம்பத்தாறில்(56)-ல் அல் லது அறுபதில் (60) தேக பாதையும் உண்டாகித் தீர்க்காயுள் யோகமாகி சுக்கிர தெசையில் புத புத்தியில் கிரியாண முண் டாகும்.

3. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி குரு லக்கினத்தில் வர்க் கோத்தம மடைந்து ராகுவுடன் கூடி இருந்தால் ஜாதகனுடைய ஆயுளானது அற்பமாகும்.

4. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கினாதிபதி லக்கினத்தி லும் எட்டாம் ராசி நாதன் 10-லுமிருந்தால் எழுபத்தொன்று (71) வயது உண்டாகும். இதற்கே இத்துடன் அசுவனி 2-ம் பாதத்தில் சந்திரனிருந்தால் மேற்படி குரு தெசையில் மரணம் நேரிடும்.

5. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கினாதிபதி 5-ல் இருக் கும்போது சனி, குருவுடன் கூடி 4-ல் இருந்தால் அறுபத்தாறு (66) வயதுண்டாகும.

6. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கினாதிபதி உச்சத்தி லும் அவருக்குத் தசம கேந்திரத்தில் குருவுமிருந்தாலும் எட்டா மாதிபதி கேந்திரத்திலிருந்து [illegible] கூடி இருந்தாலும்

சந்திரன் பூசம் 3-வது பாதத்திலிருந்து சனியுடன் கூடி இருந்தாலும் ஐம்பத்தொன்பது (59) வருஷம் அல்லது அறுபது (60) வருஷம் வரை வயது உண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் கும்பத்தில் செவ்வாய் இருந்தால் செவ்வாய் தெசை சுய புக்தியில் அபமிருத்து உண்டாகும்.

7. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கினாதிபதி 2-லும் அஷ்டமாதிபதி 10-வது கேந்திரத்திலும் சனி 11-லுமிருந்தால் அறுபத்தேழு (67) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் அசுவனி 2-வது பாதத்தில் சந்திரனிருந்தால் 19 அல்லது 22, 36, 42, 56, 60 இந்த வயதுகளில் பீடையும் அபமிருத்து பயமுமுண்டாகும். குரு தெசை சுய புத்தியில் நிரியாண முண்டாகும்.

8. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கினாதிபதி மேஷத்திலும் எட்டாமாதிபதி உச்சத்திலும் பத்தாமாதி 10-லும் இருந்தால் மத்தியாயுளாக ஐம்பத்தாறு (56) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே உத்திராடம் ஓராவது பாதத்தில் சந்திரன் இருந்தால் குரு தெசையின் முடிவில் மீனத்திரிகோண மாதத்தில் வளர் பிறையில் திங்கள்கிழமையில் சதுர்த்தசியில் மூல ரோகத்தினால் மரிப்பான்.

9. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி, லக்கினாதிபதி கடகத்திலும் எட்டாம் பாவாதிபதி 11-லுமிருந்து சந்திரன் கேந்திர திரிகோணங்களிலிருந்தாலும், அல்லது சந்திரன் சித்திரை ஓராவது பாதத்திலிருந்தாலும் அறுபத்தெட்டு (68)வயதுண்டாகும்.

10. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி இவர்கள் உபய (தனுசு) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலு மிருந்தால் ஜாதகன் ஐம்பத்தேழு (57) வயதடைவான்.

11. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மீன) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசிலும் இருந்தால் ஜாதகனுக்கு வயது அறுபத்தேழு (67) ஆகும்.

12. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலு மிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதடைவன்,

13. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலுமிருந்தால் அறுபத்தேழு (67) வயது ஜாதகனுக்கு உண்டாகும்.

14. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதடைவான்.

15. ஜென்ம லக்கினம் ரிஷ்பமாகி லக்கின பாவாதிபதி ஸ்திர (குப்ப) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் (60) வயதடைவான்.

16. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதடைவான்.

17. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் இருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதடைவான்.

18. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதி சர (கடக) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்திநான்கு (64) வயதடைவான்.

19. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதி பன்னிரண்டாம் பாவாதிபதி இவர்கள் சர (மேஷ) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியில் இருந்தால் ஜாதகன் அறுபத்திநான்கு (64) வயதடைவான்.

20. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி சர (கடக) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், பன்னிரண்டாம் பாவதிபதி உபய (கன்னியா) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தொன்று (71) வயதடைவான்.

21. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (கன்னி) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராசயிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதடைவான் வேறு சிலர் மதம் பிரகாரம் வயது எழுபத்தொன்று (71) ஆகும்.

22. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தேழு (77) வயதடைவான்.

23. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (தனுசு) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தெட்டு (68) வயதடைவான்.

24. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்திநான்கு (64) வயதடைவான்.

25. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதடைவான்.

26. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதடைவான்.

27. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் இருந்தால் ஜாதகன் அறுபத்திமூன்று (63) வயதடைவான்.

28. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மீன) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலு மிருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயது அடைவான்.

29. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலு மிருந்தால் ஜாதகன் எழுபத்தொன்று (71) வயதடைவான்.

30. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலு மிருந்தால் ஜாதகன் எழுபத்தேழு (77) வயதடைவான்.

31. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராகியிலும எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலு மிருந்தால் ஜாதகன் ஐம்பத்தாறு (56) வயதடைவான்.

32. ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலு மிருந்தால் ஜாதகன் எழுபத்மேழு (77) வயதுடையவனுவான்.

33. ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி பன்னிரண்டாம் பாவாதிபதி இவர்கள் உபய (மீன) ராசியிலு மிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதடைவான்.

34; ஜென்ம லக்கினம் ரிஷபமாகி லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலு மிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதடைவான்.

குறிப்பு:—இன்னும் அதிக விதிகள் 2-வது மலரில் கொடுக்கப்படும்.



# 3-வது அத்தியாயம்.



## மிதுன லக்கின ஜாதகத்தின் ஆயுள் நிர்ணயம்.

1. ஜென்ம லங்கினம் மிதுனமாகி லக்கினத்தில் சூரியன் மகர நவாம்சதிலிருந்தால் ஜாதகன் அற்பாயுளடைவான்.

2. ஜென்ம லக்கினம் மிதுனமாகி லக்கினதிபதி உச்சத்தி லும் அஷ்டமாதிபதி 8-லும் இருந்து குரு கேந்திரதிரிகோணத்தில் இருந்தால் அறுபத்தேழு (67) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே 4-ல் குருவும் மீனத்தில் சந்திரன் உத்திராடத்தி யிலும் இருந்தால் மேற்படி அறுபத்தேழு (67) வயது சம்பூர்ண மாகும்.

3. ஜென்ம லச்கினம் மிதுனம் ஆகி ஒன்று எட்டாம் பாவங் களின் ஆரூடங்களுக்குக் குரு அதிபதியாகி லக்கினம் குருவால் பார்க்கப்பட்டாலும், சந்திரன் கேட்டை ஓராவது பாதத்தி லிருந்தாலும் புதன் நீச்ச ராசியிலிருந்தாலும் எழுபத்திரண்டு (72) வயதுண்டாகி துலா ராகு தெசை குரு புக்தியில் செவ்வாயின் அந்தரத்தில் நிரியாணம் நேரிடும்.

4. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கினதிபதி 12-லும் அஷ்டமாதிபதி 2-ல் உச்ச குருவுடனும் கூடி இருந்தால் அறுத் தாறு (66) வயதுண்டாகும். இதற்கே மூலம் ஓராவது பாதத்தில் சந்திரனிருந்தால் ஜாதகன் மீன ராகு தெசை முடிவில் மரணத்தை அறுபத்தாறு (66) வயதில் அடைவான்.

5. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி திருவாதிரை 3-வது பாதத்தில் ஜனித்தவன் உச்சனாகி இருக்கப்பட்ட சுக்கிரனுடைய தெசை வந்தால் சுக்கிரனுடைய தெசையில் மறிப்பான்.

6. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கினத்தில் குருவும், புதனும் கூடி இருந்து சனி 11-ல் இருந்தால் ஜாதகர் அறுபத் தெட்டு (68) வயதடைவார். இந்தக் கிரக யோகத்திற்கே சந்திரன் உத்திராடம் ஓராவது பாதத்தில் இருந்தால் சனி தெசை சந்திர புக்தியில் தை மாதத்தில் திங்கள்கிழமையில் துவாதசியில் தேய் பிறையில் அதிசாரத்தினால் ஜாதகர் நிரியாணமடைவார்.

7. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கினாதிபதி 10-வது கேந்திரத்திலும் எட்டாமாதி 9-ல் சுப க்ஷேத்திரத்திலும் இருந்து, குரு சந்திரர் கூடி 7-லுமிருந்தால் எழுபது (70) வயது ஆயுளாகும். மேற்படி சந்திரன் மூலம் ஒராவது பாதத்திலிருந்தால் 20, 32, 44, 50 இந்த வயதுகளில் பீடையும் 60-ல் அபமிருத்துவும் நேரிடும். அக்காலங்களில் சாந்தி செய்வதால் சுகமேற்பட்டு மேற்படி எழுபதில் (70)-தில் மரணம் நேரிடும்.

8. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கினாதிபதி ஒன்றிலும் எட்டாமாதி 12-லுமிருந்து குரு 8-லுமிருந்தால் அறுபத்தேழு (67) வயது உண்டாகும்.

9. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னி) ராசியிலுமிருந்தால் ஜாதகன் ஐம்பத்தைந்து (55) வயதடைவான்.

10. ஜென்ம லக்கினம் மிதுனமாகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (கடக) ராசயிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் (67) வயதுடையவனாவான்.

11. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (கடக) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும் இருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதுடையவனாவான்.

12. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் இருந்தால் ஜாதகன் அறுபத்திரண்டு (62) வயதுடையவனாவான்.

13. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் எட்டாவது பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதிசர (துலா) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதடைவான்.

14. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மீன) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலுமிருந்தால் ஜாதகன் வயது அறுபத்தி மூன்று (63) அடைவான்.

15. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் எட்டாம் பாவாதிப சர (மகர) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதடைவான்.

16. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்து எட்டாவது பாவாதிபதி ஸ்திர (சிம்மம்) ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலிருந்தால் ஜாதகன் ஐம்பத்தைந்து (55) வயதுடையவனுவான்.

17. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதடைவான்.

18. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலு மிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதடையவனுவான்.

19. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் எட்டாம் பாவாதிபதியும், பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மீன) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதடைவான்.

20. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலிருந்தால் ஜாதகன் தீர்க்காயுள் என்ற பரமாயுளை அடைவான்—38-வது அயிட்டத்தைப் பார்க்கவும்.

21. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியி

லும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதடைவான்.

22. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதுடையவனுவான்.

23. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும் எட்டு, பன்னிரண்டு இவற்றிற்குறிய பாவாதிபதிகள் சர (மகர) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதடைவான்.

24. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராகியிலும்ருந்தால் ஜாதகன் ஐம்பத்தொன்பது (59) வயதடைவான்.

25. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (கன்னி) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதடைவான்.

26. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (கடக) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதடைவான்.

27. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் ஐம்பத்தாறு (56) வயதுடையவனுவான்.

28. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும் எட்டு, பன்னிரண்டுக்குடைய பாவாதிபதிகள் ஸ்திர (கும்ப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதடைவான்.

29. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மகர) ராசி

யிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலு மிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதடைவான்.

30. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதடைவான்.

31. ஜென்ம லக்கினம் மிதுன ஆகி லக்கின பாவாதிபதி உபய (கன்னி) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ரா்சியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலு மிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதடைவான்.

32. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலிருந்தால் ஜாதகன் மத்திம வயதுடையவன். ஐம்பத்தேழு (57) க்குக் கொஞ்சம் வித்தியாசமுள்ள வயதை அடைவான்.

33. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி உபய (கன்னி) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலு மிருந்தால் ஜாதகன் எழுபத்தேழு (77) வயதுடையவனுவான்.

34. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (கன்னி) ராசியில் இருந்து எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதடைவான்.

35. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி பன்னிரண்டாம் பாவாதிபதி ஆகிய மூன்று பாவாதிபதிகளும் ஸ்திர (சிம்ம) ராசியிலிருந்தால் ஜாதகன் ஐம்பத்தேழு (57) வயதுடையவனுவான்.

36. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (மேஷ)ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தாறு (76) வயதடைவான்.

37. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி லக்கினத்திற்கு எட்டாம் பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (துலா) ராசியிலிருந்து லக்கின பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனாவான்.

38. ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி, லக்கினபாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலுமிருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதடைவான்.

39. ஜென்ம லக்கினாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் ஸ்திர ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர ராசியிலிருந்தால் ஜாதகனுக்குத் தீர்க்காயுளாகிய எண்பத்தைந்து (85) வயதுண்டாகும்.

குறிப்பு :—இன்னும் அதிக விதிகள் 2-வது மலரில் கொடுக்கப்படும்.

## 4-வது அத்தியாயம்.



### கடக லக்கின ஜாதகத்தின் ஆயுள் நிர்ணயம்.

1. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கின ஆரூடாதிபதி ஒன்பதிலும் சுக்கிரன் ரந்திர ஆரூடாதிபதியாகி 5-லும் இருந்தால் ஆயுள் பூர்ணமாக எழுபத்திமூன்று (73) வயதுண்டாகும்.

குறிப்பு :—ரந்திரம் என்பது எட்டாம் பாவம்.

2. ஜென்ம லக்கினம் கடகமாகி லக்கினாதிபதி 9-லும் அஷ்டமாதிபதி 12-லும் குரு 11-லுமிருந்தால் அறுபத்திரண்டு (62) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்தில் சந்திரன் ரேவதி 3-ல் இருந்தால் செவ்வாய் தெசையின் கடைசியில் மரணமுண்டாகும்; சிலர் மதம் பிரகாரம் எழுபத்தேழு (77) வயதுண்டாகும்.

3. ஜென்ம லக்கினம் கடகமாகி லக்கினாதிபதி நின்ற ராசி நாதனுச்சத்தில் இருந்து அஷ்டமாதிபதி 8-லும் லக்கினத்தில்

குருவுமிருந்தால் எண்பது (80) வயதுண்டாகும். இந்த கிரக யோகத்திற்கே லக்கினாதிபதியாகிய சந்திரன் உத்திரம் 3-வது பாவத்தில் இருந்தால் புதன் தெசையில் எழுபத்தைந்து (75) வயதில் கண்டமுண்டாகும்; அக்காலம் தப்பிப் பிழைத்திருந்தால் எண்பது (80) வயதில் மரணமுண்டாகும்.

4. ஜென்ம லக்கினம் கடகமாகி ஜென்ம லக்கினாதிபதி உபய ராசியில் (தனுசில்) இருந்து எட்டாம்மாதிபதி சர (துலா) ராசியில் இருந்தால் ஹோரா லக்கினம் ஸ்திரமாகிப் பிறந்தவர்களுக்கு மத்திய பூர்ணாயுளாக அறுபத்தாறு (66) வயதுண்டாகும்; மேற்படி சந்திரன் பூராடம் 2-வது பாதத்திலிருந்தால் தெசையில் கடைசியில் நிரியாண முண்டாகும். எட்டாமாதிபதியாகிய சனி ரிஷப நவாம்சத்தில் மூலம் 2-வது பாதத்தி லிருந்தாலும் இதே பலனுண்டாகும்.

5. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கினாதிபதி 4-ல் இருந்து 4-க்குடையவன் 11-ல் குருவுடன் கூடி யிருந்தால் லக்கினத்திற்கு 3-ல் சனியும் சனிக்கு 9-ல் குருவு மிருந்தால் ஜாதகன் எழுபத்தொன்று (71) வயதடையவனாவான்; ஷை சந்திரன் சித்திரை 4-வது பாதத்திலிருந்தால் புத தெசை சனி புக்தியில் மரிப்பான்.

6. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கினாதிபதி எட்டாமிடத்திலிருந்து எட்டாம் மாதிதிபதி தன்னுச்சத்திலிருக்க 10 மாதிபதி குருவுடன் கூடி இருந்தால் ஐம்பத்தொன்பது (59) அல்லது (60) வயதுண்டாகும்; ஷை சந்திரன் அவிட்டம் 3-வது பாதத்திலிருந்தால் புத தெசையில் மேஷ திரிகோண மாதங்களில் சுக்கில பக்ஷத்தில் வெள்ளிக் கிழமையில் மாலையில் நிரியாணம் நேரிடும்.

7. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி 10-ல் சந்திரன் சுக்கிரனுடன் கூடி லக்கினத்திற்கு 3-ல் குருவிருந்தாலும் மேஷத்தில் சந்திரன் அசுவனி 2-லும், 12-ல் சனியுமிருந்தாலும் ஜென்ம லக்கினம் சரமும் ஹோரா லக்கினம் ஸ்திரமுமாகி 12-ல் சனியுமிருந்தாலும் அறுபத்தொன்பது (69)ல் மரணம் நேரிடும்.

8. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி பூராடத்தில் சந்திரனிருந்து எட்டாமாதிபதி உச்சத்திலும் இருந்தால் அறுபத்தொன்பது (69) அல்லது (70) வயதுண்டாகும்.

9. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கினாதிபதி 3-லும் அஷ்டமாதிபதி லக்கினத்திலும் சுக்கிரன் கேந்திர திரிகோணத்தி லுமிருந்தால் (4-ல் ருந்தாதாலும்) அறுபத்தைந்து (65) வய துண்டாகும்; ஷெ சந்திரன் உத்திரம் 2-வது பாதத்தில் இருந் தால் மேற்படி சனி தெசையில் பிற்பாதியில் மேற்படி வயதில் சிம்ம மாதம் வளர்பிறையில் ஏகாதசியில் ஞாயற்றுக்கிழமை நடு இரவுக்கு மேல் மரணம் சம்பவிக்கும்.

10. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி எட்டாமாதிபதி 9-லிருந்து லக்கினாதிபதி சுக்கிரனால் பார்க்கப்பட்டாலும், லக்கி னத்திற்குக் கேந்திரத்தில் (10-ல்) குருவானவர் செவ்வாய் புத னிவர்களுடன் கூடியிருந்தாலும், கேட்டை ஒராவது பாதத்தில் பெரும்பாலும் பின் பாதியில் ஷெ சந்திரனிருந்தால் அறுபத் தைந்து (65) வயதேற்படும். 26, 32, 42 இந்த வயதுகளில் அப மிருத்து வியாதி, பீடை முதலியன உண்டாகி பிறகு சுகமுண் டாகும். அதாவது 26-ல் வியாகூலம் 32-ல் தேக பீடையும் 42-ல் சன்னிபாத ஜுரத்தால் மிக்க பயமும் ஆகிய இவை உண்டாகி மேலும் 50-ல் மேகபீடை, 60-ல் வாயுபீடையுமுண்டாகி அறுபத் தைந்தா (65)-வது வயதில் 7-வது தாரா தெசையில் சுய புத்தி யில் அதாவது ராகு தெசையில் சுய புத்தியில் மாசி மாதத்தில் சுக்கில பக்ஷத்தில் அஷ்டமியில் ஞாயற்றுக்கிழமையில் அதிசார பீடையால் மரிப்பார். அந்திய காலத்தில் ஞானமுண்டாகும்.

11. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கினாதிபதி உச்சனான குருவுடன் கூடி லக்கினத்திலிருந்து சனி எட்டாமிடத்திலிருந்தால் எழுபது (70) வயது உண்டாகும்.

12. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கினாதிபதி 5-லும், எட்டாமாதி 6-லும், 6-மாதி ஒன்றிலுமிருந்தால் எழுபத்து மூன்று (73) வயதுண்டாகும்.

13. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கினாதிபதி 2-லும் எட்டாம் மாதிபதி 8-லும் குரு லக்கினத்திலுமிருந்தால் எழுபத் தேழு (77) வயதுண்டாகும்.

14. ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (தனுசு)

வான். 49-ல் அல்லது 50-ல் அபமிருத்து பயமுண்டாகும், சுக்கிர தெசையில் சனி புக்தியில் மேற்படி அறுபத்தொன்று (61) வது வயதில் மரணம் நேரிடும்.

10. ஜென்ம லக்லனம் தனுசு ஆகி குரு நின்ற ராசிநாதன் தன் உச்சத்திலும் எட்டாமாதிபதி 8-லும் இருந்து சனியுமுச்சமானலும் சுக்கிரன் மீனத்திலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதடைவான். எட்டாமாதிபதியாகிய சந்திரன் பூசம் 3-வது பாதத்திலிருந்து குருவால் பார்க்கப்பட்டால் மேற்படி ஆயுள் குறைவடையாது.

11. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, லக்கினதிபதி 9-லும் எட்டாமாதிபதி சர (மேஷ)த்திலும், சுக்கிரன் 7-லு மிருந்தால் அறுபத்தெட்டு (68) வயதுண்டாகும். இத்தக் கிரக யோகத்தில் பரணி 2-வது பாதத்தில் அஷ்டமாதிபதியாகிய சந்திரனிருந்தாலும் மேற்படி வயதேயுண்டாகும்.

12. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி குருவும், சனியும் கூடி 3-ல் இருந்து, சந்திரன் சுக்கிரனுடன் கூடி யிருந்தாலும், சுக்கிரனல் சந்திரன் பார்க்கப்பட்டாலும் எழுபத்தொன்பது (79) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் எட்டாமாதிபதியாகிய சந்திரன் மேஷ ராசியில் சுக்கிரனுடன் கூடி யிருந்தால் எழுபத்தொன்பது (79) வயது ஆகும்.

13. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, லக்கினதிபதி சுய க்ஷேத்திரத்தில் லக்கினத்திலும் சந்திரன் அசுவனி ஒன்றிலும் சுக்கிரன் தன்னுச்சத்திலுமிருந்தால் எழுபத்தெட்டு (78) வயதுண்டாகும். மேற்படி லக்கினதிபதியாகிய குரு தெசை சந்திர புக்தியில் ரிஷபத் திரிகோணத்தில் சூரியன் வரும்போது தேய்ப்பிறை சதுர்தசியில் நடு இரவில் ஜாதகன் மரிப்பான்.

14. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி ஓராமாதிபதி, எட்டாமாதிபதி பத்தமாதிபதி இவர்கள் கேந்திரத் திரிகோணங்களில் பலமுடையவர்களாகி யிருந்து இரண்டா மாதிபதி பலமுடையவனக சுயக்ஷேத்திரத்தி லிருப்பின் அறுபத்தொன்பது (69) வயதுண்டாகும். எழுபது (70) வயதென்பது சிலர் மதம். எட்டாமாதிபதியாகிய சந்திரன் மூலம் 2-வது பாதத்திலிருந்தால் லக்கி

னுதிபதியாகிய குரு தெசையின் சனி புக்தியில் கிரியாணமுண்டாகும்.

15. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, லக்கினுதிபதி 5-லும் அஷ்டமாதிபதி ஒன்றிலும், சனி 2-மிடத்திலுமிருந்தால் அறுபத்தொன்பது (69) வயதுண்டாகும், எழுபது (70) வயதென்பது சிலர் மதம், எட்டாமாதிபதியாகிய சந்திரன் மூலம் 2-வது பாதத்திலிருந்தால் லக்கினுதிபதியாகிய குரு தெசையில் சனி புக்தியில் கிரியாண முண்டாகும்.

16. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனுவான்.

17. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தாறு (66) வயதுடையவனுவான்.

18. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கினுதிபதி 11-லும் எட்டாமாதிபதி 10-லும் இருந்தால் அறுபத்தொன்று (61) வயதுண்டாகும். எட்டாமாதிபதியாகிய சந்திரன் உத்திரம் 4-வது பாதத்தில் இருந்தால் சனி தெசை சந்திர புக்தியில் மரணமுண்டாகும். சிலர் மதம் பிரகாரம் அறுபத்திரண்டு (62) வயதாகும்.

19. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கினுதிபதி கேந்திர ஸ்தானத்தி 7-லும், எட்டாமாதிபதி உச்சத்திலும் இருந்து, 10 மாதிபதி லககினத்திலிருந்தால் அறுபத்தைந்து (65) வயதுண்டாகும். புத தெசை சுக்கிர புகதியில் மரணம் நேரிடும். இப்படி நேராமல் ஒரு சமயம் மேற்படி வயதில் தப்பினுல் எழுபது (70) வயது பூர்ணுயுளாக உண்டாகும்.

20. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, குரு 5-லும், சனி 9-லுமிருந்தால் அறுபத்திநான்கு (64) வயதுண்டாகும்.

21. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும்,

பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனாவான்.

22. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, லக்கின பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி பன்னிரண்டாம் பாவாதிபதி இவர்கள் சர (மகர) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனாவான்.

23. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதுடையவனாவான்.

24. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலிருந்தால் ஜாதகன் எண்பத்தொனறு (81) வயதுடையவனாவான்.

25. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனாவான்.

26. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மீன) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65), அல்லது எழுபது (70) அல்லது எழுபத்திரண்டு (72) வயதுடடையவனாவான். இந்த ஆயுள் வித்யாசம் நாடியம்சத்திற்குத் தகுந்தாப்போல் ஏற்பட்டதாகும்.

27. ஜென்மலக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதுடையனாவான்.

28. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின ாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மீன) ராசியில் இருந்து எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதுடையவனாவான்.

29. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் பூர்ணயுளாகிய எழுபத்தைந்து (75) வயதுடையவனாவான். அறுபது (60) வயதில் தேக பீடையினால் அசுகம் அடைவான். அக்காலத்தில் செவ்வாய், குரு, சனி இவர்களுக்குப் பிரீதி செய்வதால் சுகமுண்டாகும். 62-ல் பீடையுண்டாகி அது சேதுப் பிரீதியால் நிவர்த்தியாகும். இந்த வயதில் ஜாதகன் அபத் சன்னியாசி யோகமும் அடைவார்.

30. ஜென்ம லக்கினம் தனுச ஆகி லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி உபய (கன்னி) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதிஉபய (மீன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனாவான்.

31. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தொன்று (71) வயதுடையவனாவான்.

32. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும், எட்டாம் பாவாகிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதுடையவனாவான்.

33. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி உபய (மீன) ராசியிலிருந்து எட்டுப் பன்னிரண்டாம் பாவாதிபதிகள் ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதடைவான்.

34. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, லக்கின பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும், பன்னிரண்டாம் பாவதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்திமூன்று(63) வயதுடையவனாவான். நாடி அம்சபேதத்தினால் இந்த வயது கொஞ்சம் வித்தியாசப் படும்.

35. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும்

பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனுவான்.

36. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதியும் எட்டாம் பாவாதிபதியும் ஸ்திர (சிம்ம) ராசியிலிருந்து, பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனுவான்.

37. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மீன) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனுக ஆவான். இந்த வயது நாடி அம்ச பேதத்தினுல் கொஞ்சம் வித்தியாசப்படும்.

38. ஜென்ம லக்கினம் தனிசு ஆகி லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனுவான்.

39. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலிருந்து எட்டு பன்னிரண்டாம் பாவாதிபதிகள் ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்தால் ஜாதக்ன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனுவான்.

40. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலு மிருந்தால் ஜாதகன் அறுபத்திரண்டு (62) வயதுடையவனுவான்.

41. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதுடையவனுவான்.

42. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, லக்கின பாவாதிபதி உபய (மீன) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதுடையவனுவான்.

43. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, லக்கின பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தொன்று (71) வயதுடையவனுவான்.

44. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மீன) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தாறு (66) வயதுடையவனுவான். இந்த வயது நாடி அம்ச பேதத்தினுல் கொஞ்சம் வித்தியாசப்படும்.

45. ஜென்ம லக்கினம் தனுசி ஆகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலிருந்து, பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலிருந்தால் ஜாதகன் ஐம்பத்தைந்து (55) வயதுடையவனுவான்.

46. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும் பன்னிரண்டாம்பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனுவான்.

47. ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கின பாவாதிபதி கேந்திர (தனுசு) ராசியிலிருந்து, ஒன்பதாம் பாவம், பத்தாம் பாவம் இவைகளுக் குடையவர்கள் கேந்திர ராசியிலுமிருந்து பதினேராவது பாவாதிபதி நீச்சமடைந்திருந்தால் ஜாதகன் அறுபத்தாறு (66) வயதடைவார்.

குறிப்பு :—இன்னும் அதிக விதிகள் 2-வது மலரில் கொடுக்கப்படும்.



# 10-வது அத்தியாயம்.



## மகர லக்கின ஜாதகத்தின் ஆயுள் நிர்ணயம்.

1. ஜென்ம லக்கினம் மகரமாகி அஷ்டமாதிபதி லக்கினத்தில் சுபாம்சத்தில் இருந்து சுபரால் (7-ல் உள்ள குருவால்) பார்க்கப்பட்டால் பாலரிஷ்டமுண்டாகும்.

2. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி எட்டாம் பாவாதிபதி இருக்கப்பட்ட ராசிநாதன் உச்சத்திலிருந்து லக்கின ஆரூடத்தில் சுபாம்சத்தில் குருவிருந்தால் தீர்க்காயுளுண்டாகும். இவர்கள் பாபாருடைய அம்சங்களிலிருந்து பாபாரல் பார்க்கப்பட்டால் ஆயுள் அற்பமாகும். இவர்கள் நீச்சாம்சத்தி லிருந்தாலு மிப்ப டியே அற்பாயுளாகும்.

3. ஜென்ம லக்கினம் மகரமாகி கடகத்தில் குருவும் துலாத் தில் சனியுமிருந்து சந்திரன் நீச்ச ராசியில் நீச்சாம்சத்தில் இருந்து பாபரால் பார்க்கப்பட்டுச் சுப திருஷ்டி இல்லாதிருப்பின் பாலா ரிஷ்டத்திலேயே மரணமுண்டாகும்.

4. ஜென்ம லக்கினம் மகரமாகி சந்திரனுக்கு ஐந்தில் புத சுக்கிரரிருந்து குருவாலிவர்கள் பார்க்கப்படின் பாலாரிஷ்டம் விலகி சுகமும் தீர்க்காயுளு முண்டாகும். வயது ஐம்பத்தைந்து (55) உண்டாகும்.

5. ஜென்ம லக்கினம் மகரமாகி எட்டாமிடத்தில் சனி செவ் வாயிருவரும் கூடியிருந்தால் வமிசம் வமிசமாகி அற்பாயுளாகும். அதற்குமேல் ஆயுளே ஏற்படாது.

6. ஜென்ம லக்கினம் மகரமாகி சனி குஜனிவர்கள் லக்கி னத்திற் கெட்டிலிருந்து பரனி நக்ஷத்திரம் 3-வது பாதம் ஜென்ம மாகிச் சுக்கிரனுச்சக் கிரகத்துடன் கூடியிருந்தாலும் உச்சாம்சத்தி லிருந்தாலும் லக்கினத்திற்குச் சுக்கிரன், சனி குஜனிவர்கள் ஷஷ்டாஷ்டமங்களிலிருந்தாலும் ஆறு (6) அல்லது (8) வயதில் மரணமுண்டாகும். இதில் இரட்டைப் பிறவியாகப் பிறந்தால் தீர்க்காயுளாகும். இப்படி இரட்டைப் பிறவியாவதற்குக் குரு திருஷ்டியானது சனி குஜ சுக்கிராதிகளுக்கிருக்க வேண்டும்.

7. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கினம் எட்டு, பத்து, இவற்றிற்குடையவர்கள் கேந்திரம் திரிகோணம் லாபஸ்தான மிவற்றிலிருந்து சனி பலவானுயிருந்தால் ஐம்பத்தெட்டு (58) வயது தீர்க்கமாக உண்டாகும்.

8. ஜென்ம லக்கினம் மகரமாகி, குருவுடன் சனி 7-லும், சுக் கிரன் ரிஷபத்திலுமிருந்தால் எழுபது (70) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே சந்திரன் அசுவனி 3-வது பாதத்தில் இருந்

தால் மேற்படி குரு தெசையில் எழுபதா (70)-வது வயதில் மரண முண்டாகும்.

9. ஜென்ம லக்கினம் மகரமாகி மேஷத்தில் சந்திரனும் சனியுமிருந்து 10-மிடத்திலுள்ள குருவாலிவர்கள் பார்க்கப்பட்டால் ஜென்ம நாள் முதல் 27 நாள் வரையில் பாலாரிஷ்ட பய முண்டாயினும் சுகமுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே சூரியன் 5-ல் இருந்து ஹோரா லக்கினம் ஸ்திரமாகி அசுவனி ஒராவது பாதத்தில் சந்திரனுமிருந்தால் அறுபத்தாறு (66) வயதுண்டாகும் மேற்படி குரு தெசை சனி புக்தியில் ஜாதகன் மரணமடைவான்.

10. ஜென்ம லக்கினம் மகரமாகி, லக்கினாதிபதி 5-ல் இருந்து எட்டாமாதிபதியுடன் குரு கூடி 6-ல் இருந்து லக்கினாதிபதியாகிய சனியுடன் சுக்கிரன் கூடி யிருந்தாலும், கேந்திரத் திரிகோணங்களில் இருந்தாலும், லக்கினாதிபதி ஸ்திர ராசியிலும் எட்டாமாதிபதி உபய ராசியிலும் இருந்து ஹோரா லக்கினம் உபயமானாலும் எழுபத்தினான்கு (74) வயது தீர்க்காயுளாக உண்டாகும். இந்தக் கிரகயோகத்திற்கே சந்திரன் உத்திரட்டாதி 2-வது பாதத்தில் இருந்தால் மேற்படி பலன்களே யுண்டாகும்.

11. ஜென்ம லக்கினம் மகரமாகி, லக்கினாதிபதியாலும் எட்டாமாதிபதியாலும் அடையப்பட்ட ராசிநாதன் சுய க்ஷேத்திரத்திலிருந்தாலும் அல்லது எட்டாமாதிபதியும் புதனும் லக்கினாதிபதியும் கூடி மேஷத்தில் இருந்தாலும், அல்லது லக்கினாதிபதி அஷ்டமாதிபதி ஹோரா லக்கினம் ஆகிய மூன்றும் சரத்திலிருந்தாலும், அப்போது சந்திரன் சதயம் 3-வது பாதத்திலிருந்தால் அறுபத்தாறு (66) வயது ஆயுளுண்டாகும். 60 வயதில் அபமிருத்துண்டாகும். புத தெசையில் கடைசியில் மரணம் நேரிடும், சிலர் மதப்படி ஜாதகன் அறுபத்தாறு (66) வயதும் ஜீவித்திருப்பான்.

12. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கினாதிபதி 9-லும் எட்டாமாதிபதி 9 மாதிபதி இவர்கள் கூடி 5-லு மிருந்தால் மத்திமாயுளுண்டாகும்.

13. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி பத்திலாவது அல்லது கேந்திரத்திலாவது திரிகோணத்திலாவது குரு இருந்து சனி 5-ல் இருந்தாலும், பத்தாமாதிபதி 11-ல் வலுத்திருந்து லக்கினாதிபதி

மித்திர ராசியில் இருந்து 11-ல் எட்டாமாதிபதி யிருந்தாலும் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதடைவான்.

14. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி கேந்திரத்தில் லக்கினாதிபதி வர்க்கோத்தமாம்சத்திலிருந்து எட்டாமாதிபதி சுப ராசியிலிருந்தாலும் அல்லது லக்கினாதிபதி சுய க்ஷேத்திரத்தில் வர்க்கோத்தமாம்சத்திலிருந்து எட்டாமாதிபதி சுப க்ஷேத்திரத்தில் சுபருடன் கூடி யிருந்தாலும் அல்லது லக்கினாதிபதி மகர ராசியில் வர்க்கோத்தமத்திலிருந்து அஷ்டமாதிபதி 3-ல் குருவுடன் கூடி யிருந்து உத்திராடம் ஓராவது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் கேந்திர திரிகோணத்தில் (5-ல்) இருந்தாலும் அறுபத்தேழு (67) வயதுண்டாகும். இந்த ஜாதகருக்கு மேற்படி 67-ல் சனி தெசை சூரிய புக்தியில் ஆவணி மாதத்தில் சுகிலபக்ஷ திரியோதசியில் வியாழக்கிழமையில் அதிசாரத்தினால் விடியற்காலையில் கிரியாணம் நேரிடும்.

15. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கினாதிபதி குருவின் வீட்டி (12)-லும் எட்டமாதிபதி குருவுடன் கூடி 2-மிடத்திலு மிருந்து லக்கினத்திலும் சுபரிருந்தால் அறுபத்தேழு (67) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் சந்திரன் திருவதிரை 2-வது பாதத்தில் இருந்தால் கேது தெசை ராகு புக்தியில் கும்பத் திரிகோண மாதங்களிலல்லது ஆவணி மாதத்தில் ரண ரோகத்தினால் வளர் பிறையில் மரணம் நேரிடும்.

16. ஜென்ம லக்கினம் மகரப் ஆகி ஓராமாதிபதி கேந்திரத்தில் சுக்கிரனுடன் கூடியிருந்து எட்டாமாதிபதி குருவுடன் கூடி யிருந்நாலும் அல்லது லக்கினாதிபதி தசமத்தில் சுக்கிரனுடன் கூடியிருந்து எட்டாமாதிபதி குருவுடன் 8-லிருந்தாலும் அறுபத்தைந்து (65) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் சந்திரன் திருவோணம் 2-வது பாதத்திலிருந்தால் சனி தெசையில் குரு புக்தியில் ஆவணி மாதத்தில் வளர் பிறை வியாழக்கிழமை நடு இரவில் நல்ல ஞானத்துடன் மரிப்பான்

17. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கினாதிபதி 5-லும் எட்டாமாதிபதி சுய க்ஷேத்திரத்தி (3)-லும் சந்திர சுக்கிரர் 7-லு மிருந்தால் ஜாதகன் எழுபது (70) வயது பூர்ணாயுளாக அடைவான். இந்தக் கிரக யோகத்திற்கே சந்திரன் ரேவதி 3-வது

பாதத்தில் இருந்தால் ராகு தெசை கேது புக்தியில் எழுபதா (70)-வது வயதில் மாசி மாதத்தில் வளர் பிறையில் வெள் ளிக்கிழமையில் துவாதசியில் அஜீர்ண ரோகத்தினுல் மரண மடைவான்.

18. ஜென்ம லக்கினம் மகரமாகி ஓராமாதிபதியும் 8-மாதி பதியும் கேந்திரத்திலிருந்து 10-மாதிபதி செவ்வாயுடன் கூடி யிருந்து 8-ல் குரு இருந்தால் அறுபத்திரண்டு (62) வயதுண் டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே சந்திரன் பூசம் ஓராவது பாதத்திலிருந்தால் சூரிய தெசை சந்திர புக்தியில் மரணமு ண்டாகும்.

19. ஜென்ம லக்கினம் மகரமாகி, லக்கினுதிபதி 9-லும் எட்டமாதிபதி புதனுடன் கூடியும் குரு கேந்திர திரிகோணத்தில் இருந்தால் அறுபத்திநான்கு (64) வயதுண்டாகும்.

20. ஜென்ம லக்கினம் மகரமாகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசி யிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் இருந்தால் ஜாதகன் அறுபத்திரண்டு (62) வயதுடையவனுவான்.

21. ஜென்ம லக்கினம் மகரமாகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசி யிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும் இருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதுடையவனுவான்.

22. ஜென்ம லக்கினம் மகரமாகி, லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் சித்தாயுள் யோகமுடையவனுவான்.

23. ஜென்ம லக்கினம் மகரமாகி லக்கின பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியி லிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனுவான்.

24. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும், உபய (மீன)ராசியிலிருந்து, எட்-

டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலிருந்தால் ஜாதகன் தீர்கா யுள்யோக வயதுடையவனவான்.

25. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மீன)ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலிருந்தால் ஜாதகன் நாடியம்ச பேதத்தினல் அறுபத்தொன்று (61) வயதுடையவனவான். இது சிவதாம்சம்.

26. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும் எட்டு, பன்னிரண்டாம் பாவாதிபதிகள் உபய (மிதுன) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதுடையவனவான்.

27. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி, லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதுடையவனவான்.

28. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபது (70) வயதுடையவனவான்.

29. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும், எட்டாம்பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் இருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதுடையவனவான்.

30. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மீன) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலிருந்தால் ஜாதகன் பூர்ணயுள்யோகமடைந்து எழுபத்திரண்டு (72) வயதுடையவனவான்.

31. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி, லக்கின பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதுடையவனவான்.

32. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி, லக்கின பாவாதிபதி சர (கடக) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) உடையவனுவான்.

33. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும் எட்டம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் ஐம்பத்தேழு (57) வயதுடையவனுவான்.

34. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும் இருந்தால் ஜாதகன் ஐம்பத்திரண்டு (52) வயதுடையவனுவான்.

35. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதுடையவனுவான்.

36. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (தனுசு) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்திமூன்று (63) வயதுடையவனுவான்.

37. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும் எட்டு பன்னிரண்டாம் பாவாதிபதிகள் உபய (மிதுன) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதுடையவனுவான்.

38. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனுவான்.

39. ஜென்ம லக்கினம் ககரம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (மேஷ) ராசியிலிருந்து, எட்

டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்தால் ஜாதகன் அறு பத்திரண்டு (62) வயதுடையவனுவான்.

40 ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (கன்னி) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலு மிருந்தால் அறுபத்திநான்கு (64) வயதுடையவனுவான்.

41. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி பன்னிரண்டாம் பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி ஆகிய இம் மூன்று பாவாதிபதிகளும் உபய (கன்னியா) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்தேழு (77) வயதுடையவனுவான்.

42. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி பன்னிரண்டாம் பாவாதிபதி இவர்கள் உபய (தனுசு) ராசியி லிருந்து எட்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்திநான்கு (64) வயதுடையவனுவான்.

43. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலு மிருந்தால் ஜாதகன் அறுபத்தாறு (66) வயதுடையவனுவான்.

44. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலும் இருந்தால் ஜாதகன் அறுபத்தெட்டு (68) வயதுடையவனுவான்.

45. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி சர (கடக) ராசியிலிருந்து எட்டு பன்னிரண்டாம் பாவாதிபதிகள் ஸ்திர (விருச்சிக) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனுவான்.

46. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலிருந்து, பன்னிரண்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலு மிருந்தால் ஜாதகன் எழுபத்தொன்று (71) வயதுடையவனுவான்.

47. ஜென்ம லக்கினம் மகரமகி லக்கின பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலிருந்து எட்டுப் பன்னிரண்டாம் பாவாதிபதிகள்

உபய (மிதுன) ராசியிலிருந்தால் ஜாதகன் நாடி யம்சபேதத்தினல் வயது எழுபத்தைந்து (75) உடையவனுவான்.

48. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி, லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ரசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிமிலுருந்தால் ஜாதகன் அறுபத்தெட்டு (68) வயதுடையவனுவான்.

49. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி, லக்கின பாவாதிபதி உபய (மீன) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும் இருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதைுடையவனுவான்.

50. ஜென்ம லக்கினம் மகரம் ஆகி லக்கின பவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனுக ஆவான்.

குறிப்பு :—இன்னும் அதிக விதிகள் 2-வது மலரில் கொடுக்கப்படும்.



## 11-வது அத்தியாயம்.



### கும்ப லக்கின ஜாதகத்தின் ஆயுள் நிர்ணயம்.

6. ஜென்ம லக்னம் கும்பமாகி, லக்கினத்தில் சந்திர சுக்கிரரிருவருமிருந்தாலும், லக்கினதிபதி 9லும் எட்டாமாதிபதி குருவுடன் கூடி 12-லுமிருந்து 9-மாதி லக்கினத்திலிருந்தாலும் எழுபது (70) வயதுண்டாகும். வேற்படி சந்திரன் சதயம் 3-வது பாதத்திலிருந்தால் சுக்கிர தெசையில் மரணம் மேற்படி எழுப்தா (70)-வது வயதில் நேரிடும்.

2. ஜெனம லக்னம் கும்பம் ஆகி எட்டாமாதிபதி இருக்கப்பட்ட ராசிநாதன் உச்சத்திலிருந்தாலும் லக்கினுதிபதி உச்சத்

திலும் அஷ்டமாதிபதி லக்கினத்திலுமிருந்தாலும் ஐம்பத்தொன்பது (59) வயதல்லது அறுபது (60) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே பூரம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து மேற்படி லக்கினத்திற்கு 11-ல் குருவும் ராகுவும் கூடியிருந்து சனியாலிவர்கள் பார்க்கப்பட்டால் மேற்படி அறுபது (60) வயதில் குரு தெசையில் மரணமுண்டாகும்.

3. ஜென்ம லக்லனம் கும்பம் ஆகி, லக்கினாதிபதி 12-ல் சுய க்ஷேத்திரத்தில் வர்க்கோத்தமத்திலிருந்து எட்டாமாதிபதியாகிய புதன் கேந்திரத்தில் ( 0-ல்) இருந்தால் எழுபது (70) வயதுண்டாகும் இந்தக் கிரக யோகத்துடன் பரணி 2-வது பாதத்தில் சந்திரனிருந்தால் கேதுவுடன் கூடிய குரு தெசையில் சுய புக்தியில் பெரிய அபமிருத்துண்டாகும் இந்தக் கெண்டம் தவறினால் எழுபது (70) வயதுள்ள பூர்ணயுள் யோகமுண்டாகும்.

4. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, சனி லக்கினத்திலும், எட்டாமாதிபதி தசமத்திலும் 8-ல் சுக்கிரனுமிருந்தால் எழுபத்தேழு (77) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் உத்திராடம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்தால் ஜாதகன் எட்டாமாதிபதியாகிய புதனுடைய தெசையில் சூரிய புக்தியில் ஜாதகன் மரணமடைவான்.

5. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கினாதிபதி உச்சத்திலும் எட்டாமாதிபதி மித்திரருடன் கூடி ?-லும் இருந்தால் அறுபத்தெட்டு (68) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் பூரம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்தால் லக்கினாதிபதியாகிய சனி தெசையில் ஜாதகன் நிரியாணமடைவான்.

6. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி உத்திராடம் ஒராவது பாதம் ஜென்ம நக்ஷத்திரமாகி குருவுடன் கேது கூடி மிதுனத்திலிருந்து, சனி, மேஷத்திலிருந்து சுக்கிரன் லக்கினத்திலிருந்தால் ஷை சனி தெசை சுய புக்தியில் மரணமுண்டாகும்.

7. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கினாதிபதி 8-லும் எட்டாமாதிபதி 7-ல் சூரியனுடன் கூடியிருந்தாலும் குரு கேந்திர திரிகோணத்தில் (10-ல்) இருந்தால் எழுபத்திமூன்று (73) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் கேட்டை 3-வது பாதத்தில் சந்திரனிருந்தால் 12-லுள்ள ராகு தெசையில் செவ்

வாய் புக்தியில் பங்குனி மாதம் வளர்பிறை தசமியில் வியாழக் கிழமை விடியற்காலேயில் அதிசார நோயால் மரணமுண்டாகும்.

8. ஜென்ம லக்கினம் கும்பமாகி லக்கினுதிபதி 12-லும் 8-ல் குருவும் 8, 10-க்குடையவர்கள் கேந்திரத்தில் (7-ல்) இருந்தால் அறுபத்தொன்று (61) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் சந்திரன் மிருகசீரஷ மிரண்டாவது பாதத்திலிருந்தால் ஐம்பத்தொன்பது (59) வயதாகும். சிலர் மதம் பிரகாரம் 31-லும், 36-லும் தேக ஜாட்டியமும், 40-ல் அற்பபயமும் 50-ல் க்ரூர பயமும் உண்டாகி புத தெசை சுய புக்தியில் மகர ரிஷப ராசிகளில் சூரியனிருக்கும்போது வளர்பிறையில் செவ்வாய்க்கிழமையில் அல்லது ஞாயற்றுக்கிழமையில் நடு இரவில் மரண மேற்படும்.

9. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கினுதிபதி குருவுடன் கூடியிருந்து எட்டாமாதிபதி சனியால் பாரக்கப்பட்டாலும் அல்லது லக்கின பாவாதிபதியும் குருவும் கூடி 11-ல் இருந்து ஓராமிடத்திலுள்ள அஷ்டமாதிபதியைச் சனி பார்த்தாலும் அல்லது லக்கின ஆரூடம் எட்டாம் ஆரூடமிவைகள் செவ்வாயால் பார்க்கப்பட்டும் மூலம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்தால் அறுபத்தைந்து (65) வயது மத்திமாயுளாக ஏற்படும். சிலர் மதப்படி ஐம்பத்திரண்டு (52) வயது என்று ஏற்படுகிறது. 31-லும் 42-லும் பயமுண்டாகும். மேற்படி குரு தெசை வரும்போது சுய புக்தியில் ரிஷப ராசித் திரிகோணத்தில் சூரியனிருந்து தேய்ப் பிறையில் திங்கக்கிழமையில் பித்தகாசத்திலல்லது க்ஷய ரோகத்தினுல் மரணமுண்டாகும்.

10. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கினுதிபதி 11-லும், எட்டாமாதிபதி சூரியனுடன் கூடி (3-லும்) இருந்து 10-மாதிபதி, சந்திரனுடன் கூடி (5லும்) இருந்தால், அறுபத்தைந்து (65) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் திருவாதிரை 3-வது பாதத்தில் சந்திரனும் சிம்மத்தில் கேதுவுமிருந்தால் கேது தெசையின் முடிவில் யுக்ம மாதத்தில் சுக்கில பக்ஷத்தில் பௌர்ணமியன்று பூராட நக்ஷத்திரத்தில் மரண நேரிடும்.

11. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் அஷ்டமாதிபதியும் கேந்திரத்திலிருந்து 10 மாதிபதி சுக்கிரனுடன் கூடினுலும் அல்லது ஜென்ம லக்கினுதிபதியாகிய சனி 10-லும்

எட்டாமாதிபதி 7-லுமிருந்து 6-ல் சுக்கிரனும் 10-மாதிபதியும் கூடியிருந்தாலும் அல்லது குரு கேந்திர திரிகோணத்தில் (9)-ல் இருந்தால் 65 வயது ஆகும். இத்துடனிதற்கே சந்திரன் கிருத்திகை 2-வது பாதத்திலிருந்தால் சனி தெசை சூரிய புக்தியில் மேஷத் திரிகோணத்தில் சூரியன் வரும்போது வளர் பிறையில் ஞாயிற்றுக்கிழமை அர்த்த ராத்திரியில் கிரியாணம் நேரிடும்.

12. ஜென்ம லக்கினம் கும்பமாகி லக்கினாதிபதி மீனத்திலும் அஷ்டமாதிபதி மேஷத்திலும் குரு துலாத்திலும் இருந்தால் எழுபத்தொன்று (71) வயதுண்டாகும். உத்திராடம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்தால் மேற்படி வயதில் மீனத் திரிகோண மாதங்களில் சூரியனிருக்கும்போது வளர்பிறையில் வியாழக்கிமையில் அர்த்த ராத்திரி சமயத்தில் மரணம் நேரிடும்.

13. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கினாதிபதி மிதுனத்திலும் அஷ்டமாதிபதி சுய க்ஷேத்திரத்திலும் குரு கேந்திர திரிகோணத்திலும் இருந்தால் எழுபது (70) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் சந்திரன் பூரம் 2-வது பாதத்திலிருந்தால் குரு தெசையில் கடைசியில் மாசி மாதம் வளர்பிறையில் மரணமுண்டாகும்.

14. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கினாதிபதி, 5-ல் இருந்து; அஷ்டமாதிபதி கேந்திரத்தில் இருந்து, சுக்கிரன் கேந்திர திரிகோணத்தில் இருந்தால் அறுபத்தெட்டு (68) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே சந்திரன் திருவாதிரை 3-வது பாதத்திலிருந்தால் கேது தெசையில் கடைசியில் ரிஷபத் திரிகோணத்தில் சூரியனிருக்க வளர்பிறையில் துவாதசியில் வியாழககிழமையன்று மரணமுண்டாகும்.

15. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின அஷ்டமாதிபதிகள் கேந்திரத்தில் இருந்து அஷ்டமத்தில் சுபரிருந்தாலும் அல்லது ஜென்ம லக்கினம் கும்பமாகி லக்கினாதிபதி 1?-லும் அஷ்டமாதிபதி சப்தமத்திலும் இருந்து குரு சுக்கிரர் அஷ்டமத்திலிருந்து ஒன்பதாமிடத்தில் செவ்வாயும் இருந்தால் அறுபத்துமூன்று (63) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே மிருகசீரஷம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்தால் புத தெசை ரவி புக்தி

யில் ஆவணி மாதம் தேய்பிறை ஏகாதசியில் புதவாரம் விடியற் காலேயில அதிசாரத்தினுல் கிரியாணமுண்டாகும்

16. ஜென்ம லக்கின கும்பம் ஆகி, லக்கினுதிபதி தனுசி லும் தசமாதிபதி விரயத்திலுமிருந்து புதன் 2-லிருந்தால் அறுபத் தைந்து (65) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் திருவாதிரை 4-வது பாதத்தில் சந்திரனிருந்தால் சுக்கிர தெசை யில் புரட்டாசி மாதம் தேய்பிறை சதுர்தசி வியாழக்கிழமையில் விடியற்காலேயில் அதிசாரத்தினுல் மரணம் நேரிடும்.

17. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி அஷ்டமாதிபதி சுக்கிர னுடன் கூடியிருந்து லக்கினுதிபதி உச்சமாகி குரு லக்கினத்தி லிருந்தால் எழுபது (70) வயது பூர்ணுயுளாக ஏற்படும்.

18. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கினுதிபதி பதி னென்றிலும் அஷ்டமாதிபதி விரயத்திலும் தசமாதிபதி தசமத் திலுமிருந்தால் அறுபத்தாறு (66) வயதுண்டாகும்.

19. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதி யும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் ஸ்திர (கும்ப, ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்தேழு (77) வயதுடையவனுவான்.

20. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதி யும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (துலா) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனுவான்.

21. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி பன்னிரண்டாம் பாவாதிபதி இவர்கள் சர (மகர) ராசியிலிருந்தால் ஜாதகன் பரமாயுளுடையவனுகி நூற் றிருபது (120) வயதுடையவனுவான். சிலர் மதம் பிரகாரம் ஜாதகன் நூறு (100) வயது அடைவான்.

22. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதி யும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மிதுன) ராசியி லிருந்து எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலிருந்தால் ஜாத கன் அறுபத்தாறு (66) வயதுடைவனுவான்

23. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (கன்னியா) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதுடையவனுவான்.

24. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (துலா) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதுடையவனுவான். இந்த வயது நாடி அம்ச பேதத்தினுல் கொஞ்சம் வித்தியாசப்படும்.

25. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (மேஷ)) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலிருந்தால் ஜாதகன் பூர்ணுயுளாக எழுபத்திரண்டு (72) வயதுடையவனுவான்.

26. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம பாவாதிபதியும் ஸ்திர (சிம்ம) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதுடையவனுவான்.

27. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (துலா) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி உபய (தனுசு) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தெட்டு (68) வயதுடையவனுவான்.

28. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் எட்டாம் பாவாதிபதியும் உபய (மீன) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65)-க்கு மேல் கொஞ்சம் அதிக வயதுடையவனுவான்.-35-வது அயிட்டத்தைப் பார்க்கவும்.

29. ஜென்ம லக்னம் கும்பம் ஆகி லங்கின பாவாதிபதியும் பன்னிரண்டாப் பாவாதிபதியும் சர (மகர) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலிருந்தால் ஜாதகனுக்கு வயது அறுபத்தேழு (67) அல்லது அறுபத்தெட்டு (68) உண்டாகு மென்றும் சொல்லுகின்றனர்.

30. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் ஸ்திர (கும்ப) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்திமூன்று (63) வயதுடையவனாவான். இதற்கே நாடி அம்ச பேதத்தினல் அறுபத்திநான்கு (64) வயதுமுண்டாகும்.

31. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனாவான்.

32. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் ஸ்திர (கும்ப) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (75) வயதுடையவனாவான்.

33. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலிருந்து, பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனாவான்.

34. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (மகர) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனாவான்.

35. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதி எட்டாம்பாவாதிபதி பன்னிரண்டாம் பாவாதிபதி ஆகிய இவர்கள் உபய (தனுசு) ராசியில் இருந்தால் ஜாதகி அறுபத்தைந்து (65) வயதடைவாள்.—28-வது அயிட்டத்தைப் பார்க்கவும்.

36. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (துலா) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலிருந்தால் ஜாதகன் வயது அறுபத்திநான்கு (64) அடைவான். நாடு அம்ச பேதத்தினல் இவ் வயது கொஞ்சம் வித்தியாசப்படும்.

37. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (தனுசு) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்திமூன்று (63) வயதுடையவனாவான்.

38. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மீன)ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தாறு (66) வயதுடையவனாவான்.

39. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மிதுன) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலிருந்தால் ஜாதகன் வயது எழுபது (70) உடையவனாவான். இந்த வயது நாடி அம்சபேதத்தினால் கொஞ்சம் வித்தியாசம்மடும்.

40. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (கன்னியா) ராசியிலிருந்து எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதுடையவனாவான்.

41. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (மகர) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனாவான். இந்த வயது நாடி அம்ச பேதத்தினால் கொஞ்சம் வித்தியாசப்படும்.

42. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் சர (மேஷ) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்திநான்கு (64) உடையவனாக ஆவான்.

43. ஜென்ம லக்கினம் கும்பம் ஆகி, லக்கின பாவாதிபதியும் பன்னிரண்டாம் பாவாதிபதியும் உபய (மீன) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி சர (மகர) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதுடையவனாவான்.

குறிப்பு :—இன்னும் அதிக விதிகள் 2-வது மலரில் கொடுக்கப்படும்.

—:(*):—

# 10-வது அத்தியாயம்.



## மீன லக்கின ஜாதகத்தின் ஆயுள் நிர்ணயம்.

1. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி லக்கினத்தில் துலா நவாம்சத்தில் சூரியனிருந்தால் ஜாதகன் அற்பாயுளை அடைவான்.

2. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி, சந்திரன் லக்கினத்தில் வர்க்கோத்தமத்தில் இருந்து குருவால் பார்க்கப்பட்டால் பூர்ணாயுளுண்டாகும். வயது அறுபத்தேழு (67) ஆகும்.

3. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி, சனி 12-லிருந்து, சந்திரன் உத்திராடம் 3-வது பாதத்தில் மகரத்திலுமிருந்தாலும் குருபத்தில் அஷ்டமாதிபதியுடன் கூடியிருந்தாலும் எழுபது (70)க்கு அதிகமான வயதடைவான். அதாவது இவனுக்குப் புத தெசையில் சுய புக்தியில் எழுபத்தி மூன்று (73)-வது வயதில் கிரியாண முண்டாகும்.

4. ஜென்ம லக்கினம் மீன ஆகி புதன் லக்கினம் ஆரூடாதிபதியாகவும் ரந்திர ஆரூடாதிபதியாகவும் ஆகித் திரிக்கோண (கேந்திர)-த்தில் இருந்தால் எழுபது (70) வயதுண்டாகும். 49-ல், 50-ல் பயமுண்டாகும்; சாந்தியால் அக்காலம் குணமுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே சந்திரன் ரோகிணி ஓராவது பாதத்திலிருந்தால் எழுபது (70)-ல் சனி தெசையில் முடிவில் ஜாதகன் மரணமடைவான்.

5. ஜென்ம லக்கினம் மீனமாகி, லக்கினாதிபதி கும்பத்திலிருந்து அந்த ராசிநாதன் சந்திரனுடைய கேந்திரத்ல் இருந்தால் எழுபது (70) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கே சந்திரன் கேட்டை 4-வது பாதத்திலிருந்தால் மிதுனத்திலுள்ள ராகு தெசையில் கடைசியில் ஜாதகன் மரணமடைவான்.

6. ஜென்ம லக்கினம் மீனமாகி ஓராமாதிபதி எட்டாமாதிபதி 10-மாதிபதி இவர்கள் கேந்திரங்களில் அல்லது திரிகோணங்களில் அல்லது பதினோராமிடத்தில் இருந்தாலும் குரு சனி புத சுக்கிரர் கூடி 9-லிருந்து சந்திரன் உத்திரட்டாதி ஒன்றில் மீனத்திலிருந்தாலும் அறுபத்தேழு (67) வயதுண்டாகும். ஆறுமாதிபதி தெசையில் கடைசியில் மரணமுண்டாகும்.

7. ஜென்ம லக்கினம் மீனமாகி, லக்கினாதிபதி 2-லும் எட்டாமாதிபதி புதனுடன் கூடி 7-லுமிருந்து பூரட்டாதி 4-ல் இருந்தால் அறுபத்தாறு (66) வயது உண்டாகும். சூரிய தெசையில் சுய புக்தியில் தேக பீடையும் மேற்படி அறுபத்தாறு (66) வயதில் சித்திரை மாதத்தில் வளர் பிறையில் ஞாயிற்றுக்கிழமையில் விடியற்காலையில் அதிசாரத்தினால் மரணம் நேரிடும்.

8. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி லக்கினாதிபதி 12-லும் எட்டாமாதிபதி 11-லும், சனி கேந்திர திரிகோணத்திலும் (10-ல்) இருந்தால் மத்திமாயுளுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்கு மூலம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்தால் ராகு தெசையின் கடைசியில் மரணமுண்டாகும்.

9. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி, குரு லக்கின கேந்திரத்திலும் எட்டாமாதிபதி 9-லும் இருந்து மகர சனியால் மேற்படி குரு பார்க்கப்பட்டால் அறுபத்தைந்து (75) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்குச் சந்திரன் கடக ராசியில் இருந்தால் ஐந்தாவது தெசையில் முடிவில் மரண முண்டாகும்.

10. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி, லக்கினாதிபதி 2-லும் எட்டாமாதிபதி 11-லும்,சனி சுயக்ஷேத்திரத்தி லிருந்தால் பூர்ணாயுளுண்டாகும். இந்தக் கிரக யோகத்திற்குக் கும்பத்தில் சந்திரனிருந்தால் கேட தெசை சுக்கிர புக்தியில் எழுபத்தொன்று (71) வயதில் ஆவணி மாதத்தில் ஞாயிற்றுக்கிழமையில் திரியோதசியில் அதிசாரத்தினால் மரணமுண்டாகும்.

11. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி லக்கினத்தில் சனியிருந்தாலும் பார்த்தாலும் கூட ராகு கேதுக்களில் ஒருவர் லக்கினத்திலுமிருந்தால் ஆறு வருஷம் வரை பால தோஷமுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் லக்கினாதிபதி சொட்சேத்திரத்திலிருந்து சுக்கிரன் தன் உச்சத்திலிருந்தாலும் லக்கினாதிபதி மீனத்தில் இருந்து சந்திரன் மிருகசீரஷம் ஒராவது பாதத்திலிருந்தாலும் எழுபத்தேழு (77) வயது தீர்க்காயுளாக உண்டாகும்.

12. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி, லக்கினாதிபதி லக்கினத்திலும் எட்டாமாதிபதி 9-லும் இருந்து, புதன் லக்கினத்திற்குக் கேந்திரத்தில் (10-ல்) இருந்தால் அறுபத்தேழு (67) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் மகம் ஒராவது

பாதத்தில் சந்திரனிருந்தால் ராகு தெசை செவ்வாய் புக்தியில் மரணமேற்படும்.

13. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி, லக்கினாதிபதி 10-லும் எட்டாமாதிபதி 11-லும் இருந்தால் அறுபத்தைந்து (65) வயதுண்டாகும். இந்தக் கிரக யோகத்துடன் உத்திராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்தால் அறுபத்தைந்து (65) வயதில் துலா மாதத்தில் வெள்ளிக்கிழமையில் மாலையில் ஜாதகர் மரணமடைவார்.

14. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி, லக்கினாதிபதி 4-லும் எட்டாமாதிபதி 6-லுமிருந்து லக்கினத்தில் சந்திரனிருந்தால் அறுபத்தேழு (67) வயதுண்டாகும்.

15. ஜென்ம லக்னம் மீனம், ஆகி லக்கின பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67)வயதுடையவனாவான்.

16. ஜென்ம லக்னம் மீனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் இருந்தால் ஜாதகன் எழுபத்தைந்து (75) வயதுடையவனாவான்.

17. ஜென்ம லக்னம் மீனம் ஆகி, லக்கின பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்பம்) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபது (70) வயதுடையவனாவான். இதற்கே ஜாதகன் நாடியம்ச பேதத்தினால் எழுபத்திரண்டு (72) வயது முடையவனாவான்.

18. ஜென்ம லக்கினம் மீனமாகி லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலும் இருந்தால் ஜாதகன் எழுபத்தொன்று (71) வயதுடையவனாவான்.

19. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (கும்ப) ராசியிலும், பன்னிரண்டம் பாவாதிபாதி ஸ்திர (விருச்சிக) ராசி

யிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்திரண்டு (62) வயதுடையவனுவான்.

20. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (துலா) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னி) ராசியிலுமிருந்தால் ஜாதகன் எழுபத்திரண்டு (72) வயதுடையவனுவான்.

21. ஜென்ம லக்னம் மீனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (மகர) ராசியிருந்து, எட்டு பன்னிரண்டாம் பாவாதிபதிகள் உபய (தனுசு) ராசியிலிருந்தால் ஜாதகன் அறுபத்தேழு (67) வயதுடையவனுவான்.

22. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் இருந்தால் ஜாதகன் அறுபத்தொன்று (61) வயதுடையவனுவான்.

23. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி, லக்கின பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (கடக) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபது (60) வயதுடையவனுவான்.

24. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி லக்கின பாவாதிபதி உபய (மீன) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி ஸ்திர (விருச்சிக) ராசியிலும், இருந்தால் ஜாதகன் எண்பத்தொன்று (81) வயதுடையவனுவான்.

25. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி லக்கின பாவாதிபதி ஸ்திர (சிம்ம) ராசியிலிருந்து, எட்டாம் பாவாதிபதி உபய (மீன) ராசியிலும் பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலும் இருந்தால் ஜாதகன் வயது அறுபத்தைந்து (65) உடையவனுவான்.

26. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி லக்கின பாவாதிபதி சர (கடக) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி சர (துலா) ராசியிலுமிருந்தால் ஜாதகன் அறுபத்தைந்து (65) வயதுடையவனுவான்.

27. ஜென்ம லக்கினம் மீனம் ஆகி, லக்கின பாவாதிபதியும் எட்டாம் பாவாதிபதியும் ஸ்திர (விருச்சிக) ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (கன்னியா) ராசியிலிருந்தால் எழுபத்திரண்டு (72) வயதும், நாடியம்ச பேதப்பட்டால் எழுபது (70) வயதுமுண்டாகும்.

28. ஜென்ம லக்கினம் மீனமாகி,லக்கின பாவாதிபதி சர (மேஷ) ராசியிலும், எட்டாம் பாவாதிபதி ஸ்திர (ரிஷப) ராசியிலும், பன்னிரண்டாம் பாவாதிபதி உபய (மிதுன) ராசியிலுமிருந்தால் ஜாதகன் ஐம்பத்தாறு (56) வயதுடையவனாவான்.

குறிப்பு:—இன்னும் அதிக விதிகள் 2-வது மலரில் கொடுக்கப்படும்.



## முக்கிய கவனிப்பு.



அயிட்டம் நே. 1:— ஒரு ஜாதகத்தை எடுத்துக்கொண்டு அந்த ஜாதகத்திற்கு அந்த ஜாதகரின் ஜெனன லக்கினத்தை அனுசரித்து ஆயுளை நிர்ணயிக்கும் வழியை இப் புத்தகத்தில் கொடுத்திருக்கிறது. இந்த வழியை இதே ஜாதகரின் தாய், தகப்பன், மனைவி இவர்களின் ஆயுளையும் நிர்ணயிக்க உபயோகப்படுத்தலாம். உதாரணமாக ஒரு ஜாதகருடைய ஜென்ம லக்கினம் மேஷம் என்று வைத்துககொள்வோம். மாதுருஸ்தானம் ஒரு லக்கினத்திற்கு நான்காவது பாவம் ஆகும். அந்த நான்காவது பாவம் நாம் எடுத்துக்கொண்ட உதாரண ஜாதகத்திற்குப் பெரும்பாலும் கடகம் என்று வைத்துக்கொள்வோம். இப்போது ஜாதகருடைய ஜெனன ஜாதகத்திலுள்ள கிரக வரிசைகளையே வைத்துக்கொண்டு பலன் அறியவேண்டும், அதாவது ஜாதகருடைய ஜெனன ஜாதகமும் அவருடைய தாயருடைய ஜெனன ஜாதகமும், லக்கினம் ஒன்று தவிற, மற்றெல்லாவிதத்திலும் ஒரே மாதிரியான தென்று பாவித்துக்கொண்டும், ஜாதகருடைய தாயின் ஜென்ம லக்கினம் கடகம் என்று பாவித்துக்கொண்டும் இப் புத்தகத்தில் இந்தக் கடக லக்கினத்திற்குச் சொல்லிய விதிகளை உபயோகப்படுத்திக்கொண்டு

பலன் சொல்லவேணும். இப் புத்தகம் முழுவதிலும் சொல்லி யுள்ள விதிகளை ஜாதகருக்கு உபயோகப்படுத்துவதுபோல ஜாத கருடைய தாய்க்கும் உபயோகப்படுத்தலாம்.

(2) மேலும் உதாரணமாக மேலே சொல்லிய ஜாதகருடைய தகப்பனாரின் வயதை நிர்ணயக்க வேண்டுமானால் பிதுர் ஸ்தான மாகிய ஒன்பதாம் பாவம் இருக்கும் ராசியே பிதுரின் ஜென்ம லக்கினம் என்று பாவித்து ஜாதகரின் தாயார் விஷயமாக மேலே சொல்லிய பிரகாரம் தகப்பனாருக்கும் பலன்களைச் சொல்ல வேண்டும்.

(3) மேலும் ஒரு ஜாதகருடைய களத்திர பாவம் விஷயமாக முதல் களத்திர விஷயமாக ஏழாவது பாவத்தைக் கொண்டும் மூன்றுவது களத்திர விஷயமாக பதினேராவது பாவத்தைக் கொண்டும் தாய் தகப்பனாருக்கு மேலே சொல்லியதுபோல பலா பலன்களை அறியவேண்டு. இரண்டாவது தாரம் விஷயமாகச் சிலர் ஒன்பதாம் பாவத்தைக் கொண்டும், சிலர் எட்டாம் பாவத் தைக் கொண்டும், இன்னும் சிலர் இரண்டாம் பாவத்தைக் கொண் டும் இரண்டாவது தாரத்தின் பலா பலன்களைச் சொல்லவேண்டும் என்று பலவிதமாக அபிப்பிராயப் படுகின்றார்கள். எட்டாம் பாவத்தையும் இரண்டாம் பாவத்தையும் ஏககாலத்தில் அனு சரித்துப் பலன் இரண்டாந்தார விஷயமாகத் (தாய் தகப்பனா ருக்கு மேலே சொல்லியது போல) பலன் சொல்வது நலந்தரும்.

அயிட்டம் நே (2) இப் புத்தகத்தில் லக்கின பாவாதிபதி, எட்டாம் பாவாதிபதி, பன்னிரண்டாம் பாவாதிபதி ஆகிய இம் மூன்று பாவாதிபதிகளையே பெரும்பாலும் அனுசரித்து ஒரு ஜாத கருடைய வயதின் பிரமாண எண்ணைக் கொடுத்திருக்கறது. இந்த வயதைக் குறிக்கும் எண்ணை எப்பொழுது அப்படியே எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதைப் பற்றியும், எப்பொழுது எவ்விதம் கொஞ்சம் அதிகப்படுத்தியும் எப்பொழுது எவ்விதம் கொஞ்சம் குறைத்தும் நிர்ணயிக்கவேண்டும் என்பதைப் பற்றியும் பதிமூன் ருவது, அத்தியாயத்தில் சொல்லியுள்ளதை அவசியம் கவனிக்க வேண்டும். இப்படிக் கவனியாமல் அவசரப்பட்டு ஆயுள் எண்ணை நிர்ணயித்துவிடுவது நன்மையைத் தராது என்று அறியவும்.



# 13-வது அத்தியாயம்.

—◌]ः-ः[◌—

## நிகர ஆயுள் நிர்ணயம்.

அயிட்டம் நே. (3): ஒரு ஜாதகருடைய ஆயுளைப் பெரும் பாலும் (1) ஜென்ம லக்கின பாவம், (2) எட்டாம் பாவம் (3) பத்தாம் பாவம் (4) மூன்றும் பாவம், (5) இந்த நான்கு பாவாதி பதிகள், (6) சனி ஆகிய இந்த ஆறு அம்சங்களைக்கொண்டு நிர்ண யிக்கிருர்கள். சிலர் ஜென்ம லக்கினத்திற்குப் பார்ப்பது போலவே சந்திர லக்கினத்திற்கும் மேற்சொல்ய ஆறு அம்சங் களைக் கொண்டு பார்த்து ஜென்ம லக்கின ரீதியாயும் சந்திர லக் கின ரீதியாயும் வருகின்ற ஆயுளைச் சரிபடுத்தி ஒழுங்குபடுத்தி இவ் விரண்டு வழிகளையும் அனிசரித்துப் பார்த்து ஆயுளை நிர்ணயிக் கின்ருர்கள். இந்தக் புத்தகம் தழுவிய நாடிகளில் ஜென்ம லக்கின ரீதியாய் லக்கின பாவாதிபதி, எட்டாம் பாவாதிபதி பன்னிரண் டாம் பாவாதிபதி ஆகிய இம் மூன்று அம்சங்களை மாத்திரம் எடுத் துக்கொண்டு பலன் சொலுவதாலும் நாடி அம்சபேதத்தினுல் ஆயுள் கொஞ்சம் வித்தியாசப்படும் என்று சொல்லி இருப்பதா லும், மேலே சொல்லிய ஆறு அம்சங்களில் முதல் நான்கு அம்சங் களில் இருக்கும் கிரகங்களையும், இந்த ஆறு அம்சங்களைப் பார்க் கும் கிரகங்களையு கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் விட்டு விட்ட படியாலும் மேற்படி (a) லக்கின பாவாதிபதி, (b) எட்டாம் பாவாதிபதி (c) பன்னிரண்டாம் பாவாதிபதி ஆகிய இம் மூவர் இருக்கும் நிலையை அனுசரித்தே ஆயுளை நிர்ணயித்து இருப்பது துல்லிபமாகாது என்பதும் அது தோராயமானது என்பதும் அது கொஞ்சம் வித்தியாசப்படும் என்பதும் சிலருடைய அபிப்பிராயம். ஆயுள் விஷயமாக ஏககாலத்தில் ஒன்பது கிரகங்களும் ஆயுளைக் கொடுக்கின்றன அல்லது ஆயுளைக் கெடுக்கின்றன என்றும் இந்த ஒன்பது கிரகங்களின் தார தம்மியங்களை ஆராய்ச்சி செய்வது மிகவும் கஷ்டமான காரியம் என்றும் அதனுல்தான் ஆயுளை நிர்ண யிப்பது மிகவும் கஷ்டமான விஷயம் என்று தோற்றுகிறது. ஆகையால் நாடிகளில் சொல்லப்பட்டு இந்தப் புத்தகத்தில் லக்கின வாரியாய் (a) லக்கின பாவாதிபதி, (b) எட்டாம் பாவாதிபதி 3) பன்னிரண்டாம் பாவாதிபதி இவர்களை மாத்திரம் அனுசரித்து

சொல்லியிருக்கும் ஆயுளை முதல்தோராயமான (First Approximation) என்று பாவிக்கவும். இந்த முதல் தோராயமான ஆயுளைப் பின் வருமாறு நுல்லியமாக்கவேணும்.

(2) நாடிகளில் பன்னிரண்டாம் பாவத்தையும் அநுசரித்து ஆயுள் பலன் சொல்லி இருப்பதால் நாம் இந்தப் புத்தகத்திற்காக (1) ஜென்ம லக்கின பாவம், (2) எட்டாம் பாவம், (3) பத்தாம் பாவம், (4) மூன்றும் பாவம், (5) இந்த நான்கு பாவாதிபதிகள், (6) சனி, (7) பன்னிரண்டாம் பாவம், (8) பன்னிரண்டாம் பாவாதிபதி ஆகிய இந்த எட்டு அம்சங்களும், (9) இந்தஎட்டு அம் சங்களுடன் இருக்கும் அல்லது இந்த எட்டு அம்சங்களைப் பார்க் கும் கிரகங்கள் ஆகிய இந்த மொத்த ஒன்பது அம்சங்களையும் ஆராய்ச்சி செய்து நிர்ணயிக்கும் வயதை இரண்டாவது தோராய மான ஆயுள் (Second Approximation) என்று பாவிக்கவும். பிறகு இந்த இரண்டாவது தோராயமான ஆயுளை வைத்துக்கொண்டு மாரக தெசையையும் மாரக புக்தியையும் இந்த இரண்டாவது தோராயமான ஆயுளுக்குச் சமீபமாக வரும்படியாய்ப் பார்த்து இவ் விரண்டு அம்சங்களாகிய (1) இரண்டாவது தோராயமான ஆயுளை யும் (2) மாரக தெசா புக்தியையும் ஒன்றுக்கொன்று சரி தட்டி மாரக தெசையையும் புக்தியையும் நுல்லியமான ஆயுளையும் நிர்ண யிக்கவேண்டும்.

## இரண்டாவது தோராயமான ஆயுள் நிர்ணயம்.

அயிட்டம் நெ. 4 :—இரண்டாவது தோராயமான ஆயுளை நிர்ணயிப்பதில் (1) கிரகங்களின் சட் பலத்தையும், (2) ஒரு கிரக மானது பாவங்களையும் இதரக் கிரகங்களையும் பார்க்கும் பார்வை யின் அளவையும் (3) கிரக நட்பு, சமம், பகை என்ற விஷயத் தையும் கவனிக்கவேண்டும்.

அயிட்டம் நெ. 5 :—

கிரகங்களுக்கு நைசர்க்கிக நட்பு (மித்துரு), சமம், பகை (சத்துரு) இவைகளைக் காட்டும் சட்டம் நெ. 1.

| வரிசை எண். | கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | சூரியனுக்கு | — | ந | ந | ச | ந | ப | ப |
| 2 | சந்திரனுக்கு | ந | — | ச | ந | ச | ச | ச |
| 3 | செவ்வாய்க்கு | ந | ந | — | ப | ந | ச | ச |
| 4 | புதனுக்கு | ந | ந | ச | — | ச | ந | ச |
| 5 | குருவுக்கு | ந | ந | ந | ப | — | ப | ச |
| 6 | சுக்கிரனுக்கு | ப | ப | ச | ந | ச | — | ந |
| 7 | சனிக்கு | ப | ப | ப | ந | ச | ந | — |

சுலபமாக அடிக்கடி பார்க்க வேண்டியதற்காக இந்த வைசர்க்கிக மித்துரு, சத்துரு, சமம் இவைகளைக் காட்டும் கட்டத்தை இங்கு எடுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றது,

அயிட்டம் நே. (6) :—

கிரகங்கள் ஒவ்வொரு ஸ்தானத்தையும் பார்க்கும் பார்வையின் அளவு காட்டும் கட்டம் நெ. 2.

| | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | இராகு | கேது |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1-வது ஸ்தானம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 2-வது ஸ்தானம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 3-வது ஸ்தானம் | கால் | கால் | கால் | கால் | க | கால் | 1 | கால் | க |
| 4-வது ஸ்தானம் | முக் | முக் | 1 | முக் | மு | முக் | மு | முக் | மு |
| 5-வது ஸ்தானம் | அ | அ | அ | அ | 1 | அ | அ | அ | அ |
| 6-வது ஸ்தானம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 7-வது ஸ்தானம் | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| 8-வது ஸ்தானம் | முக் | முக் | 1 | முக் | மு | முக் | மு | முக் | மு |
| 9-வது ஸ்தானம் | அ | அ | அ | அ | 1 | அ | அ | அ | அ |
| 10-வது ஸ்தானம் | கால் | கால் | கால் | கால் | க | கால் | 1 | கால் | க |
| 11-வது ஸ்தானம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |
| 12-வது ஸ்தானம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 |

N. B. க என்றால் கால்; அ என்றால் அரை; மு, முக், என்றால் முக்கால் ஆகும்.

குறிப்பு :—சில புத்தகங்களில் பார்வையின் அளவை வெவ்வேறு விதமாகக் கொடுத்திருக்கின்றார்கள். ஆயினும் இந்தப்புத்த

கத்தை உபயோகப் படுத்துபவர்கள் இதில் மேலே கட்டத்தில் கொடுத்துள்ள பார்வையின் அளவை உபயோகப்படுத்தவும். இங்கு ஸ்தானம் என்ற பதம் இராசியையும், பாவத்தையும் தெரி விக்கும்.

குறிப்பு :—கிரகங்கள் ஒரு பாவத்தில் இருந்தால் அந்தப் பாவத்தை முழு பார்வையுடன் பார்ப்பதுபோல இந்தப்புத்தகத் திற்கு ஆயுளை நிர்ணயிப்பதில் வைத்துக்கொள்ளவும்.

அயிட்டம் நே. 7 :—

கிரகங்களின் சட் பலத்தின் அளவு விபரம்
கட்டம் நெ. 3.

| கிரகம் | முழு பலம் ரூபம் | | முக்கால் பலம் ரூபம் | | அரை பலம் ரூபம் | | கால் பலம் ரூபம் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | முழு எண் | வீசம் | முழு எண் | வீசம் | முழு எண் | வீசம் | முழு எண் | வீசம் |
| சூரியன் | 6 | 8 | 4 | 14 | 3 | 4 | 1 | 10 |
| சந்திரன் | 6 | 0 | 4 | 8 | 3 | 0 | 1 | 8 |
| செவ்வாய் | 5 | 0 | 3 | 12 | 2 | 8 | 1 | 4 |
| புதன் | 7 | 0 | 5 | 4 | 3 | 8 | 1 | 12 |
| குரு | 6 | 8 | 4 | 14 | 3 | 4 | 1 | 10 |
| சுக்கிரன் | 5 | 8 | 4 | 2 | 2 | 12 | 1 | 6 |
| சனி | 5 | 0 | 3 | 12 | 2 | 8 | 1 | 4 |

இராகு கேதுக்களுக்கு சட் பலம் அறிய:—இராகு இருக்கும் ராசியின் அதிபதியின் சட் பலத்தையே இராகுவின் சட பலம் என்று பாவிக்கவும். இராகுவின் முழு பலம், முக்கால்பலம், அரை பலம், கால் பலம் இவைகளின் அளவு என்பது இராகு இருக்கும் ராசியின் அதிபதிக்கு அட்டம் நெ. 7-ல் 3-வது கட்டத்தில் கொடு த்துள்ள அளவே ஆகும். இவ்விதமாகவே கேதுவுக்கும் கேது இருக்கும் ராசி அதிபதியைக் கொண்டு பார்த்துக்கொள்ளவும்.

அயிட்டம் நெ. (8)—

வயதில் சேர்க்கவேண்டிய அல்லது குறைக்க வேண்டிய வருஷத்தின் அளவு கட்டம் நெ. (4)

| சட்பலத்தின் விவரம் | பார்வையின் விவரம் | | | |
|---|---|---|---|---|
| | முழு பார்வை | முக்கால் பார்வை | அரை பார்வை | கால் பார்வை |
| | ஞூ-மீ-தி | ஞூ-மீ-தி | ஞூ-மீ-தி | ஞூ-மீ-தி |
| **(1) சூரியன், (4) புதன்** | | | | |
| முழு சட்பலம் | 18-00-00 | 13-06-00 | 9-00-00 | 4-06-00 |
| முக்கால் சட்பலம் | 13-06-00 | 10-01-15 | 6-09-00 | 3-04-15 |
| அரை சட்பலம் | 9-00.00 | 6-09-00 | 4-06-00 | 2-03-00 |
| கால் சட்பலம் | 4-06-00 | 3-04-15 | 2-03-00 | 1-01-15 |
| **(2) சந்திரன், (5) குரு, (7) சனி** | | | | |
| முழு சட்பலம் | 36-00-00 | 27-00-00 | 18-00-00 | 9-00-00 |
| முக்கால் சட்பலம் | 27-00-00 | 20-03-00 | 13-06-00 | 6-09-00 |
| அரை சட்பலம் | 18-00-00 | 13-06-00 | 9-00-00 | 4-06-00 |
| கால் சட்பலம் | 9-00-00 | 6-09-00 | 4-06-00 | 2-03-00 |
| **(3) செவ்வாய் (6) சுக்கிரன்** | | | | |
| முழு சட்பலம் | 27-00-00 | 20-03-00 | 13-06-00 | 6-09-00 |
| முக்கால் சட்பலம் | 20-03-00 | 15-02-07½ | 10-01-15 | 5-00-22½ |
| அரை சட்பலம் | 13-06-00 | 10-01-15 | 6-09-00 | 3-04-15 |
| கால் சட்பலம் | 6-09-00 | 5-00-22½ | 3-04-15 | 1-08- 7½ |

குறிப்பு :—இராகுவின் அளவு:—இராகு எந்த ராசியில் இருக்கின்றதோ அந்த ராசி அதிபதிக்கு அயிட்டம் நெ. (8)-லுள்ள 4-வது கட்டத்தில் கொடுத்துள்ள அளவை உபயோகப்படுத்தவும். இவ்விதமாகவே கேதுக்கும் கேது இருக்கும் ராசியின் அதிபதியின் அளவை உபயோகப்படுத்தவும்.

அயிட்டம் நெ. 9:—

நைசர்க்கிக சுபக்கிரகங்களும் நைசர்க்கிக பாபக்கிரகங்களும்:—

சூரியன்—சுபா அசுபபல மொத்தத்தில் $\frac{1}{2}$ (அரை) பாபி
செவ்வாய்— ,, ,, $\frac{3}{4}$ (முக்கால்) பாபி

குரு— சுபா அசுப பல மொத்தத்தில் 1 (ஒன்று) சுபன் அதாவது முழு சுபன்

சுக்கிரன்—சுபா அசுபபல மொத்தத்தில் $\frac{3}{4}$ (முக்கால்) சுபன்

சனி— ,, ,, 1 (ஒன்று) பாபி, அதாவது முழு பாபி

இராகு— ,, ,, 1 (ஒன்று) பாபி, அதாவது முழு பாபி

கேது— ,, ,, 1 (ஒன்று) பாபி, அதாவது முழு பாபி

சந்திரன்:—தேய்பிறை ஏகாதசி முதல் வளர்பிறை பஞ்சமி வரையிலும் 1 (ஒன்று) பாபி, அதாவது முழு பாபி
வளர்பிறை ஏகாதசிமுதல் தேய்பிறை பஞ்சமி வரையிலும் 1 (ஒன்று) சுபம் அதாவது முழு சுபன்

வளர்பிறை சஷ்டி முதல் வளர்பிறை தசமி வரையிலும் }
தேய்பிறை சஷ்டி முதல் தேய்பிறை தசமி வரையிலும் } சமன்
அதாவது சுபனும் அல்ல பாபனும் அல்ல.

சந்திரன் சமனாய் இருக்கும்போது பாவச் சக்கிரத்தில் இது வரையிலும் மேலே சொல்லப்பட்ட சுபனுடன் கூடினால் சுபனாவன், பாபியுடன் கூடினால் பாபியாவன்.

புதன்:—பாவச் சக்கிரத்தில் தனியாய் இருந்தால் சுபா அசுப பல மொத்தத்தில் $\frac{1}{2}$ (அரை) சுபன். பாவச் சக்கிரத்தில் புதன் சுபர்களாகிய குரு, சுக்கிரன், சுபனாய் வருகின்ற சந்திரன் இவர்களுடன் கூடினால் $\frac{1}{2}$ (அரை) சுபனாவன். பாவச் சக்கிரத்தில் புதன் பாபிகளாகிய சூரியன், செவ்வாய், சனி, ராகு, கேது பாபியாய் வருகின்ற சந்திரன் இவர்களுடன் கூடினால் $\frac{1}{2}$ பாபியாவன்,

புதன் சுபனுடனும் பாபருடனும் சம்மந்தப்பட்டிருந்தால் பாபர் பரிமாண அளவு சுபர் பரிமாணத்தைவிட அதிகமானல் புதன் ½ பாபி, மாறுபாடாக விருந்தால் புதன் ½ சுபன், இரண்டும் சமான மாகவிருந்தால் புதன் சமனுவன். சந்திரன் சுபனு பாபியா என்று நிர்ணயஞ் செய்துகொண்ட பிறகு புதன் சுபனு பாபியா என்று நிர்ணயஞ் செய்யவேண்டும். கிரக சுபா அசுப பரிமாணத்தைப் பல புத்தகங்களில் பலவிதமாய்க் கொடுக்கப்பட்டி ருக்கின்றபடியால் இங்கு கொடுக்கப்பட்டிருப்பதை இந்தப் புத்தகத்திற்காக உபயோகப்படுத்த வேண்டியது.

அயிட்டம் நெ. (10) :—

கிரகங்கள் 1, 8, 10, 3, 12-வது பாவங்களைப் பார்ப்பது

(1) குரு, சுக்கிரன், இவர்கள் ஒராவது, எட்டாவது, பத்தாவது, மூன்ருவது, பன்னிரண்டாவது பாவங்களைப் பார்த்தால் அயிட்டம் நெ. (8)-ல் 4-வது கட்டத்தில் கொடுத்துள்ள வருஷ மாத நாள் தொகையை ஒராவது தோராயமான ஆயுள் தொகையுடன் முழுதும் கூட்டவும்.

இங்கு சொல்லிய வருஷ மாத, நாள் தொகை என்பதை 4-வது கட்டத்திலிருந்து பார்க்கும் கிரகத்தின் சட் பல அளவையும், இந்தக் கிரகம் பாவத்தைப் பார்க்கும் பார்வையின் அளவையும் ஏககாலத்தில் அனுசரித்துத் தேடிப் பார்த்து எடுக்கவும். உதாரணயாகச் சூரியன் முழு சட் பலம் பெற்று அரை பார்வையுடன் ஒரு பாவத்தைப் பார்த்தால் சூரியனின் கீழ் முழு சட்பலம் என்ற கலத்திற்கு எதிரில அரை பார்வை என்ற் கலத்தின் கீழ் உள்ள ஷூ 9-00-00 என்பது நாம் தேடிப் பார்த்து எடுக்க வேண்டிய தொகையாகும்.

(2) சூரியன், செவ்வாய், சனி, ராகு, கேது இவர்கள் ஒராவது எட்டாவது, பத்தாவது, மூன்ருவது, பன்னிரண்டாவது பாவங்களைப் பார்த்தால் 4-வது கட்டத்தில் கொடுத்துள்ள தொகையை ஒராவது தோராயமான ஆயுள் தொகையிலிருந்து முழுதும் கழிக்கவும்,

(3) (a) புதன் சுபனுகி மேற்சொல்லிய பாவங்களைப் பார்த்தால் 4-வது கட்டத்தில் புதனுக்குக் கொடுத்துள்ள தொகையை

ஓராவது தோராயமான ஆயுள் தொகையுடன் முழுதுங் கூட்டவும்,

(b) புதன் பாபனுகி மேற்சொல்லிய பாவங்களைப் பார்த்தால் 4-வது கட்டத்தில் புதனுக்குக் கொடுத்துள்ள தொகையை ஓராவது தோராயமான ஆயுளில் இருந்து முழுதுங் கழிக்கவும்.

(4) (a) சந்திரன் சுபனுகி மேற்சொல்லிய பாவங்களைப் பார்த்தால் 4-வது கட்டத்தில் சந்திரனுக்குக் கொடுத்துள்ள தொகையை ஓராவது தோராயமான ஆயுள் தொகையுடன், சந்திரன முழு சுபனுனல் முழுதுங் கூட்டவும், அரைசுபனுனல் அரைப் பாகம் கூட்டவும்.

(b) சந்திரன் அசுபனுகி மேற்சொல்லிய பாவங்களைப் பார்த்தால் 4-வது கட்டத்தில் சந்திரனுக்குக் கொடுத்துள்ள தொகையை ஓராவது தோராயமான ஆயுள் தொகையிலிருந்து சந்திரன் முழு பாபியானுல், முழுதும் கழிக்கவும், அரை பாபியானுல், அரை பாகம் கழிக்கவும்.

அயிட்டம் நெ. 11 :—(1) ஜென்ம லக்கின பாவாதிபதி, (2) எட்டாம் பாவாதிபதி, (3) பத்தாம் பாவாதிபதி, (4) மூன்றும் பாவாதிபதி, (5) சனி, (6) பன்னிரண்டாம் பாவாதிபதி ஆகிய இந்த ஆறு அம்சங்களாகிய கிரகங்களைக் கிரகங்கள் பார்க்கும் விஷயம் :—

(1) குரு, சுக்கிரன் முழு சுபனுன சந்திரன் இவர்கள் பார்க்குங் கிரகமாகி, மேற் சொல்லிய ஆறு அம்சங்களில் அடங்கிய கிரகத்தைப் பார்த்தால், பார்க்குங் கிரகம் பார்க்கப்படும் கிரகத்திற்கு நட்பு ஆனுல் 4-வது கட்டத்தில் பார்க்குங் கிரகத்திற்குக் கொடுத்துள்ள தொகையை ஓராவது தோராயமான ஆயுள் தொகையுடன் முழுதுங் கூட்டவும், பகையானுல் 4-வது கட்டத்திலுள்ள தொகையில் பாதி கழிக்கவும், சமனுனல் 4-வது கட்டத்திலுள்ள தொகையில் பாதி சேர்க்கவும்.

(2) சூரியன், செவ்வாய், சனி, ராகு, கேது முழு பாபியாகிய சந்திரன் இவர்கள் பார்க்குங் கிரகமாகி, மேற்சொல்லிய ஆறு அம்சங்களில் அடங்கிய கிரகத்தைப் பார்த்தால், பார்க்குங் கிரகம் பார்க்கப்படும் கிரகத்திற்குப் பகை. ஆனுல் 4-வது கட்டத்தில் பார்க்குங் கிரகத்திற்குக் கொடுத்துள்ள தொகையை ஓராவது தோரா

யமான ஆயுள் தொகையிலிருந்து முழுதுங் கழிக்கவும், நட்பு அல்லது சமனானால் 4-வது கட்டத்திலுள்ள தொகையில் பாதி கழிக்கவும்.

(3) (a) புதன் சுபனாகி, பார்க்கும் கிரகமாகி மேற்சொல்லிய கிரகத்தைப் பார்த்தால் புதன் பார்க்கப்படும் கிரகத்திற்கு நட்பு ஆனால் 4-வது கட்டத்தில் புதனுக்குக் கொடுத்துள்ள தொகையை ஒராவது தோராயமான ஆயுள் தொகையுடன் முழுதுங்கூட்டவும், பகையானால் 4-வது கட்டத்திலுள்ள புதனுடைய தொகையில் பாதி கழிக்கவும், சமனானால் 4-வது கட்டத்திலுள்ள புதனுடன் தொகையில் பாதி சேர்க்கவும்.

(b) புதன் பாபனாகி, பார்க்கும் கிரகமாகி மேற்சொல்லிய கிரகத்தைப் பார்த்தால் புதன் பார்க்கப்படும் கிரகத்திற்குப் பகையானால் 4-வது கட்டத்தில் புதனுக்குக் கொடுத்துள்ள தொகையை ஒராவது தோராய ஆயுள் தொகையிலிருந்து முழுதுங் கழிக்கவும், நட்பு அல்லது சமனானால் 4-வது கட்டத்தில் புதனுக்குக் கொடுத்துள்ள தொகையில் பாதி கழிக்கவும்.

(4) (a) சந்திரன் அரை சுபனாகி, பார்க்கும் கிரகமாகி மேற்சொல்லிய கிரகத்தைப் பார்த்தால் சந்திரன் பார்க்கும் கிரகத்திற்கு நட்பு ஆனால் 4-வது கட்டத்தில் சந்திரனுக்குக் கொடுத்துள்ள தொகையில் அரை பாகத்தை ஒராவது தோராயமான ஆயுள் தொகையுடன் கூட்டவும், பகையானால் 4-வது கட்டத்தில் சந்திரனுக்குக் கொடுத்துள்ள தொகையில் கால் பாகம் கழிக்கவும், சமனானால் 4-வது கட்டத்தில் சந்திரனுக்குக் கொடுத்துள்ள தொகையில் கால் பாகம் சேர்க்கவும்.

(b) சந்திரன் அரை பாபியாகி பார்க்கும் கிரகமாகி மேற்சொல்லிய கிரகத்தைப் பார்த்தால் சந்திரன் பார்க்கும் கிரகத்திற்கு நட்பு ஆனால் 4-வது கட்டத்தில் சந்திரனுக்குக் கொடுத்துள்ள தொகையில் கால் பாகத்தை ஒராவது தோராய ஆயுள் தொகையிலிருந்து கழிக்கவும், பகையானால் 4-வது கட்டத்தில் சந்திரனுக்குக் கொடுத்துள்ள தொகையில் பாதி கழிக்கவும், சமனானால் 4-வது கட்டத்தில் சந்திரனுக்குக் கொடுத்துள்ள தொகையில் கால் பாகம் கழிக்கவும்.

அயிட்டம் நெ. 12 (a):—அயிட்டம் நெம்பர் பத்து பதினொன்றில் சொல்லிய பிரகாரம் செய்யும்போது (1) லக்கின பாவாதிபதி

(2) எட்டாம் பாவாதிபதி (3) பன்னிரண்டாம் பாவாதிபதி இவர்கள் ஒவ்வொரு லக்கினத்திற்குக் கொடுத்துள்ள விதிகளில் ஏற்கனவே தாங்கள் இருக்கும் ராசியிலிருப்பதால் (பத்தாவது அயிட்டத்தில் சொல்லிய தாவா பாவங்களைப் பார்ப்பதற்கு பத்தாவது அயிட்டத்திற் சொல்லிய கிரிகைகள் ஒன்றையுஞ் செய்யக்கூடாது ஏனென்றால் பத்தாவது அயிட்டத்தில் சொல்லியுள்ள கிரிகைகளையும் ஆலோசித்துத்தான் ரிஷிகள் நாடிகளில் வயதை நிர்ணயித்திருக்கின்றார்கள். நாம் மறுபடியும் பத்தாவது அயிட்டத்திற் சொல்லியவைகளிச் செய்தால் நாம் ஒருவித கிரிகைகளை இரண்டுதரம் செய்த தவறுதல் ஏற்படும். இவ்விதமாகவே (1) லக்கின பாவாதிபதி (2) எட்டாம் பாவாதிபதி (3) பன்னிரண்டாம் பாவாதிபதி இவர்கள் ஒவ்வொரு லக்கினத்திற்குக் கொடுத்துள்ள விதிகளில் ஏற்கனவே தாங்கள் இருக்கும் ராசியிலிருப்தால் தங்களுக்குள் எவரையாகிலும் பார்ப்பதற்குப் பதினோராவது அயிட்டத்திற் சொல்லிய பிரகாரம் கிரிகைகள் ஒன்றையுஞ் செய்யக்கூடாது. ஏனென்றால் இதற்கும் மேற்சொல்லிய காரணமே பொருந்தத்தக்கது.

(b) பத்தாவது பதினோருவது அயிட்டங்களில் சொல்லிய பிரகாரம் கிரிகைகளைச் செய்து ஓராவது தோராய ஆயுள் தொகையுடன் கூட்ட வேண்டிய பல தொகைகளையும் கூட்டவும், ஓராவது தோராய ஆயுள் தொகையிலிருந்து கழிக்க வேண்டிய பல தொகைகளையுங் கழித்தும் வருகின்ற நிகர தொகை இரண்டாவது தோராய ஆயுள் (Second Approximation) தொகை ஆகும்.

இப்புத்தகத்தில் கொடுத்துள்ள அயிட்டங்களில் உபயோகப் படுத்தியுள்ள நாடி அம்சங்கள் விவரம்.

மேஷ லக்கினம் :—(1) பங்கஜாம்சம், அயிட்டம் நெ. 8, 10, 16, 23, 32, (2) குசுமாம்சம் அயிட்டம் 9, 28, 31, (3) கமலாம்சம், அயிட்டம் நெ. 11, 20, (4) சுகதாம்சம் அயிட்டம் நெ. 12, 29, (5) சுதாம்சம், அயிட்டம் நெ. 14, 25 (6) மஞ்சுளாம்சம், அயிட்டம் நெ. 15 (7) சாரதாம்சம் அயிட்டம் நெ. 19, (8) குமுதாம்சம் அயிட்டம் நெ. 21, 27 ஆகும். மிகுந்த லக்கினங்களின் நாடி அம்ச விஷயம் 2-வது டலரில் கொடுக்கப்படும்.



# 14-வது அத்தியாயம்.



துவாதச லக்கினங்களுக்குப் பொருந்துகிற பொதுப்பலன்கள் :—

## (1) கோட்சார சனி பலன்.

(1) ஜென்ம லக்கினத்திற்கு எட்டாம் பாவாதிபதி நவாம்சச் சக்கிரத்தில் எந்த ராசியிலிருக்கின்றாரோ அந்த நவாம்ச ராசியிலாவது * அல்லது ஜென்ம லக்கினத்திற்கு ஆறுவது பாவாதிபதி நவாம்ச சக்கிரத்தில் எந்த ராசியிலிருக்கின்றாரோ அந்த ராசித் திரிகோணங்களில் கோட்சாரத்தில் சனி சஞ்சரிக்கும்போது ஜாதகருக்குத் தேக பீடையும், ரோகத்தால் பீடிக்கப்படுதலும் உண்டாகும். அந்தக் காலங்களில் சனிப் பிரீதி செய்தால் சுகமுண்டாகும்.

*குறிப்பு :—எட்டாம் பாவாதிபதி இருக்கிற நவாம்ச ராசியிலாவது அதற்குத் திரிகோண ராசியிலாவது சனி கோட்சாரத்தில் வரும்போது கூட அதே பலன்கள் உண்டாகும்.

(2) மேலும் ஜாதகருக்குச் சனி எந்த பாவத்திற்கு எட்டில் கோசாரத்தில் இருக்கின்றாரோ அல்லது எந்த பாவத்தின் அஷ்டமஸ்தானத்தைப் பார்க்கின்றாரோ அத்தந்த பாவத்திற்குக் கிலேசத்தையும், பீடையையும் உண்டு பண்ணுவார். மேலும் அந்தந்த பாவங்களின் அஷ்டமாதிபதியின் தெசை, புக்திக் காலங்களில் ஜோதிட பண்டிதர்கள் நன்றாய் யோசித்து மேற்சொல்லிய பலாபலன்களைச் சொல்லவும்.

(3) மேலும் ஜாதகருக்கு ஜென்ம லக்கினாதிபதி நின்றிருக்கும் நவாம்சையின் ராசியில் சனி கோட்சாரத்தில் வரும்போது ஜாதகனுக்குத் தேக பீடையும் ஜாதகருடைய அம்மான் ஜனங்களுக்குக் கெடுதியும் உண்டாகும்.

(4) மேலும் ஜாதகருக்கு ஜென்ம லக்கினத்திற்கு இரண்டாம் பாவாதிபதியின் நவாம்சையில் சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்கும் காலம் ஜாதகருடைய மனைவிக்குப் பீடையும், இந்த இரண்டாமாதிபதி தன் உச்சாம்சத்தி லிருந்தால் தேகத்திற்கு ஜாட்டியமும் உண்டாகும்.

(5) மேலும் ஜென்ம லக்கினத்திற்கு நான்காம் பாவாதிபதி நவாம்சத்தில் இருக்கும் ராசியில் சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்கும் சமயம் ஜாதகனுடைய தகப்பனுக்கு அரிஷ்டம் உண்டாகும்.

(6) மேலும் ஜென்ம லக்கினத்திற்கு ஐந்தாம் பாவாதிபதி நவாம்சத்தில் இருக்கப்பட்ட இராசிக்கு முன்போல் (அதாவது கோட்சாரத்தில்) வருங்காலம் ஜாதகனுடைய புத்திரனுங்குப் பீடை உண்டாகும்.

(7) மேலும் ஜென்ம லக்கினத்திற்கு ஆறுமாதிபதி நவாம்சத்தில் நின்ற ராசித் திரிகோணத்தில் கோட்சாரத்தில் சனி வரும் சமயம் ஜாதகனுக்குச் சத்துரு பீடையும் மாமனுருக்கு மரணமும் உண்டாகும்.

(8) ஜாதகருடைய ஜென்ம லக்கினத்திற்கு ஏழாம் பாவாதிபதி நவாம்சத்தில் நிற்கும் ராசியில் சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்குஞ் சமயம் ஜாதகருக்கு வெளிதேச வாசமும் தாய் வழிப் பாட்டன் ஜனங்களுக்குக் கெடுதியும் உண்டாகும்.

(9) மேலும் ஒன்பதாம் பாவாதிபதி இருக்கும் நவாம்ச ராசியில் முன் சொன்ன மாதிரி சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்கும் போது அதிக விரயம் உண்டாகும்.

(10) மேலும் பத்தாம் பாவாதிபதி நவாம்சத்தில் நின்றிருக்கும் ராசியில் சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்கும் சமயம் ரோகமும் ஜாதகருடைய ஜனங்களுக்கு அரிஷ்டமும் சம்பவிக்கும்.

(11) மேலும் பதினோராம் பாவாதிபதி நவாம்சத்தில் இருக்கப்பட்ட ராசியில் சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்கும் சமயம் ஜாதகனுடைய தாய்க்கு அரிஷ்டமும் (மாற்றுந்தாய் இருந்தால்) மாற்றுந்தாய்க்குப் பீடையும் உண்டாகும்.

(12) மேலும் பன்னிரண்டாம் பாவாதிபதி நவாம்சத்தில் இருக்கும் ராசியில் கோட்சாரத்தில் சனி சஞ்சரிக்கும் சமயம் ஜாதகனுடைய மித்ர பீடை உண்டாகும்.

(13) ஜென்ம லக்கினத்திற்கு ஆறு, எட்டுப் பன்னிரண்டு முதலிய பாவாதிபதிகள் நவாம்சத்தில் எந்த ராசியிலிருக்கின்றார்களோ அந்த ராசிகளிலும், இந்த ஆறு எட்டுப் பன்னிரண்டு முதலிய பாவாதிபதிகள் இருக்கும் ராசிநாதர்களின் பார்வையுள்ள ராசிகளில் கோட்சாரத்தில் சனி சஞ்சரிக்கும்போது ஜாதக

ருடைய தேகத்திற்கு உபத்திரவமும், பீதியும் உண்டாகும். எந்த எந்த பாவகாரர்களின் நவாம்ச ராசியில் கோட்சாரத்தில் சனி வருகிறரோ அந்த அந்த பாவத்தினல் குறிக்கப்படும் மானிடபிற விக்குப் பீடையும் மனேவியாதியும் உண்டாகும்.

(14) மேலும் ஜென்ம காலத்தில் சூரியன் இருக்கும் ராசித் திரிகோணங்களில் சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்கும் சமயம் ஜாதகருடைய தகப்பனுக்குப் பீடையும், கஷ்டமும், தகப்பன் இனத்தாருக்கு அரிஷ்டமும் உணடு.

(15) மேலும் ஜென்ம காலத்தில் சந்திரன் இருக்கும் ராசித் திரிகோணங்களில் சனி கோசாரத்தில் வருஞ்சமயம் ஜாதகனு டைய தாய்க்குப் பீடையும், தாய் வரக்கத்தினர்களுடன் அகா ரணமாக வீண் மனஸ்தாபமும், தாய் வர்க்கத்தினர்களுக்குக் கஷ்டமும் அரிஷ்டமும் உண்டாகும்.

(16) மேலும் செவ்வாய் ஜெனன காலத்தில் இருக்கும் ராசித் திரிகோணத்தில் கோட்சாரத்தில் சனி வரும்போது ஜாதகருடைய சகோதரனுக்குப் பீடையும், கஷ்டமும், சகோதரவர்க்கத்தின ருக்கு அரிஷ்டமும் உண்டாகும் இவ்விதமாகவே மற்ற கிரக திரி கோணங் களுக்கும் அந்தந்த கிரகத்தின் காரகப்படி பலன் உண் டாகும்.

(17) மேலும் ஜெனன காலத்தில் புதன் இருக்கும் ராசித் திரிகோணங்களில் கோட்சாரத்தில் சனி வரும்போது ஜாதகரு டைய அம்மான் வர்க்கத்தினருக்குப் பீடையும் அரிஷ்டமும் உண்டாகும்.

(18) மேலும் ஜெனன காலத்தில் குரு இருக்கும் ராசித் திரி கோணத்தில் சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்கும் சமயம் ஜாதக ருடைய புத்திரனுக்கும் புத்திர வர்க்கத்தினருக்கும் பீடையும் அரிஷ்டமும் உண்டாகும்.

(19) மேலும் ஜெனன காலத்தில் சுக்கிரனிருக்கும் ராசித் திரிகோணத்தில் சனி கோட்சாரத்தில் வரும் சமயம் ஜாதகனு டைய மனைவிக்குப் பீடையும் மனைவி வம்சத்தினருக்கு அரிஷ்ட மும் உண்டாகும்.

(20) மேலும் ஜெனன காலத்தில் சனி இருக்கும் ராசித் திரி கோணத்தில் சனி கோட்சாரத்தில் வருஞ்சமயம் ஜாதகனுக்குத் தேக பீடையும் அரிஷ்டமும் உண்டாகும்.

(21) மேலும் ஜெனன காலத்தில் ராகு இருக்கும் ராசித் திரி கோணத்தில் கோட்சாரத்தில் சனி சஞ்சரிக்குஞ் சமயம் ஜாதக ருடைய தகப்பன் வழி பாட்டனருக்குப் பீடையும் மரணமும் உண்டாகும்.

(22) மேலும் ஜெனன காலத்தில் கேது இருக்கும் ராசித் திரிகோணத்தில் கோட்சாரத்தில் சனி சஞ்சரிக்குஞ் சமயம் ஜாத கருடைய தாய் வழி பாட்டி வர்க்கத்தில் அரிஷ்டமும் தாய் வழி பாட்டிக்கு மரணமுண்டாகும்.

(23) மூன்றும் பாவாதிபதி நவாம்சத்தில் நின்ற ராசியில் சனி கோட்சாரத்தில் வரும் சமயம் ஜாதகருடைய சகோதரருக்குப் பீடை உண்டாகும்.

(24) நான்கம் பாவாதிபதி நவாம்சையில் நின்ற ராசியில் கோட்சாரத்தில் சனி சஞ்சாரம் செய்யுஞ் சமயம் ஜாதகருடைய தாய்க்குப் பீடையும் மரணமும் உண்டாகும்.

(25) புத்திரகாரகன் நவாம்சையில் இருக்கும் ராசியில் சனி கோட்சாரத்தில் வருஞ் சமயம் ஜாதகருடைய புத்திரனுக்குப் பீடை உண்டாகும்.

(26) ஆறும் பாவாதிபதி நின்ற நவாம்ச ராசியில் சனி கோட்சாரத்தில் வருஞ் சமயம் அல்லது சஞ்சரிக்குஞ் சமயம் ஜாதகருக்குத் தாயாதிகளால் பீடை உண்டாகும்.

(27) எழாம் பாவாதிபதி நின்ற நவாம்ச ராசியில் கோட் சாரத்தில் சனி வருஞ் சமயம் அல்லது சஞ்சரிக்குஞ் சமயம் ஜாத ருடைய மனைவிக்குப் பீடை உண்டாகும்.

(28) ஒன்பதாம் பாவாதிபதி நின்ற நவாம்ச ராசியில் சனி கோட்சாரத்தில் வருஞ் சமயம் அல்லது சஞ்சரிக்குஞ் சமயம் ஜாதகருக்குத் தன லாபம் உண்டாகும்.

குறிப்பு :—முன்பு 9-வது அயிட்டத்தில் சொல்லியபடி அதிக விரையமும் உண்டாகும். அதாவது தன லாபமும் விரையமும் ஆக இவ்விரண்டும் உண்டாகும்.

(29) பத்தாம் பாவாதிபதி நின்ற நவாம்ச ராசியில் சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்கும் சமயம் அல்லது வரும் சமயம் ஜாத கருக்குத் திரவிய சம்பாதனை உண்டாகும்.

(30) லாபாதிபதி நின்ற நவாம்ச ராசியில் சனி கோட்சாரத்தில் சஞ்சரிக்கும் சமயம் அல்லது வருஞ்சமயம் ஜாதகருக்குத் தன லாபமுண்டு.

(31) பன்னிரண்டாம் பாவாதிபதி இருக்கும் நவாம்ச ராசியில் கோட்சாரத்தில் சனி முன்போல சஞ்சரிக்குஞ் சமயம் அல்லது வருஞ்சமயம் ஜாதகருக்கு விரயம் உண்டாகும்.

குறிப்பு:—இந்த வேறு மதத்தில் ஜென்ம லக்கினாதிபதி இரண்டாமாதிபதி விஷயமாக ஒன்றுஞ் சொல்லவில்லை. ஆகையால் அயிட்டம் நெ. 3, 4, யைப் பார்க்கவும். இந்த வேறு மதத்தில் ஐந்தாம் பாவாதிபதி எட்டாம் பாவாதிபதி விஷயமாக அயிட்டம் நெ. 6-லும், 1-லும் சொல்லியதே சொல்லியிருக்கிறது. இதைக் கவனிக்கவும்.

(32) ஆறும் பாவத்தில் இருக்கும் ராகு தெசை வந்தால் ஜாதகர் தன் சத்ருக்களை ஜெயித்துப் பிரதாப மடைவார். கிரக மாலிகா யோக ஜாதகத்தில் மேற்படி ராகு தெசை வந்தால் ஜாதகர் நல்ல யோகத்தை அடைவார்.

(33) மேலும் மேற்படி ஆறும் தெசை சுய புக்தியில் ஜாதகர் சத்துரு பீடையடைவார். ரிண ரோகத்தில் ஜாட்டியமும் சாந்தியால் சுகமும் உண்டாகும்.

(34) மேலும் ஜாதகருடைய ஏழாம் நட்சத்திராதிபதி தெசையில் சுய புக்தியில் ஜாதகருடைய தேகத்திற்குப் பீடை யுண்டாகும், லோகாந்திரப் பிராப்த்தியும் உண்டாகும்.

(35) ஆறு, எட்டுப் பன்னிரண்டுக் குடையவர்களின் தெசை புக்திக் காலங்களில் ஜாதகருக்கு உபத்திரவமும், அக்காலங்களில் ஆறு, எட்டுப் பன்னிரண்டாம் ராசிகளின் மாதங்களிலும், இம் மூன்று ராசிகளின் அதிபதிகளினுடைய வாரங்களிலும் தேக ஆயாசமும், தேக எரிச்சலும், பீடையும், அதிக விரயமும், ராஜ கோபமும், ஆகிய இப்பலன்கள் எல்லாத் தெசைகளிலும் உண்டாகும்; கேந்திரத்திரிகோண அதிபதிகளின் தெசையிலும் புக்தியிலும் இந்த அதிபதிகளின் ராசி மாதத்திலும் சுப, சோபன காரியமும், தன லாபமும், சுகமும, விசித்திர வஸ்து லாபமும், தன் பெயர் பத்திரிகைகளில் வருதலும் உண்டாகும். தாரா பலன்களின் அனுசரணையாகச் சுபமும், சுகமும் உண்டாகும்.

முற்றிற்று.

# புஸ்தக விளம்பரம்.



C. G. ராஜன் B.A., இவர் குமாரர் C. சுப்பிரமணியம், B.A., (Honours) என்னும் C S மணியம் ஆகிய இவர்களால் எழுதப் பட்டதும், பார்வையிடப்பட்டதுமான புஸ்தகங்கள் முதலியன விபரம். இவைகள் எங்கள் கம்பெனி புத்தகங்கள்.

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| 1. ஜாதக கணிதம் முதல் பாகம் என்னும் ஜோதிட கிரக சட் பலம் ஆயுள் கணிதம் நான்காம் பதிப்பு அச்சியிலிருக்கிறது .... | | | |
| 2. ஜாதக கணிதம் இரண்டாம் பாகம் என்னும் ஜாதகப் பலா பலன்கள் நிர்ணயம் அச்சியில் இருக்கிறது .... | | | |
| 3. ஜாதக கணிதம் மூன்றும் பாகம் என்னும் ஜாதக ராஜ மனோரஞ்சிதம்—மலர் 1 .... | 3 | 4 | 0 |
| 4. ஜாதக கணிதம் நான்காம் பாகம் என்னும் ஜாதக ராஜ மனோரஞ்சிதம்—மலர் 2 .... | 2 | 4 | 0 |
| 5. ஜாதக சிரோன்மணி என்னும் வராஹ மிஹிரருடைய பிருஹத் ஜாதகம் .... | 2 | 0 | 0 |
| 6. தெசா புத்தி சிந்தாமணி 2-ம் பதிப்பு .... | 3 | 0 | 0 |
| 7. நவக்கிரக ஸ்புட கணனம்—6300ஞுத்திற்கு தமிழ் .... | 5 | 0 | 0 |
| ,, ,, ,, இங்கிலீஷ் .... | 5 | 0 | 0 |
| 8 ஜாதக தெசாரிஷ்ட நிவாரணி 2-ம் பதிப்பு .... | 1 | 0 | 0 |
| 9. லக்கின ஸ்புட பாவஸ்புட கணிதம்-தமிழ் .... | 1 | 8 | 0 |
| 10. ,, ,, இங்கிலீஷ் .... | 1 | 4 | 0 |
| 11. ஜாதக ராஜ பாவ இருவாக்ஷி-களத்திர பாவம் மலர்-1 .... | 0 | 10 | 0 |
| ,, ஆயுள் பாவம் மலர்-1 .... | 1 | 10 | 0 |
| ,, ஜீவன பாவம் மலர்-1 .... | 1 | 2 | 0 |
| ,, ,, புத்திர பாவம் .... | 1 | 14 | 0 |
| 12. ஜாதக ஜம்பு நாதீயம் .... | 0 | 12 | 0 |
| 13. ஜாதக சர்வார்த்த சிந்தாமணி .... | 2 | 4 | 0 |
| 14. சென்ற 63 வருஷத்திய கிரகங்களின் கிராந்தி. | 2 | 0 | 0 |

15. சர்வ முகூர்த்த நிர்ணய விதிகள் என்னும் காலவிதானம் .... 1 10 0

16. சுகப் பிரம்மரிஷி வாக்கியம் என்னும் ஜாதக சுகர் வாக்கியம் முதற் பாகம் .... 1 6 0

17. ஜாதக அஷ்டகவர்க்கத் தீபிகை-பலா பலன்களுடனும் அஷ்டகவர்க்கம் சுலபமாய்ப்போட அஷ்டகவர்கச் சக்கிரம் செய்யும் வழியுடனும் அச்சியில் இருக்கிறது .... 1 8 0

18. பழைய பஞ்சாங்கங்கள்-வாக்கியமும்-திருக்கணிதமும் பல கம்பெனிகளுடையது. ஒரு காப்பியின் விலை .... 0 8 0

19. பழைய (1) கிரீன்விச்சு (2) அமெரிக்கன் நாடிகல் ஆல்மெனெக்கு, (3) ஜெர்மனி, (4) பிரான்சு, (5) ஸ்பெயின் ஆல்மனெக்கு ஒரு காப்பியின் விலை அதன் விலைக்கு இரண்டுமடங்கு விலைக்கு மேற்படாது 10 0 0

*20. பிறர் உதவி இன்றி தாமே ஜாதகப் பலனை அறியக் கூடிய ஜாதக சுய போதினி 1-வது வாசகம் 2. ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் 3. 22. ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் 4. 23. ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் 5. 24. சுகப்பிரம்ம ரிஷி வாக்கியம் என்னும் சுகர் வாக்யம் 2-வது பாகம் துவாதச பாவங்கள், சுகர் நாடி உதாரண ஜாதகங்களுடன் செய்யுள். 25. சத்தியாச்சாரியாருடைய "ஜாதக சத்தியாச்சாரியம்" 26. சத்தியாச்சாரியாருடைய துருவ நாடியில் சொல்லிய முந்நூறு நாடி அம்சங்களின் பலாபலன்களும் உதாரண துருவ நாடி ஜாதகங்களும். 27. பிருஹத் பராசர ஹோரா சாஸ்திரம். 28. பலபத்திரருடைய ஹோரா ரத்தினம். (இவைகள் எல்லாம் தமிழ் புத்தகங்கள் அச்சியிலிருக்கிறது சீக்கிரம் வெளிவரும், இவைகள் எல் எங்கள் கம்பெனி புத்தகங்கள். இதர எல்லா கம்பெனியிலுள்ள ஜோதிடம், வைத்தியம் மற்ற புத்தகங்களுக்கு ஆர்டர் கொடுத்தால் வாங்கி அனுப்பப்படும். இதர கம்பெனியின் புத்தகங்கள் வேண்டுவோர் முன்னதாக முன் பணம் பாதிக்குக் குறையாமல் அனுப்பவேண்டியது.

கிடைக்குமிடம் :—C. சுப்பிரமணியம் & பிரதர்ஸ்
C. G. பூரேனியா பிரஸ்,
31, ஆயலூர் முத்தையா முதலி தெரு, சென்னை.

# "ஆந்திர கேசரி"

## (சர்வமுகூர்த்த சித்தாந்த பஞ்சாங்கம்)

(தெலுங்கில்) (Regd.)

இது ஆந்திர தேசத்தாருக்கும் தென்னாட்டிலுள்ள எல்லா தெலுங்கர்களுக்கும் மிகவும் உபயோகமான தெலுங்கு பஞ்சாங்கம். ஆந்திரர்களும் தெலுங்கர்களும் அனுஷ்டித்துவரும் சித்தாந்த கணன முறைப்படி இதில் திதி, நட்சத்திரம், யோகம், கரணம் முதலியவைகள் கணிக்கப்பட்டிருக்கின்றன. தெலுங்கர்களுடைய பரம்பரை வழக்கம், மதம் முதலியவை அனுசரித்து இவர்களுடைய தர்ம சாஸ்திரம், நிபந்தனக் கிரந்தங்கள் ரீதியாய் விரதாதி பண்டிகை முதலிய விஷயங்களை நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. இதில் நாழிகை விநாடிகளுக்குச் சரியான இங்கிலீஷ் கடியாரமணி நிமிஷம் எல்லோரும் சுலபமாய்த் தெரிந்துகொள்ளும்படியாய்க் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இதில் கிரஹணம் கிரகஸ்புடம் முதலியவைகளைத் தற்காலத்து துல்லியமான கணன முறைப்படி துல்லியமாகக் கணித்து கொடுக்கப்பட்டிருக்கின்றது. இதில் ஜோதிடர்களுக்கும் மற்றவர்களுக்கும் தேவையான அனேக பொது விஷயங்கள் அடங்கி யிருக்கின்றன. ஆகையால் இது வைதிகர்களுக்கும், ஜோதிடர்களுக்கும் மிகவும் உபயோகமானது. இதிலுள்ள விஷயங்களை நாளுக்கு நாள் அதிகப்படுத்திக்கொண்டு வரப்படும்.

இது கிருஷ்ணாஜில்லா-டிவி, தாலுக்காவிலுள்ள நிம்மகட்டா கிராமத்தில் வசித்திருந்த தெலுங்கு சித்தாந்தி பரம்பரையைச் சேர்ந்த தெலுங்கு சித்தாந்தி (1) வாவிலால கூசின்னு என்னும் சித்தாந்தி; நாமகள் திருக்கணித பஞ்சாங்கம், தென்னாட்டு வாக்கிய பஞ்சாங்கம் ஆகிய இவைகளின் ஆசிரியர்களாகிய (2) C. கோவிந்தராஜ சித்தாந்தி B. A., (Mathematics) (3) சித்தாந்தி C. S. மணியம் என்னும் சித்தாந்தி C. சுப்பிரமண்யம் B. A., (Honours) இவர்களால் கணிக்கப்பட்டும் தயார் செய்யப்பட்டதுமாகும்.

---

## வெளி வருகிறது! விரைவில் வெளி வருகிறது!!

புதிதாக எளிய முறையில் தாமே பிறர் உதவியின்றி ஜோதிடம் கற்று ஜாதகப் பலா பலன்களை அறிய விரும்பும் ஆண், பெண், சிறுவர்களுக்கு ஏற்ற தோழனாகிய "ஜோதிட சுய போதினி" இது தமிழில் சி ஜி. ராஜன் B.A., (Mathematics) அவர்களாலும், அவர் குமாரர் C. S. மணியம் B.A., (Honours) அவர்களாலும் எழுதப்பட்டதாகும்.

கிடைக்குமிடம் :—C. சுப்ரமண்யம் அண்டு பிரதர்ஸ்
புக்செல்லர்ஸ் அண்டு பப்ளிஷர்ஸ்
நெ 31, ஆயலூர் முத்தையா முதலி தெருவு,
சௌகார்பேட்டை, மதராஸ்.

# தென்னாட்டு பஞ்சாங்கம்

## வாக்கியம்,

இது தென்னாட்டிற்கென்றே பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட தமிழ் வாக்கிய பஞ்சாங்கம். இதைத் தென்னாட்டு ஆஸ்திகர்களும், வைதிகர்களும், தங்கள் வீடுகளிலும், கோயில்களிலும் தங்கள் தங்கள் பூர்வீக தர்ம சாஸ்திரம், நிபந்தனக் கிரந்தம், பரம்பரை வழக்கம் முதலிய கொள்கைகளைக் கைவிடாமல் அனுஷ்டிக்க வேண்டும் என்ற ஆசையை உடையவர்களும் அனுஷ்டிக்கு மாறு தயார் செய்திருக்கிறது. இது பூர்வீக கணித முறைப்படி தயார் செய்யப்பட்ட (பஞ்சாங்கத்தின் பஞ்ச அங்கங்களாகிய) 1-வாரம், 2-திதி, 3 நட்சத்திரம், 4-யோகம், 5-கரணம் ஆகிய இந்த ஐந்து அங்கங்களை அநுசரித்து இப்பஞ்சாங்கத்தில் விரதாதி, உற்சவாதி, ஸ்ராத்தாதி, விஷயங்கள் வைஷ்ணவ, சைவ, ஸ்மார்த்த, மத்வ, மதாச்சார பரம்பரை வழக்கம் பிரகாரம் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன. ஆகையால் இது ஆஸ்திகர்களுக்கும், வைதிகர்களுக்கும், தங்கள் குடும்ப தர்ம சாஸ்திரங்களையும், ஆச்சாரங்களையும் அனுசரித்து வருபவர்களுக்கும், கோயில்களி லுள்ளவர்களுக்கும் மிகவும் உபயோகமானது. இதில் அனேக பொது விஷயங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது நாமக்கள் திருக்கணித பஞ்சாங்கத்தின் ஆசிரியர்களாகிய (1) C. கோவிந்த ராஜன், B A, (Mathematics), (2) C. S. மணியம் என்னும் C சுப்பிரமணியம், B A (Honours) இவர்களால் கணிக்கப்பட்டு தயார் செய்யப்பட்டன வாகும். இப் பஞ்சாங்கத்தில் கிரகஸ்புடங்களும், கிரஹணங்களும் தற்காலத்திற்குச் சரியாயும், துல்லியமாயும் இருக்கும்படியாகச் செய்யப்பட்டிருக்கின்றன. இப் பஞ்சாங்கத்தை உபயோகப்படுத்தி நன்மையை அடையுமாறு கோரப்படுகின்றது.



பஞ்சாங்க ஆசிரியர்
C. G ராஜன் B.A., என்னும்
C. கோவிந்த ராஜன், B.A.,
(Mathematics)

குறிப்பு :—இப்பஞ்சாங்கம் (இதற அகல வாக்கிய பஞ்சாங்களைப்போல் இல்லாமல்) தற்கால நவீன முறைப்படி ஆண், பெண், எல்லோரும் சுலபமாக அறியும்படி காலங் கட்டி திதி, நட்சத்திரம் இவைகளுக்குறிய நாழிகை, வினடியும் அதற்கு ஏற்ற மணி-மினிட்டும் கொடுக்கப்பட்டு, ராயல் சைஸில் அச்சிடப்பட்டது.

ஆசிரியர் C. G. கோவிந்தராஜன், போட்டோ படத்தைப் பார்த்து வாங்கவும்.

உ

கடவுள் துணை.

ஜாதக ராஜ "பாவ இருவாக்ஷி"

நான்காம் பாகம் என்னும்

# புத்திர பாவம்.

மலர் 1.

(புத்திர பாவம் அல்லது ஐந்தாம் பாவம்)

இதன் ஆசிரியர்கள்

"நாமகள் திருக்கணித பஞ்சாங்கம்" "தென்னாட்டு வாக்கிய பஞ்சாங்கம்" இவைகளின் கணிதரும், பிருஹத்ஜாதகத்தின் பதிப்பாசிரியரும், ஜாதக கணிதத்தின் ஆசிரியரும், இராஜ ஜோதிட கணிதம் என்னும் நவக்கிரக ஸ்புட கணிதத்தின் ஆசிரியருமாகிய

ஜோதிட பூஷண

C. கோவிந்த ராஜன், என்னும்

(1) C. G. ராஜன், B. A., (MATHEMATICS)

அவரின் குமாரராகிய

C. S. மணியம் என்னும்

(2) C. சுப்பிரமணியம், B. A., (Honours)

சென்னை, சௌகார்பேட்டை, கிருஷ்ணப்ப நாய்க்கன் குளத்திற்கு அடுத்த ஆயலூர் முத்தைய்யா முதலி தெருவு, 36-வது நெம்பர் வீடு

C. சுப்பிரமணியம் அண்டு பிரதர்ஸ்,

புக்செல்லர்ஸ் அண்டு பப்ளிஷர்ஸ்,

அவர்களால் தமது

"சி. ஜி. யூரேனியா" அச்சியந்திரசாலையில்

அச்சிடப்பட்டது.

 1946 [விலை ரூ Rs. 3·50

# முன்னுரை.

—:※:—

எண்ணறியப் பிறவிகளில் மானிடப் பிறவியே அருமையான பிறவியாகும். இப்பிறவியையுடைய ஒரு மனிதனுக்கு ஆயுள் முதன்மையானது. சித்திரம் எழுதுவதற்குச் சுவர் எவ்விதம் அவசியமானதோ அவ்விதமாகவே மானிட வாழ்க்கையின் சுகத்தை அனுபவிப்பதற்கு ஆயுள் அவசியமானது. இப்படிப்பட்ட ஆயுள் விஷயத்தைக் குறித்து ஜாதக ராஜபாவ இருவாக்ஷி ஆயுள் பாவம் என்ற ஒரு புத்தகத்தை நாம் கொஞ்சகாலத்திற்கு முன் வெளிப்படுத்தி யிருக்கிறோம். ஒரு மனிதனுக்கு ஆயுளை அடுத்த படி மிகவும் முக்கியமான அம்சம் ஜீவனோபாயம் ஆகும். இந்த ஜீவன விஷயமாக "ஜாதக ராஜபாவ இருவாக்ஷி ஜீவன பாவம்" என்ற ஒரு கிரந்தத்தையும் வெளியிட்டிருக்கின்றோம். ஜீவனத்திற்கு அடுத்தபடி விசேஷமானது களத்திர பாவம். இந்தக் களத்திரபாவ விஷயமாகக்கூட "ஜாதக ராஜபாவ இருவாக்ஷி களத்திர பாவம்" என்ற ஒரு புஸ்தகம் வெளியிட்டிருக்கின்றோம். களத்திர பாவத்திற்கு அடுத்தபடி அவசியமானது புத்திர பாவம். இந்தப் புத்திரபாவ விஷயமாக இப்புத்தகத்தில் அரிய பெரிய விஷயங்கள் விஸ்தாரமாகவும் விபரமாகவும் எழுதப்பட்டிருக்கின்றன.

புத்திர பாவத்திற்குச் சந்தான பாவம் என்றும் சொல்லப்படும். புத்திரனை அடைதலுக்குப் புத்திரப்பேறு என்று சொல்லப்படும். இந்தப் புத்திரப்பேறு ஒருவித செல்வமாகும். இந்தப் புத்திரச் செல்வத்தை அடைந்து இன்புற்றிருப்பது ஒருவிதமானச் செல்வாக்கு என்று அனேகர் அபிப்பிராயப்படுகின்றனர். "மக்கள் மெய்த்தீண்டல் உடற்கின்பம், மற்று அவர் சொல் கேட்டல் இன்பம் செவிக்கு" என்று தெய்வப் புலவராகிய திருவள்ளுவ நாயனாரும் தெரிவித்திருக்கின்றார். நமது சாஸ்திரங்களில் "புத்" என்ற நரகம் ஒன்று இருப்பதாகவும் அந் நரகத்திற்கு ஒரு மனிதன் தான் இறந்த பிறகுச் செல்லாமல் தடுப்பவன் (திரன் என்றால் தடுத்தல்) ஆகியவனே புத்திரன் ஆகின்றான். "அபுமகவிலார்க்கு அனைகதி நாஸ்த்தி" என்று "அருமறைகள் ஓதும்" என்று பெரியார்கள் பலர் சொல்ல நாம் கேட்டிருக்கின்றோம். ஒருவன்தான் இறந்த பிறகு அவனுக்குச் சாஸ்திர ரீதியாய்க் கர்ம காரியங்களைச் செய்யவும் அவனை நரகத்திற்குப் போய்ச் சேரவொட்டாமல் தடுக்கவும் ஒரு புத்திரன் அவசியமானவனாகவாகின்றான். மேலும் இறந்த ஒருவன்தான் இறந்த பிறகு பிதுர் தேவதையாக மாறி பிதுர் லோகத்தில் வசித்துக்கொண்டு தன் சந்ததி அல்லது கால்வழி அல்லது பரம்பரை விருத்தியாகி வருகின்றதா என்று கவலையுடன் பார்த்துக்கொண்டிருப்பதா

கவும், தன் புத்திராளில் யாருக்காகிலும் ஒரு புத்திரன் (அதாவது தனக்குத் தன் வழிபேரன்) ஜெனித்த பிறகு அந்தப் பிதுர் தேவதை இனிமேல் தன் பரம்பரை வாழையடி வாழையாகவரும் என்ற நம்பிக்கையுடனும் சந்தோஷத்துடனும் கவலை நீங்கி இருப்பதாகவும் பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறோம். புத்திரப்பேறு அடையாதவர் வீட்டில் புசிப்பது பாவம் என்றும் சொல்கின்றனர். புத்திரன் இல்லாதவனுக்கு நல்ல கதியும் கிடையாது என்று பெரும்பாலும் அனேக சாஸ்திரங்களில் சொல்லி இருக்கின்றது. யாராகிலும் ஒருவன் பிறருடைய ஒரு குழந்தையை அடித்து விட்டால் அக்குழந்தையைச் சார்ந்தவர்களும் சாரதவர்களும்கூட அடித்தவனைப் பரர்த்து அவன் பிள்ளை பெறாத பாவி என்று சகஜமாகச் சொல்லுகின்றார்கள். சில சாத்திரத்தில் புத்திரன் இல்லாவிட்டாலும் பரவாயில்லை என்று சொல்லி இருக்கின்றது, ஆனால் இக்கொள்கை பெரும்பான்மையோர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகத் தெரியவில்லை. பிள்ளை இருக்க வேண்டும் என்பதே பெரும்பான்மையோர் கொள்கையாக விருக்கின்றது. இப்படிப்பட்ட அத்தியாவசியமான புத்திரன் தனக்குப் பிறப்பானா பிறக்க மாட்டானா என்ற முக்கியமான விஷயத்தை இந்தப் புத்திர பாவ நூலினால் ஒருவர் முன்னடியாகத் தெரிந்து கொள்ளலாம்.

இப் புத்தகத்தில் சந்ததி உண்டாகுமா, உண்டாகாதா, சந்ததி உண்டாவதற்கு ஏதாகிலும் தடை அல்லது தோஷம் இருக்கின்றதா இல்லையா, என்பதையும், சந்ததி உடனே உண்டாகுமா, அல்லது காலாந்திரத்தில் உண்டாகுமா, என்பதையும், முதல் தாரத்திற்கு உண்டாகுமா அல்லது மறு தாரத்திற்கு உண்டாகுமா என்பதையும், இராமேஸ்வரம், சேது முதலிய தீர்த்த யாத்திரைகள் செய்தால் உண்டாகுமா உண்டாகாதா வென்பதையும், தத்து புத்திர யோகமுண்டா இல்லையா என்பதையும், சதிபதிகளில் யார் மலடு என்பதையும், பிள்ளை பிறந்தும் கடைசி காலத்தில் பிள்ளை கர்மஞ் செய்வானா இல்லையா என்ற விஷயங்களையும் சந்ததிகளைப்பற்றி இன்னம் அனேக விஷயங்களையும் விபரமாகச் சொல்லி இருக்கின்றது.

புத்திரபாவம் என்பது லக்கினத்திலிருந்து சவ்வியமாக அதாவது பிரதட்சணமாக ஐந்து பாவம் செல்ல வருகின்ற ஐந்தாவது பாவம் ஆகும். மேலும் லக்கினத்திலிருந்து அபசவ்வியமாக * அதாவது அப்பிரதட்சணமாக ஐந்து பாவம் செல்ல வருகின்ற பாவமானது, லக்கினத்திலிருந்து பிரதட்சணமாக ஒன்பதுபாவம் செல்லவருகின்ற ஒன்பதாவது பாவம் ஆகும். ஆகையால் லக்கினத்தில் இருந்து பிரதட்சணமாகச் செல்லவருகின்ற ஒன்பதாவது பாவத்தையும் புத்திர விஷயத்தில் கவனிக்கின்றார்கள். இந்த ஒன்ப

தாவது பாவம் லக்கினத்திலிருந்து ஐந்தாவது பாவத்திற்கு ஐந்தாவது பாவமாகும். சந்ததி விஷயத்தில் லக்கினத்திலிருந்து பிரதட்சணமாக ஐந்தாவது பாவம், ஒன்பதாவது பாவம், புத்திர காரகனுகிய குரு, ஐந்தாவது ஒன்பதாவது பாவாதிபதிகள், ஏழாவது பாவம், ஏழாவது பாவாதிபதி ஆகிய இந்த அம்சங்களைக் கவனித்து ஆராய்ச்சிசெய்து பலன்களைச் சொல்லவேண்டும். இந்த அம்சங்கள் எல்லாம் தோஷமில்லாமலும் வலிவாகவும் இருத்தல் நன்று.

குறிப்பு:—சிலர் ஜாதகம், சவ்வியம், அபசவ்வியம் என்று இரண்டு வகைப்படும் என்றும் சவ்விய ஜாதகத்திற்கு பிரதட்சணமாக ஐந்தாவது பாவமும், அபசவ்விய ஜாதகத்திற்கு அப்பிரதட்சணமாக ஐந்தாவது பாவமும் புத்திர பாவம் என்கின்றூர்கள். இவ்விரண்டு கொள்கையையும் தழுவி பிரதட்சணமாக 5-வது, 9-வது பாவங்களைப் பெரும்பான்மையோர்கள். கவனிக்கின்றூர்கள்.

———

நெ. 7. வெங்கடேச மேஸ்திரி தெருவு,
கிருஷ்ணப்ப நாய்க்கன் குளம் அருகில்
செளகார்பேட்டை போஸ்டு சென்னை.
1941.
C. G. ராஜன், B. A.,

# விஷய அட்டவணை.

உ

கடவுள் துணை.

# ஜாதக ராஜ "பாவ இருவாக்ஷி"

நான்காம் பாகம் என்னும்

# புத்திர பாவம்.

## மலர் 1.

## (புத்திர பாவம் அல்லது ஐந்தாம் பாவம்)

(1) புத்திர ஸ்தானமாவது புத்திர காரகனாவது சுபக்கிரகங்களுடைய சம்பந்தம் பெற்றால் புத்திர விருத்தியுண்டாகும்.

(2) புத்திர ஸ்தானத்தையாவது புத்திர ஸ்தானாதிபதியையாவது புத்திர காரகனையாவது சுபக்கிரகங்கள் கூடியும், பார்த்தும் இருந்தால் சந்தான விருத்தியுண்டு.

(3) லக்கினாதிபதி புத்திரபாவத்தி லிருக்கப், புத்திராதிபதி பலவானாகி, குருவும் பூர்ண பலம் பெற்று யிருந்தால் புத்திர ப்ராப்தி உண்டாகும்.

(4) குரு புத்திர ஸ்தானாதிபதியாகி பூர்ண பலவந்தராயிருந்து லக்கினாதிபதியால் பார்வை பெற்றால் புத்திர பிராப்த்தி உண்டாகும்.

(5) லக்கினாதிபதி பஞ்சமாதிபதிகள் ஆட்சியாக யிருந்தாலும் இருவருமொரு ராசியில் கூடினாலும் ஒருவரை யொருவர் பார்த்தாலும், இவ்விருவரும் உச்சமாயிருந்தாலும் மித்துரு சகிதமானாலும் புத்திரயோகமுண்டு.

(6) லக்கினாதிபன் புத்திராதிபன் இவர்கள் சுபக்கிரகங்களுடன் சேர்ந்து கேந்திரங்களிலிருக்க 2-மிடத்தான் பலமாக யிருந்தால் புத்திரப் பிராப்தி உண்டு.

(7) 7-மிடத்தான் இருக்கிற நவாம்சம் எந்த நவாம்சமோ அந்த நவாம்ச அதிபதியை லக்கினம் 2, 9-மிட அதிபதிகள் பார்த்தால் புத்திர விருத்தி உண்டாகும்.

(8) புத்திர ஸ்தானதிபதி யிருக்கும் நவாம்ச ராசியாதிபதி சுபருடன் கூடியிருந்தாலும் அல்லது சுப சகிதமாகப் புத்திர ஸ்தானத்திலிருந்தாலும் புத்திரருண்டு.

(9) லக்கினதிபதி 7-மிடத்திலிருந்து 9-மிடத்தானும் 7-ல் கூடியிருக்க 2-மிடத்தான் லக்கினத்திலிருந்தால் புத்திர விருத்தி உண்டு.

(10) 5-வது பாவத்தில் புதன், குரு, சுக்கிரன், 5-வது பாவாதிபன் இவர்கள் பலவந்தர்களாயிருந்து, சூரியனுடன் கூடியாவது அல்லது சூரியனுவ் பார்ங்கப்பட்டாவதிருந்தால் ஜாதகனுக்கு அநேக புத்திரர்களுண்டு.

(11) 5-வது பாவாதிபதி சந்திரனுடன் கூடிஇருந்தாலும், 3-வது பாவத்தில் இருந்தாலும் ஜாதகனுக்குப் பெண் சந்ததி உன்டாகும்:

(12) 5-வது பாவாதிபன் உச்சமாயிருந்தால் புத்திர பாக்கியமுண்டு.

(13) 5-வது பாவாதிபன், லக்கினத்திலிருந்து 2, 5, 9-வது பாவத்திலிருந்து குருவுடன் கூடியிருந்தாலும் அல்லது குருவால் பார்க்கப்பட்டாலும் புத்திரபாக்கிய முண்டு.

(14) 5-வது பாவத்தில் குரு இருந்து பாவாதிபன் சுக்கிரன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு 32 அல்லது 33-வது வயதில் புத்திரனுண்டாகும்.

(15) 5-வது பாவாதிபன் கேந்திர பாவத்திலிருந்து 5-வது காரகனுடன் கூடியிருந்தால் 30 அல்லது 36-வயதில் புத்திரனுண்டாகும்.

(16) லக்கின பாவத்திலிருந்து 9-வது பாவத்தில் குரு இருந்து குருவுக்கு 9-வது பாவத்தில் சுக்கிரனிருந்து, லக்கின பாவாதிபன் சுக்கிரனுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு 40-வயதில் புத்திரனுண்டாகும்.

(17) புத்திரஸ்தானதிபலாதிக மடைந்து மிருத்வம்சம், கோபுராம்சம் முதலிய நல்ல ஷஷ்டியாம்சங்களிலிருந்தாலும் தனக்குச் சந்தேகமில்லாமல் புத்திரருண்டு.

(18) புத்திர ஸ்தானதிபதி யிருக்கிற நவாம்ச ராசியாதிபதி ஜென்ம லக்கினத்திலும் லக்கினதிபனிருந்த நவாம்ச இராசியாதிபதி கேந்திரத்திலும் இருந்தால் புத்திரர் உண்டு.

(19) 5, 9-மிடங்களின் அதிபர்கள் பாராவதாம்சத்திலிருந்து லக்கினதிபதியை சுபர்கள் பார்த்தால் புத்திரலாபமேற்படும்.

(20) ஜாதகத்தில் வம்ச க்ஷயமான தோஷமில்லாமல் இருந்தால்தான் மேற்சொல்லிய புத்திரயோக முண்டென்று அறிய வேண்டியது.

(21) 5-வது பாவாதிபன் 6, 8, 12-வது பாவத்திலிருந்தால் ஜாதகனுக்குப் புத்திரனில்லை. 1, 4, 5, 7, 9, 10-வது பாவத்திலிருந்தால் சந்ததியுண்டு.

(22) 5-வது பாவாதிபன் குருவாயிருந்து, சுபர் வீட்டில் சூரியன் இருந்தால் ஜாதகனுக்குச் சத்புத்திரன் உதிப்பான். 1, 4, 5, 7, 9, 10-வது பாவத்தில் ஒரு சுபர் இருந்தால் ஒரே புத்திர னுதிப்பான்.

(23) 5-வது பாவாதிபன் பாபருடன் கூடி பலவினனாய் 7-வது பாவத்தில் இருந்தால் ஜாதகன் மலடன்.

(24) 5-வது பாவாதிபன் 6-ம் பாவத்தில் நீச்சமாயிருந்தால் ஜாதகன் மலடன்.

(25) 5-வது பாவாதிபன் 6-ம் பாவத்திலும் லக்கின பாவாதிபன் செவ்வாய் வீட்டிலிருந்தால் ஜாதகனுக்கு முதல் குழந்தை இறக்கும்.

(26) 5-வது பாவாதி நீச்சனாய் 6, 8, 12-வது பாவத்தில் இருந்தால் ஜாதகனுடைய மனைவி மலடி யாவாள்.

(27) 5-வது பாவத்தில் கேதுவும் புதனும் இருந்தால் ஜாதகனுடைய மனைவி மலடி ஆவாள்.

(28) 5-வது பாவாதிபதி நீச்சத்திலிருந்து 5-வது பாவத்தைப் பார்க்காமலிருந்து 5-வது பாவத்தில் புதனும் சனியும் இருந்தால் ஜாதகனுடைய மனைவி மலடி யாவாள்.

(29) 5-வது பாவாதிபதி நீச்சத்திலிருந்து 9-வது பாவாதிபதி லக்கின பாவத்திலிருந்தால் புத்திர தோஷம் உண்டு. சாந்தி செய்யக் கஷ்டத்தால் புத்திரனுண்டாகும்.

(30) 5-வது பாவத்தில் புதனும் கேதுவும் இருந்து 9-வது பாவாதிபன் லக்கின பாவத்திலிருந்தால் ஜாதகனுக்குப் புத்திர தோஷ முண்டு, சாந்தி செய்ய கஷ்டத்தில் பிள்ளை உண்டு,

(31) 5-வது பாவாதிபன் 6, 8, 12-வது பாவத்திலிருந்தாலும், நீச்சனுயிருந்தாலும் சத்துருவீட்டி லிருந்தாலும், ஜாதகனுக்குக் கஷ்டத்தில் சந்ததி உண்டு.

(32) 5-வது பாவம் புதன் வீடு அல்லது சனி வீடாகி, 5-வது பாவத்தில் சனி அல்லது குளிகன் இருந்தாலும் அல்லது 5-வது பாவத்தைச் சனி பார்த்தாலும் ஜாதகனுக்குத் தத்து புத்திர யோக முண்டு.

(33) புத்திர பாவத்தைப் பாவிகள் பார்த்தும், புத்திர பாவாதிபதியும் பாபக் கிரகத்துடன் கூடி புத்திர காரகன் 5-மிடத்தி லிருந்தால் புத்திரநாச முண்டு.

(34) 2-7-மதிபர்கள் எந்த நவாம்சத்தி லிருக்கிருரோ அந்த நவாம்சாதிப ரிருவரும் பாப சம்மந்தமடைந்து பாபக்கிரக நவாம்சங்களி லிருந்தால் புத்திரநாச முண்டு.

(35) புத்திர பாவாதிபதி நீசமூட மடைந்து குரூர நவாம்சங்களில் பாபிகளுடன் கூடியிருக்க அல்லது 6-8-12-மிடங்களில் நிற்கப் புத்திரநாச முண்டு.

(36) துவாத சாதிபதி யிருக்கிற நவாம்சாதிபதியின் திரேக்காணுதிபன் புத்திராதிபதியைப் பார்த்தால் புத்திர கிலேச மேற்படும்.

(37) புத்திர ஸ்தாணுதிபதி துஸ்த்தானங்களாகிய 6, 8, 12-ம் இடங்களிலிருந்து குரூர ஷஷ்டியாம்சத்தி லிருந்தாலும் குரூரக் கிரக பார்வை யடைந்தாலும் புத்திர கிலேசம் உண்டு.

(38) சந்திரன் 10-மிடத்திலும், சுக்கிரன் 7-மிடத்திலும் பாபக்கிரகங்கள் 4-மிடத்திலுமிருக்க லக்கினுதிபதி புதனுடன் கூடியிருந்தால் வம்ச க்ஷய தோஷம் உண்டு.

(39) பாபக் கிரகங்கள் 5-8-12-மிடங்களிலிருக்க ஜாதகன் தரித்திரனும் வம்ச ஷயகரனுமாவான்.

(40) சந்திரன்; குரு இருவரும் கூடி லக்கினத்திலிருக்க 7-மிடத்தில் லக்கினுதிபதியாவது சனியாவது இருக்க மற்ற பாப கிரகங்களெல்லாம் 4-மிடத்திலிருந்து 5-ல் சந்திரனிருந்தால் வம்சம் க்ஷயமாகும்.

(41) புதன் சுக்கிரனுடன் கூடி 7-மிடத்திலிருக்க, 4-மிடத்தில் பாவிகளிருக்க 5-ல் குரு யிருந்து 8-மிடத்தில் சந்திரன் பாபக் கிரகங்ளோடே கூடி இருந்தால் ஜாதகனுக்கு வம்ச க்ஷய முண்டாகும்.

(42) லக்கினத்தில் பாபக்கிரகமும் 4-மிடத்தில் சந்திரனும் லக்கினுதிபதி 5-மிடத்தினுமிருந்து புத்திர ஸ்தானுதிபதி பலயீன னுக யிருந்தால் வம்ச க்ஷயம் உண்டு.

(43) க்ஷீண சந்திரன் லக்கினத்திலிருந்து குரு மூடமாகி 8-மிடத்திலிருந்து 5-9-மிடங்களில் பாபக்கிரகளெல்லா மிருந்தால் ஜாதகனுக்குப் புத்திர சுகமில்லாமல் முன்னிட்டே பிறக்கும் போதே புத்திரர்கள் நசித்து விடுவார்கள்.

(44) புதன் பஞ்சம பாவத்திலிருக்க லக்கினத்திலாகிலும் 4-மிடத்திலாகிலும், பாவிகளிலிருந்து 5-9-மிடங்களும் பாப சம்மந்தமாயிருந்தால் சந்தானமே உண்டாகாது.

(45) மேஷ விருச்சிகங்களில் ஒன்று ஜென்ம லக்கினமாகி அஷ்டமத்தில் சனியும் 5-ல் சூரியனுமிருக்க சுபக்கிரக சம்பந்த மிருந்தால் காலாந்திரத்தில் புத்திர லாபமுண்டு.

(46) புத்திர ஸ்தானத்தில் புத்திராதிபனும் ராகுவும் கூடி சுப திருஷ்டி யில்லா திருந்தால் ஸர்ப்ப தோஷத்தால் புத்திர க்ஷய மேற்படும்.

(47) புத்திர ஸ்தானம் புதன் விடாகவும் சனி விடாகவு மிருந்து சனி, மாந்தி கிரகத்துடன் கூடி புத்திர ஸ்தானத்தைப பார்த்தாலும் அதில் இருந்தாலும் தத்து புத்திரனுண்டாகும்.

(48) 5-வது பாவத்தில் ராகு இருந்து, 5-வது பாவாதிபன் பாபருடன் கூடியிருந்து, குரு நீச்சராசியி லிருந்தால் ஜாதகனுக்கு 32-வது வயதில் ஜாதகனுடைய புத்திரன் மரண மடைவான்.

(49) 5-வது பாவத்தில் பாபரிருந்தாலும் குருவிற்கு 5-வது பாவத்தில் பாபரிருந்தாலும் ஜாதகனுக்கு 26, 33, 40-வது வய தில் ஜாதகனுடைய புத்திரன் மரணமடைவான்.

(50) லக்கின பாவத்தில் குளிக னிருந்தாலும், லக்கின பாவாதிபன் நீச்ச வீட்டிலிருந்தாலும், ஜாதகனுக்கு 56-வது வய தில் புத்திர சோகமுண்டு.

(51) 5-வது பாவாதிபன் பரம உச்சத்தில் லக்கின பாவாதி பதியுடன் கூடியும், குருவுடன் கூடியும் இருந்து 4-வது, 6-வது பாவங்களில் பாபரிருந்தால் ஜாதகனுக்கு பத்து புத்திரர்களுண்டு.

(52) குரு பரம உச்சத்திலிருந்து, 2-வது பாவாதிபதி ராகு வுடன் கூடியிருந்து பாக்கியாதிபன் பாக்கியத்திலிருந்தால் ஜாத கனுக்கு ஒன்பது புத்திரர்களுண்டு.

(53) 5-வது பாவத்திற்குப் பாக்கியத்தில் குரு இருந்து, 5-வது பாவாதிபன் பலவானுயிருந்து, 2-வது பாவாதிபன் 10-வது பாவத்திலிருந்தால் ஜாதகனுக்கு எட்டு புத்திரர்களுண்டு.

(54) 5-வது பாவத்திற்கு 5-வது பாவத்தில் அதாவது லக்கினத்திற்கு 9-வது பாவத்தில் சனி இருந்து அந்த 9-வது பாவாதிபதி 5-வது பாவத்திலிருந்தால் ஜாதகனுக்கு ஏழு புத்திரர்களுண்டு. இரண்டு சர்ப்பம் இரட்டைப் பிறவியாய்ப் பிறக்கும்.

(55) 5-வது பாவாதிபதி 5-வது பாவத்தில் 2-வது பாவாதியுடனிருந்தால் ஜாதகனுக்கு ஆறு புத்திரர்கள் பிறக்கும், அதில் மூன்று புத்திரர்கள் இறப்பார்கள்.

(56) 5-வது பாவத்தில் குரு இருந்து குருவுக்கு ஐந்தாவது பாவத்தில் சனி இருந்து சனிக்கு 5-வது பாவத்தில் இராகு இருந்தால் ஜாதகனுக்கு ஒரே புத்திரனுண்டு.

(57) 5-வது பாவத்தில் பாபர்களிருந்து குருவுக்கு ஐந்தாவது பாவத்தில் சனி இருந்தால் ஜாதகனுக்கு வேறு ஸ்திரீயுடன் புத்திரப் பேறுண்டு. ஜாதகனுக்கு மூன்று மனைவிகளுண்டு.

(58) 5-வது பாவத்தில் பாபர் இருந்து குருவுக்கு ஐந்தாவது பாவத்தில் சனி இருந்து 5-வது பாவத்தில் செவ்வாய் இருந்து லக்கின பாவாதிபதி இரண்டாவது பாவத்திலிருந்தால் ஜாதகனுக்குப் பிள்ளைகள் பிறந்து மறிக்கும். ஜாதகன் தீர்காயுளுடையவன்.

(59) 5-வது பாவாதிபதி ஐந்தாவது பாவத்திலிருந்தால் ஜாதகனுக்குப் புத்திரன் ஜீவித்திருக்க மாட்டான்.

(60) 5-வது பாவாதிபதி, 6-வது, 12-வது பாவத்திலிருக்கில் ஜாதகனுக்குத் தன்னுடைய புத்திரன் சத்ருருவாவான்.

(61) 5-வது பாவாதிபதியாவது அல்லது 9-வது பாவாதிபதியாவது லக்கின பாவத்திலிருந்து 7-வது பாவத்திலாவது அல்லது இரட்டை இராசியிலாவது இருந்து சந்திரன் சுக்கிரனுடன் கூடியாவது அல்லது பார்க்கப்பட்டாவது இருந்தால் ஜாதகனுக்கு அநேக பெண்கள் பிறக்கும். இவர்கள் புருஷ வர்க்கத்தில் புருஷ கிரகத்தால் பார்க்கப்பட்டாவது அல்லது ஆண் கிரகததால் பார்ககப்பட்டாவது இருந்தால் ஜாதகனுக்கு அதிக புத்திரர்கள் பிறக்கும். லக்கின பாவத்திற்கு 5-வது பாவத்தைக் கொண்டும் குருவைக் கொண்டும் புத்திர பாக்கியம் அறிய வேண்டும்.

(62) லக்கினத்திற்கு 5-வது பாவம் சந்திரன் அல்லது சுக்கிரனுடைய வர்க்கமாகி, சந்திரனாவது அல்லது சுக்கிரனாவது 5-வது பாவத்தில் இருந்தாலும் அல்லது 5-வது பாவத்தை பார்த்தாலும் அப்போது 5-வது பாவத்தில் பாபக்கிரகமில்லாமலிருந்தால் ஜாதகனுக்கு அனேக குழந்தைகள் உண்டு.

(63) 5-வது பாவத்தை சனி, செவ்வாய் பார்த்தால் ஜாதகன் புத்திர ஈனனாவான்.

(64) 5-வது பாவத்திலிருந்து 7-வது பாவம் சுபருடைய இராசி அல்லது அம்சமானால் ஜாதகனுக்கு பௌத்திரன் (பேரன்) பிறப்பான்.

(65) 5-வது பாவத்திற்கு 7-வது பாவாதிபதி சுபக்கிரகத்துடன் சேர்ந்தாவது அல்லது சுபக்கிரகத்தால் பார்க்கப்பட்டாவது இருந்து திரிகோணத்திலாவது, கேந்திரத்திலாவது இருந்தால் ஜாதகனுக்குப் பௌத்திரன் பிறப்பான்.

(66) 5-வது பாவாதிபதி சுய க்ஷேத்திரத்திலிருந்தால் ஜாதகனுக்கு அநேக குழந்தைகள் இருக்காது.

(67) 5-வது பாவாதிபதி இருக்கும் அம்சாதிபதி தன் அம்சையிலேயே இருந்தால் ஜாதகனுக்கு ஒரே புத்திரனுண்டு.

(68) 5-வது பாவத்திலிருந்து 6, 8, 12-வது பாவங்களில் பாபக்கிரகங்கள் இருந்தால் ஜாதகனுடைய குடும்பம் க்ஷீணித்துப் போய்விடும்.

(69) 5-வது பாவத்தில் 7-வது பாவாதிபதி இருந்தால் ஜாதகனுக்கு குழந்தைகளாவது அல்லது மனைவியாவது இல்லை.

(70) 5-வது பாவத்தில் ராகு இருந்து அந்த பாவாதிபதி துஸ்தானங்களாகிய 6, 8, 12-வது பாவங்களில் இருந்தால் ஜாதகனுடை புத்திரர்கள் இறப்பார்கள்.

(71) 5-வது பாவாதிபதி லக்கின பாவத்திலிருந்து, லக்கின பாவாதிபதி 5-வது பாவத்திலிருந்தால் ஜாதகனுக்கு தத்து புத்திரனுண்டு.

(72) 5-வது பாவாதிபதியும், லக்கின பாவாதிபதியும் துஸ்தானத்தில் (அதாவது 6, 8, 12-வது பாவத்தில்) இருந்து சுபக்கிரகத்தால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு ஒரு தத்து புத்திரன் உண்டு.

(73) 5-வது பாவாதிபதி சுபருடன்கூடி சுப ராசியிலுள்ள கேந்திர திரிகோண பாவத்திலிருந்தால் ஜாதகனுக்கு பால்யத்திலேயே புத்திரன் பிறப்பான்.

(74) 5-வது பாவாதிபதி இராகுடன் சேர்ந்திருந்தால் 5-வது பாவாதிபதியின் புக்தியில் பிறக்கும் பிள்ளை அற்பாயுளுடையவனாகவும், இராகுவின் புக்தியில் பிறக்கும் பிள்ளை தீர்காயுளுடையவனாகவும் இருப்பார்கள்.

(75) 5-வது பாவாதிபதியும் 2-வது பாவாதிபதியும் பலவீனர்களா யிருந்து 5-வது பாவத்தை பாபிகள் பார்த்தால் ஜாதகன் அனேக களத்திரங்களை விவாகம் செய்தாலுங்கூட அவனுக்கு சந்ததி கிடையாது. ஆனால் அவன் மனைவி புத்திரயோகமுடையவளாய்ப் பிறந்திருந்தால் (அதாவது அவள் ஜாதகம் பிரகாரம் அவளுக்கு புத்திர பாக்கிய மிருந்தால்) ஜாதகனுடைய ஜாதகத்தில் 5-வது பாவத்தை புதனாவது அல்லது 5-வது பாவத்திற்கு 6-வது பாவாதியாவதுப் பார்த்தால் அவன் மனைவி கள்ள புருஷனால் புத்திரனை பெறுவாள்.

(76) 5-வது பாவம் அல்லது 5-வது பாவாதிபதி அல்லது குரு இவைகளுடன் சுபர் கூடினாலும் அல்லது சுபர் பார்த்தாலும் ஜாதகனுக்கு சந்தேகமில்லாமல் புத்திரனுண்டு.

(77) 5-வது பாவத்தில் லக்கின பாவாதிபதி இருந்து 5-வது பாவாதிபதி வலிவாயிருந்து குருவும் வலிவாயிருந்தால் ஜாதகனுக்கு சந்தேகமில்லாமல் புத்திரனுண்டு.

(78) 5-வது பாவத்தில் குரு பூர்ண பலத்துடனிருந்து குரு லக்கின பாவாதிபதியினால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு சந்தேகமில்லாமல் புத்திரனுண்டு.

(79) 5-வது பாவாதிபதியும் குருவும் வைசேஷிகாம்சத்திலிருந்து 5-வது பாவத்தை 9-வது பாவாதி பார்த்தால் ஜாதகனுக்கு புத்திரனுண்டு.

(80) 10-வது பாவத்தில் சந்திரனும், 7-வது பாவத்தில் சுக்கிரனும், 4-வது பாவத்தில் பாபிகளும் இருந்தால் ஜாதகனுடைய வம்சம் சந்தேகமில்லாமல் தன்னுடன் அற்றுப்போகும்.

(81) 5-வது பாவாதிபதி பாபிகளுடன் கூடியாகிலும் அல்லது பாபிகளாலும் அல்லது அஸ்தங்கமடைந்த கிரகங்களாலும் பார்க்கப்பட்டு, லக்கின பாவாதிபதி 6-வது அல்லது 8-வது பாவத்திலிருந்தால் ஜாதகனுக்குப் புத்திர நாசமுண்டு.

(82) 1, 7, 9, 12-வது பாவத்தில் பாபிகளிருந்து இவர்கள் பாபவர்கத்தில் இருந்தால் ஜாதகனுடைய வம்சம் நாசமடையும்.

(83) 5, 1, 7-வது பாவாதிபதிகள், குரு இவர்கள் எல்லோரும் பலவீனமா யிருந்தால் ஜாதகனுக்கு சந்ததி கிடையாது.

(84) 5-வது பாவத்தில் பாபக்கிரக மிருந்து, 5-வது பாவாதிபதி நீச்சமடைந்து சுபரால் பார்க்கப்படாமலிருந்தால் ஜாதகனுக்கு சந்ததி கிடையாது.

(85) லக்கினத்திலிருந்து, குருவிலிருந்து, 5-வது பாவங்களில் பாபிகள் இருந்து, இந்தப் பாவங்களில் சுபர் இல்லாம லிருந்தாலும் அல்லது இந்தப் பாவங்களைச் சுபர் பார்க்காம லிருந்தாலும் ஜாதகனுக்குச் சந்ததி கிடையாது.

(86) லக்கினத்திலிருந்து 5-வது பாவத்தில் ஒரு பாபி இருந்து 5-வது பாவாதிபதி இரண்டு பாபிகளின் மத்தியிலிருந்து சுபரால் பார்க்கப்படாமலும், அல்லது சம்மந்தப்படாம லிருந்தால் ஜாதகனுக்குச் சந்ததி கிடையாது.

(87) லக்கினத்திலிருந்து 5-வது பாவாதிபதி பலவீனமா யிருந்து குரு இரண்டு பாபிகளின் மத்தியிலிருந்து சுபரால் பார்க்கப்படாமலும் அல்லது சம்மந்தப்படாமலிருந்தால் ஜாதகனுக்குச் சந்ததி கிடையாது.

(88) லக்கினத்திலிருந்து 5-வது பாவத்தின் இராசியாதிபதி புதன் அல்லது 5-வது பாவத்தைக் குளிகன் அல்லது சனி பார்த்தாலும் தத்து புத்திரன் அல்லது இதர வழியால் புத்திர னுண்டு.

(89) லக்கினத்திலிருந்து 5-வது பாவத்தின் இராசி மீனமா யிருந்து, 5-வது பாவத்தில் குரு இருந்தால் ஜாதகன் அற்ப சந்ததியுடையவன்.

(90) லக்கினத்திலிருந்து 5-வது பாவத்தின் ராசி தனுசாக விருந்து 5-வது பாவத்தில் குரு இருந்தால் ஜாதகனுக்கு கஷ்டத் தால் சந்ததி உண்டாகும்.

(91) லக்கினத்திலிருந்து 5-வது பாவத்தின் இராசி கடகம் அல்லது கும்பமாகில் 5-வது பாவத்தில் குரு இருந்தால் ஜாதகனுக்கு சந்ததி கிடையாது.

(92) லக்கினத்திலிருந்து 5-வது பாவாதிபதி 9-வது பாவத்தி லிருந்து சந்திரன் பாப ராசியிலிருந்து, லக்கின பாவாதிபதி திரிகோணத்தி லிருந்தால் ஜாதகனுக்குத் தத்து புத்திரனுண்டு.

(93) லக்கினத்திலிருந்து 5-வது பாவாதிபதி 4-வது பாவத்தி லிருந்தாலும் அல்லது சனியினுடைய நவாம்சையி லிருந்தாலும் அப்போது லக்கின இராசி இரட்டை இராசியாகில் ஜாதகனுக்குத் தத்து புத்திரனுண்டு.

(94) லக்கினத்திலிருந்து 5-வது பாவாதிபதி சூரியனுடன் கூடி புதன் நவாம்சையில் இரட்டை இராசியாகிலும் அல்லது சனி நவாம்சையாகிலும் இருந்தால் ஜாதகனுக்குத் தத்து புத்திரனுண்டு.

(95) லக்கினத்திலிருந்து 5-வது பாவாதிபதி சனியினுடைய நவாம்சையிலிருந்து குருவும், சுக்கிரனும், சுய க்ஷேத்திரத்திலிருந்தால் ஜாதகனுக்கு முதலில் தத்து புத்திரனும் அதன் பிறகு தன் மனைவியின் மூலமாய்ப் புத்திரனு முண்டு.

(96) லக்கின பாவத்தில் செவ்வாய் இருந்து 4-வது, 8-வது பாவத்தில் சூரியனிருந்து சுபரால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்குக் காலாந்திரத்தில் (அதாவது விருத்தாப்பிய வயதில்) புத்திரனுண்டு.

(97) லக்கினத்திலிருந்து 5-வது பாவம் பலவீனமாயிருந்து லக்கின பாவத்தில் சனியிருந்து குரு 8-வது பாவத்திலும் செவ்வாய் 12-வது பாவத்திலு மிருந்தால் ஜாதகனுக்கு காலாந்திரத்தில் (அதாவது விருத்தியாப்பிய வயதில்) புத்திரனுண்டு.

(98) லக்கினத்திலிருந்து 5-வது பாவாதிபதி ஜெனன காலத்தில் பாதாளத்தில் இருந்தால் அதாவது ஆகாயத்தில் தெரியாமல் பூமிக்கு கீழே இருந்தால் ஜாதகன் தான் இறக்கும் தருணத்தில் புத்திரனை பார்க்கமாட்டான். அதாவது மரண காலத்தில் புத்திரன் அருகில் இருக்கமாட்டான். ஒரு கிரகத்தின் (இங்கு ஐந்தாவது பாவாதிபதியின்) ஸ்புடத்திலிருந்து லக்கின ஸ்புடத்தைக் கழிக்க வருவது 180 பாகைக் குள்ளிருந்தால் அந்த கிரகம் பூமிக்கு கீழே இருக்கின்றதென்றும், 180 பாகைக்கு மேற்பட்டிருந்தால் பூமிக்கு மேலே அதாவது ஆகாயத்தில் இருக்கின்றதென்றும் கூடிய வரையிலும் சரியாய் அறிந்து கொள்ளலாம்.

(99) 6-வது பாவத்தில் 5-வது பாவாதிபதியும், 6-வது பாவாதிபதி குருவுடன்கூடி 12-வது பாவாதிபதி லக்கின பாவத்திலிருந்தால் ஜாதகனுக்குத் தன் புத்திரன் சத்துரு ஆவான்.

(100) 6-வது பாவத்தில் சூரியன் முதலிய நவக்கிரகங்களில் எந்த கிரகம் இருக்கின்றதோ அந்த கிரக காரகவர்க்க சத்துருக்க

ளால் ஜாதகனுக்கு எப்போதும் பீடையுண்டாகும். 6-வது பாவத்தில் இருக்கும் கிரகம் குருவாகில் ஜாதகனுக்கு புத்திர வர்க்கத்தாராலும் பீடை உண்டாகும்.

(101) 7-வது பாவாதிபதி 3-வது, 11-வது பாவத்திலிருந்தால் ஜாதகனுடைய புத்திர னிறப்பான். ஒரு சமயம் பெண் ஜாதி ஜீவித்திருப்பாள். ஜாதகனுடைய கடைசி காலத்தில் கஷ்டத்தில் புத்திரனுண்டு.

(102) 7-வது, 5-வது, 9-வது பாவாதிபதிகள் 6, 8, 12-வது பாவத்திலிருந்து, 5-வது பாவத்தைப் பார்த்தால் ஜாதகனுக்கு புத்திரனில்லை.

(103) 6-வது பாவத்தில் சந்திரனும் சுக்கிரனுமிருந்தால் ஜாதகனுக்கு ஒரே புத்திரனுண்டு.

(104) 7-வது, 1-வது பாவங்களில் சுக்கிரனும், சூரியனும் கூடியிருந்தால் ஜாதகனுடைய மனைவி மலடி ஆவாள்.

(105) 7-வது பாவத்தில் புதனிருந்தால் ஜாதகனுடைய மனைவி நல்லப் புத்திரன்களைப் பெறுவள்.

(106) 7-வது பாவத்தில் குரு விருந்தால் ஜாதகனுடைய மனைவி நற்குண முடையவள், நல்ல புத்திரர்களைப் பெறுவள்.

(107) 7-வது பாவாதிபதி அல்லது 5-வது பாவாதிபதி வலிவாயிருந்து சுபரால் பார்க்கப்பட்டு 6-வது பாவாதிபதியால் பார்க்கப்பட்டாலும் அல்லது சம்மந்தப்பட்டாலும் ஜாதகனுடைய மனைவிக்குச் சோர புருஷனால் புத்திரனுண்டு, ஜாதகனுக்கு எத்தனை மனைவிகள் இருந்தபோதிலும் புத்திரன் தன்னால் உண்டாக மாட்டான்.

(108) லக்கினத்திலிருந்து 8-வது பாவாதிபதி 9-வது பாவத்திலிருந்தால் ஜாதகன் புத்திரசோக முடையவன், அல்லது மனைவி மலடியா யிருப்பாள்.

(109) 9-வது பாவத்தில் சுக்கிரனும், சனியும் சேர்ந்திருந்தால் ஜாதகன் இராஜாவுக்குச் சமானன், பல புத்திரர்களுடையவன்.

(110) சந்திரனுக்கு பத்தாவது பாவத்தில் செவ்வாயும், சனியும் இருப்பின் ஜாதகன் புத்திரனில்லாதவன்; குருவும், புதனுமானாலும் புத்திரனில்லாதவ னுவான்.

(111) புத்திராதிபதி புருஷ கிரகமாய்ப் புருஷ ராசியிலும், புருஷ நவாம்சத்திலு மிருந்தால் ஜாதகனுக்குப் பிறக்கும் முதல் குழந்தை ஆண் ஆகும்.

(112) புத்திர ஸ்தானம் ஸ்திரீ ராசியாகி அதில் ஸ்திரீ கிரக மிருந்து ஸ்திரீ நவாம்சத்தில் புத்திராதிபதி யிருந்தால் முதல் கெற்பம் பெண்ணுக ஜெனிக்கும். புத்திரனுதன் நபும் ஸகனுகி நபும்ஸக இராசி நபும்ஸக நவாம்சத்திலிருந்தால் அலியாக பிறக்கும்.

(113) புத்திராதிபதி துர்ஸ்தானங்களாகிய 6-8-12-ம் மிடங் களிலிருந்து இவரை லக்கினுதிபதி, செவ்வாய், ராகு இவர்களால் பார்த்தால் ஜாதகனுடைய புத்திரன் பிதாவைச் சதா வெறுத்து தூஷிப்பான்.

(114) புத்திர ஸ்தானம் புதன், சுக்கிரன், குரு இவர்களால் பார்க்கப்பட்டாலும் அல்லது புத்திர ஸ்தானத்தில் இவர்களிருந் தாலும் அல்லது புத்திர ஸ்தானம் இவர்கள் க்ஷேத்திரமாக யிருந் தாலும் ஜாதகன் புத்திரனுடன்கூடி மித்திரமா யிருபபன். மேலும் ஜாதகன் தன் புத்திரர்களி னுதவியால் இதரர்களுக்குப் போஜனம் முதலிய உதவி செய்வான்.

(115) புத்திர ஸ்தானுதி நீசராசியி லிருப்பினும் அவ்விராசிக் குடையோன் உச்ச மடைந்தாவது, ஆட்சி பெற்ருவது, சுபக் கிரகங்களால் பார்க்கப்பட்டாவது, சேர்ந்தாவதிருந்தால் நல்ல அதிர்ஷ்ட சாலியாகவும், வித்வானுயும், அழகுள்ளவனுயும், குண முள்ளவனுயும், வாகனம் முதலியவைகளை உடையவனுயும் உள்ள பிள்ளை உண்டாவான்.

(116) புத்திரேசனுனவன் புருஷ கிரக க்ஷேத்திரத்திலிருந்தா லும், கேந்திர ஸ்தானத்திலிருந்தாலும் நீச க்ஷேத்திரத்திலுள்ள வனு யிருந்தாலும் பெண்களும் பிள்ளைகளும் உண்டு.

(117) திருவாதிரை அல்லது அஸ்த நட்சத்திரத்திலாவது புத்திர ஸ்தானுதிபனிருந்தால் ஜாதகனுக்கு புத்திரன் இல்லை என் பது நிச்சயம்.

(118) மிருக சிருஷம் அல்லது புனர்பூசம் நட்க்ஷத்திரங் களில் புத்திர ஸ்தானுதிபனிருந்தால் வெகுகாலங் கழித்து ஒரே பிள்ளை பிறக்கும் என்பதற்குச் சந்தேகமில்லை.

(119) மிதுனம், கடகம், கன்னி இவ்விராசிகளில் புத்ர ஸ்தா னுதிப னிருந்தால் ஜாதகனுக்கு யாதொரு தோஷமும் கிடையாது. ஸ்திரீப் பிரஜைதானுண்டாகும் (அதாவது ஸ்திரீபிரஜை யுண்டா

ளுல் அதற்கு யாதொரு தோஷமும் ஏற்படாதென்பது கருத்து. சில கிரந்த கர்த்தர்கள் முன்சொன்ன தோஷமானது அமங்கலியத்தை தரும் என்பர். பிரசவத்தில் சூசிகா வாயு உண்டாகும், தரித்திர தன்மையும் கொடுக்கும். இதற்குப் பரிகாரமாக லீபக்கிரக ஜபமும் அசுவத்தப் பிரதக்ஷிணமும், சேது ஸ்தானமும் பரிகாரமாகும். மேல் குறிக்கப்பட்ட இராசிகளில் புத்திர ஸ்தானுதிபனிருந்து லக்கினுதிபதியால் பார்க்கப்பட்டால் பலவித சவுக்கியத்தையும் ராஜ யோகத்தையும் தருவான். தங்கம், வெள்ளி சாமான்கள் அவனுடைய பிள்ளை பெண்களுக்கு பன்னிரண்டு வயது முதல் கிடைக்கும். ஜபம், ஹோமம் இவைகளை செய்யின் அப்பிள்ளைக்கு பூர்ணுயுள் அல்லது மத்திமாயுள் என்கின்றனர்.

(120) பிரதமாதி திதியிலாவது துவிதீயா திதியிலாவது சதுர்தசியிலாவது அமாவாஸ்யையிலாவது புத்திராதிபதி சந்திரனேடு கூடியிருந்தால் சிசுவுக்கு கர்பத்திலேயே மரணம் நேரிடும்.

(121) ஐந்தாமிடத்தில் க்ஷிண சந்திரனிருந்தால் புத்திர தோஷமுண்டாகும் ஷெ தோஷத்தால் இரண்டு களத்திரம் உண்டாகும், புத்திக்கு மாறுபாடு உண்டாகும். பெண் குழந்தை பிறந்தால் தேகத்தில் அசவுக்கிய முண்டாகும்.

(122) மூன்று, ஆறு, பதினென்று இவைகளில் புத்திராதிபன் க்ஷீண சந்திரனேடு கூடியிருந்தால் மூன்று தினம் பிரசவ வேதனையை அடைந்து பிரசவிப்பாள்.

(123) கேந்திர ஸ்தானங்களில் புத்திராதிபதி அலிக் கிரகத்தோடு சேர்ந்திருந்தால் பிள்ளை யிருந்தால் பேரனுக்கு நாசமும், பேரனிருந்தால் புத்திரனுக்கு நாசமும் உண்டாகும்.

(124) புத்திராதிபதி சத்துருவோடு சேர்ந்து பாப க்ஷேத்திரத்தில் இருந்தால் ஜாதகனுவது அல்லது அவனுக்குப் பிறகு அவனுடைய மனைவிக்காவது புத்திர சோகம் ஏற்படும் அல்லது அவனுடைய மூத்த புத்திரனுக்கு பெண்ணுவது பிள்ளையாவது உண்டாகாவாது.

(125) புத்திர ஸ்தானுதிபதி புருஷ ராசியிலிருந்தால் ஆண் குழந்தை உண்டாகும்; ஸ்திரீ ராசியிலிருந்தால் பெண் குழந்தை உண்டாகும், ஆட்சியாயிருந்தாலும், லக்கினுதிபதி பார்த்தாலும், உச்சமா யிருந்தாலும், குரு பார்த்தாலும் ஆண், பெண் குழந்தைகள் உண்டு.

(126) புத்திர ஸ்தானத்தான் நபும்ஸக ராசியிலிருந்தால் ஜாதகன் புத்திரனுக்கு ' கருமத்தைப் பண்ணுவான், பெண் குழந்தை பிறந்தால் சூதிகா வாயு உண்டாகும்.

(127) புத்திராதிபன் பாபிகளோடு சேர்ந்தாலும் அல்லது பாபிகளால் பார்க்கப்பட்டாலும் அவனுடைய தெசையிலாவது, மாசத்திலாவது, வாரத்திலாவது மாசத்திற்குத் கடுத்த மாதத்திலாவது, வாரத்திற்குத்கடுத்த வாரத்திலாவது, பாக்யாதிபனுடைய தெசையிலாவது ஜாதகன் பிள்ளைகளுக்கு கர்மம் செய்வன், பரிகாரம் செய்யாவிட்டால் பௌத்திர தோஷமுண்டாகும், பரிவர்த்தனையா யிருப்பினும் தோஷம் உண்டு, மிருத்யு மந்திர ஜெபம், புத்திராதிபதியுடைய மந்திரத்தையும் ஜெபம் செய்யவேண்டும். செய்தால் தோஷம் நிவர்த்தி.

(128) புத்திரத் தானத்தாதி கேந்திரத்தில் அல்லது திரிகோணத்தி லிருப்பின் ஏழு அல்லது ஒன்பது பிள்ளை சந்தேகமில்லாமல் உண்டு.

(129) புத்திர ஸ்தானாதிபதி புத்திரகாரகன் லக்கினாதிபதி இவர்கள் ஒருவருக்கொருவர் ஆறு, எட்டு, பன்னிரண்டுகளில் பாபிகளோடு கூடியாவது பாப க்ஷேத்திரத்திலாவது இருந்தால் அந்த ஜாதகனுக்கு புத்திரர்களோடுகூட நியாதிபதி முன்பாக வியவகாரம் நேரும்.

(130) புத்திர ஸ்தானாதி பாபிகளோடு கூடியிருந்தால் அந்த புத்திர ஸ்தானாதிபதி தெசையிலாவது, லக்கினாதிபதி தெசையிலாவது அவனுடைய பிள்ளைகள் தகப்பனால் சம்பாதிக்கப்பட்டதை அழித்து விடுவார்கள்.

(131) சனி சத்துருவோடும் மித்திரனோடும்கூடி சப்தமத்திலிருந்தால் குடும்பத்துக்கே புத்திர தோஷமுண்டு. பாகமாய் விட்டால் தோஷமில்லை.

(132) ..த்திர ஸ்தானாதி மிதுனம், கடகம், சிம்மம் அல்லது கன்னியா ராசியிலிருந்தால் அது லக்கினமாயிருந்தால் புத்திர தோஷமில்லை.

(133) புத்திர ஸ்தானாதிபதி க்ஷீண சந்திரனோடுசேர்ந்து, ஆறு, எட்டு, பன்னிரண்டு இந்த இடங்களிலிருந்தால் அவனுடைய பிள்ளைகள் அங்கஹீனர்களா யிருப்பார்கள், புத்திர தோஷமுமுண்டு.

(134) புத்திர ஸ்தானாதிபதி சத்துருவோடு சேர்ந்து பாபியுடைய வீட்டில் இருந்தால் ஊமையா யிருப்பான், ஜெயில் வாசமும் உண்டு ; லக்கினாதிபதி புத்திர ஸ்தானாதிபதியைப் பார்க்கில் மேற்படி தோஷமில்லை.

(135) புத்திர ஸ்தானாதிபதி பாபியானாலும், பாபிகளோடு சேர்ந்திருந்தாலும் 3, 6, 11-இந்த இடத்தில் இருந்தானாகில் புத்திர விருத்தியுண்டு.

(136) புத்திர ஸ்தானாதிபதி எங்கே நீசனாயிருக்கிறானோ அந்த நீச்ச ஸ்தானாதிபதியால் பார்க்கப்பட்டாலும், லக்கினாதிபதியோடு சேர்ந்து இருந்தாலும் புத்திர தோஷமில்லை.

(137) களத்திர ஸ்தானாதிபதி பாபியோடு சேராமல் பலவானாயிருந்தாலும், களத்திர காரகனும் அப்படியே பலவானாயிருந்தாலும், புத்திர தோஷமிருந்தால், ஜெனிக்கும் பிள்ளைக்கும் தாயாருக்கும் பிரசவ காலத்திலேயே மரணமுண்டாகும். அந்த ஜாதகனுக்கு காலம் கழித்து அந்நிய ஸ்திரீயிடத்தில் புத்திரோற்பத்தி உண்டு.

(138) புத்திர ஸ்தானாதிபதி ராகுவோடு கூடியிருந்தாலும் பத்தாமிடத்தில் இருந்தாலும் அவனுடைய மனைவி எவ்வளவு ரூபவதியா யிருந்தாலும் மலடியா யிருப்பாள்.

(139) புத்திர ஸ்தானாதிபதி ஸ்திரீ கிரஹத்தோடு சேர்ந்து ஸ்வக்ஷேத்திரத்திலாவது கேந்திரத்திலாவது இருந்தால் ஜாதகனுக்கு பிள்ளை ஒன்று அல்லது இரண்டு உண்டு.

(140) லக்கின கேந்திரத்திலிருக்கும் லக்கினாதிபதியோடு பஞ்சமாதிபதி சேர்ந்தாலும், பார்த்தாலும் அல்லது ஒருவர் வீட்டிலொருவராக பரிவர்த்தன மடைந்திருந்தாலும் பெருமையான பிள்ளைகள் பிறப்பார்கள்.

(141) லக்கினத்தில், ஐந்தாமிடத்தில், லக்கினாதி, ஐந்தமாமிடத்தாதி இல்லாதிருப்பினும் அல்லது பார்க்காவிடினும் பிள்ளை இல்லை. ஐந்துக்குடையோன் மூன்றிலிருப்பின் புத்திரர் அற்பமாகும்.

(142) ஏழாமாதி உச்ச நீச்சங்களின்றி யிருந்தால் மூத்தவனுக்கு புத்திரர் இல்லை இளையவனுக்கு உண்டு. ஏழாமதிபன் உச்ச நீச்ச அம்கிசத்திலிருந்தால் புத்திரருண்டு.

(143) ஐந்தில் சூரியனுடன் ராகு அல்லது கேதுவும் கூடியிருந்தால் தந்தைக்கும் புத்திரனுக்கு பகை உண்டு. அதனால் திரவிய சேதம் ஏற்படும். அவ்வித மில்லையேல் இருந்த இடம்விட்டு பிரிந்து தூரப்போக நேரும்.

(144) லக்கினாதிபதிக்கு நாலுக்குடையோன் நட்பாக இருந்தால் தகப்பனுக்குப் பின் பிள்ளைகள் பூமியிலிருப்பார்கள்.

(145) லக்கினத்தில் செவ்வாயும், ஏழில் சனியும், பன்னிரண்டில் சூரியனும் இருந்தால் புத்திரர் இல்லை. ஐந்துக்குடையோனும், ஏழுக் குடையோனும் பாவியாய் பரிவர்த்தனை அடைந்திருந்தால் புதல்வரில்லை.

(146) சந்திரனுக்கு ஏழில் சூரியனும், சனிக்கு ஏழில் புதனிருந்தாலும் இரட்டை ராசியில் சூரியனிருந்து, செவ்வாயால் பார்க்கப்பட்டால் அலியோகமாகும்.

(147) எட்டுக் குடையோன் ஐந்திலும், ஐந்துக் குடையோன் எட்டிலுமிருந்து இவர்களை சுபர் நோக்காமலிருந்தால் புத்ரரில்லை.

(148) சனி, புதன் இவர்கள் இராசி புத்திர ஸ்தானமாயிருந்து, அத்தானத்தை சனி குளிகனோடு சேர்ந்திருந்தாலும், பார்த்தாலும் தத்துப் பிள்ளை உண்டு. சுபன் பலப்பட்டு ஐந்தாம் வீட்டிலிருப்பினும், அவ்வைந்தாமதிபதி பார்வையற்றிருபபின் தத்தாகவே வாழ நேரும்.

(149) மீனலக்கினத்திற்கு ஐந்தில் குரு உச்சமாயிருக்க பெண் பிள்ளையே பிறக்கும். ஐந்துக்குடையோன், ஆறுக்குடையோன், செவ்வாய் இம்மூவரையும் சத்துருக்கள் பார்ப்பின், பகைவர்களால் பிள்ளைகட்கு பீடை உண்டாகும்.

(150) ஐந்துக்குடையோன் ஐந்தினில் சுபரோடு கூடியிருப்பினும், பார்க்கப்பட்டாலும், தேவதை வஞ்சனையால் நல்ல குழவியும் வாடும்.

(151) நாலில் பாபிகளும், ஐந்தில் குருவும், சனியும், பன்னிரண்டில் பாபிகளும் இருந்தால் தாய் கரத்திலேயே பிள்ளை மறிக்கும்.

(152) புத்திர நாதனும், சுக்கிரனும், சந்திரனும்கூடி பெண் ராசியில் பெண் அங்கிசையி லிருப்பவர்களைப் பார்த்தால் பெண் பிள்ளையே பிறக்கும் என்று கூறுவர்.

(153) ஜென்ம லக்கினத்திற்கும், சந்திர லக்கினத்திற்கும் இடையிலுள்ள இராசிகளை சுபர் பார்வை யடைந்திருப்பின் பாலருண்டாம்; சனி முதலிய பாபிகள் பார்த்தால் பாலர் இல்லை.

(154) லக்கினதிபதி ஐந்திலும், ஐந்துக்குடையோன் பலப்பட்டும் மிருந்தால் வாலிபத்தில் பிள்ளை பிறந்து வளரும்.

(155) சன்மாதி ஏழிலும், நாலாமதிபனும், ஏழாமதிபனும் ஒரே வீட்டிலும் இரண்டுக் குடையோன் சன்மத்திலிருக்க பிறக்கும் பிள்ளைகள் சமர்த்தரா யிருப்பர்.

(156) இரண்டாமதிபன் ஐந்தினில் குரு பார்வையைப் பெற்றிருந்தால் பிள்ளைகளுண்டாகும்.

(157) ஐந்துக்குடையோன் ஸ்புடத்தையும், சூரியன் ஸ்புடத்தையும் கூட்டிய இராசியில் குருவரும் காலத்தில் ஒரு புதல்வன் பிறப்பான்.

(158) சூரிய கேந்திரத்தில் சந்திரனிருந்தால் பிதாவுக்கு புத்திர ரற்பமாகும், பணபரத்தில் சந்திரனிருந்தால் தந்தைக்கொப்பான பிள்ளை பிறக்கும்; ஆபோக்கிலியத்தில் சந்திரனிருந்தால் பிதாவைக் காட்டிலும் உயர்ந்த புத்திரனுண்டு. சூரியனுக்கு ஐந்து, ஏழு, ஒன்பது, பன்னிரண்டா மிடங்களில் சந்திரனிருந்து அந்த வீடு, நட்பு, ஆட்சி, உச்சங்களாயிருந்து குருவும் சந்திரனைப் பார்த்தார் தந்தையிட செல்வம் அதிகமுள்ள புத்திரனுண்டாம்.

(159) புத்திரத் தானத்தாதியும் லாபாதிபனும், மித்துருக்களாக, இவர்களில் புத்திரத் தானத்தாதி உச்சனும் சுபனுமாய் லாப ஸ்தானத்திலிருந்தால் புத்திரர் பலர் உண்டாவார்கள்.

(160) ஐந்துக் குடையோனும் சூரியனும் சேர்ந்தாலும் வெகு பிள்ளைகளுண்டு. ஐந்துக்குடையோனும், ராகுவும்கூடி எட்டிலிருந்தால் தத்து புத்திரனுவான், ஐந்துக் குடையவனோடு ராகுவும், சூரியனும் கூடினுல் மிருகங்கள் போலிருப்பான்.

(161) பத்துக் குடையோனும், ஐந்துக் குடையோனும் மித்துருவாகியும் சுபர்கள் வீட்டிலிருந்தால் பாலகன் தனம்தேடி வருந்தாமல் வாழ்வான்.

(162) ஐந்துக் குடையோனும், செவ்வாயும் சனியின் பார்வையைப் பெற்று ஐந்திலிருந்தால் தத்துப் புத்திரனுவான். சனி அம்சத்தில் சூரியனேறி ஐந்தில் நின்றுல் குழந்தை இல்லை.

(163) ஐந்துக்குடையோன், சூரியன் இவர்கள் சனி அங்கிசத்திலேறி சனி கண்டிடவும், ஐந்திலிருக்கவும் பர விஷயத்தில் வலிய புதல்வன் ஒருவன் பிறப்பான்.

(164) லக்கினத்தில் சந்திரனும், ஆறில் சுக்கிரனும் இருந்தால் ஒரே புதல்வனும். சூரியன், சந்திரன் இருவரும் சுபக் கேந்திரத்திலிருந்து உபய இராசியானுல் தந்தைக்கு ஈமக்கடனைச் செய்பான், மரணதசன சமயங்கத்தில்.

(165) ஐந்தாமிடத்தூதச் சுபர் பாராதிருக்க அதற்குடை யோனுடனுவது தனியாவாவது அதில் ராகு இருக்க நாக தோ ஷத்தால் புதல்வரில்லே. அதற்கு நாகப்பிரதிஷ்டை உடனே செய்தால் புத்திர ருண்டாவர்.

(166) ஐந்தில் ஆக்ஷியாக ஐந்தாமதிபதி ஐந்தாம் வீட்டி லிருந்து சுபர் பாராமல் பாவிகள் பார்க்கத் தெய்வ சாபத்தால் கர்ம மேலிட்டு ஓமகர்மஞ் செய்ய பிள்ளே யில்லேயாம்.

(167) நான்கில் பாபிகளிருந்து, ஐந்துக் குடையோனுடன் சனியும் கூடிப், பன்னிரண்டாமிடத்திலும் பாபர் தொடர்ந்து நிற்க தாய் சாபத்தால் மகவில்லேயாம். ஆனல் ஓமம், ஜபம், தானம் இவைகள் செய்யின் பிள்ளே பிறக்கும் என்று ஆகமங் களின் கருத்து.

(168) இரண்டு, பன்னிரண்டா மிடங்களில் சுபக்கோளி ருந்து பாபர் வீடாளுயினும்; பாக்கியாதிபதி பன்னிரண்டி லிருந்து, ஐந்திலிருக்கும் பாவர்கள் லக்கினதிபதியோடு அஸ்த மனமாகிக் கூடின் குல நாசமாகும், புத்திரரில்லே.

(169) சன்மம், பன்னிரண்டு, எட்டா மிடங்களில் சனி, அங்காரகன் பாவிகளிலிருந்தால் புத்திரரில்லே, புதனும், சுக்கிர னும் பத்திலும், எட்டிலும், ஐந்திலும்; எட்டுக் குடையோன், பாபிகள், சன்மாதிபதி இவர்கள் பத்திலுமிருந்தால் பிள்ளே யில்லே.

(170) சந்திரன் ஐந்திலிருந்தால் ஒரு பிள்ளே தானிருக்கும்; மற்ற பிள்ளேகள் இறக்கும் என்று கருதப்படுகிறது.

(171) குரு பாக்கியாதிபதியாய் அவனே சனி நோக்க, புத னும் சூரியனும் எங்கே யிருந்தாலும் அப்பிள்ளேயை அந்நியர்கள் வளர்ப்பார்கள்.

(172) ஏழுக் குடையோனிருக்கும் கேந்திர கோணத்தில் புத்திரகாரக னிருக்கவும், ஆறுக்குடையோன் பலமடைந்து அவ னுடன் சேர்ந்தாலும் நோக்கினலும் சுத்தமாத பிள்ளே இல்லே என்று வேதங்களின் கருத்து.

———

# 1-வது அத்தியாயம்.

—:※:—

## மேஷ லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் மேஷம் (சம்பகாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் சனியிருந்து செவ்வாயினுல் பார்க்கப்பட்டாலும் ஆரும் பாவாதிபதி செவ்வாயால் பார்க்கப்பட்டாலும் இரட்டை பிள்ளை பிறக்கும் அமைப்பு உண்டு.

(2) ஜென்ம லக்கினம் மேஷம் (தனஞ்ஜயாம்சம்) ஆகி ஐந்து ஒன்பது, பாவங்களில் பாபக்கிரகங்கள் இருந்தால் சந்ததிக்கு தடங்கள் உண்டாகும். இத் தோஷத்திற்குப் பரிகாரமாக நாக சாந்தி செய்தால் ஜீவித்திருக்கக்கூடிய சந்தானம் உண்டாகும்.

(3) ஜென்ம லக்கினம் மேஷம் (திரை லோக்யாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் சனி ஆரும் பாவாதிபதியுடன் கூடியிருந்தாலும்; குரு வானவர் ராகு, கேது இவர்களுடன் கூடியிருந்தாலும் ஜாதகனுக்கு காலாந்திரத்தில் புத்திரன் பிறப்பான். ஜாதகன் புத்திரக் கிலேசம் கொஞ்சமும், மூத்தபிள்ளை விநாச முடைய வனு மாவான்..

(4) ஜென்ம லக்கினம் மேஷம் (கால கூடாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி சுக்கிரனுடன் கூடியிருந்தாலும், ஐந்தாம் பாவத்தைக் குரு பார்த்தாலும் ஜாதகன அரைபலன் யோக முடையவனுயும் சாஸ்திரத்தில் சொல்லியபடி லிங்கதானம் செய்தால் புத்திர ப்ராப்த்தி யுடையவனுகவும் ஆவான்.

(5) ஜென்ம லக்கினம் மேஷம் (ஸ்நிக்தாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் ராகு இருந்து, அந்த பாவாதிபதியுடன் கேது கூடியிருந்தால் விருத்தாப்பிய வயதில் ஜாதகன் புத்திர யோகமுடையவன்.

(6) ஜென்ம லக்கினம் மேஷம் (ஸ்நிக்தாம்சம்) ஆகி பதினேராம் பாவத்தில் புதன், சூரியன், சுக்கிரன் இவர்களிருந்தால் ஜாதகன் அற்ப புத்திரனுடனும் அற்ப வித்தையுடனும் கூடியிருப்பான்.

(7) ஜென்ம லக்கினம் மேஷம் (சுமத்யாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி சனியுடன்கூடி புத்திர பாவத்திற் கேழில் ராகுவும ஐந்தாம் பாவத்திலேயே குருவுமிருந்தால் சந்தானம் நிலைக்காது; சாந்தி செய்தால் சந்தானம் நிலைக்கும்.

(8) ஜென்ம லக்கினம் மேஷம் (பங்கஜாம்சம்) ஆகி மூன்றும் பாவாதிபதியாகிய புதன் பதினோராம் பாவத்தில் ரவியுடன் கூடியிருந்தால் ஜாதகனுடைய புத்திரன் பெரிய கீர்த்தியுடையவனு யிருப்பன்.

(9) ஜென்ம லக்கினம் மேஷம் (அபலாம்சம்) ஆகி ஆறும் பாவத்தில் சனி, செவ்வாய் இவர்களிருந்தால் ஜாதகனுக்கு எவ்வளவு பண மிருந்தாலும் அவன் புத்திரனில்லாதவனுகிறுன். ஒரு சமயம் புத்திரன் பிறந்தாலும் இறந்துவிடும்; புத்திர தோஷம் உடையவனுகிறுன்.

(10) ஜென்ம லக்கினம் மேஷம் (துர் துராம்சம்) ஆகி ஏழாம் பாவத்தில் குரு அல்லது ஒன்பதாமாதிபதி யிருந்தால் ஜாதகன் தன் புத்திரன் மூலமாகப் புகழும், அந்தக் கிரக திசையில் விசேஷ சுகத்தையும் அடைகிறுன்.

(11) ஜென்ம லக்கினம் மேஷம் (ஸ்நிக்தாம்சம்) ஆகி, ஐந்தாம் பாவத்தில் ராகு இருந்து, அந்தப் பாவாதிபதி கேதுவுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு முதலில் ஏட்டு பெண்களும் கடைசியாக காலாந்திரத்தில் ஒரு புத்திரனும் உண்டாகும்.

(12) ஜென்ம லக்கினம் மேஷம் (சாங்கரியாம்சம்) ஆகி ஐந்தா மிடத்திற்குடைய சூரியன் பன்னிரண்டா மிடமான மீனத்திலிருந்து, புதன் ராகுவுடன் கூடியிருந்தால், புத்திர நாசம் உண்டாகும், அல்லது பிறந்து பிறந்து மரிக்கும். ஏகாதசியில் பசுதானம் செய்து அரசமரம் வைத்துப் பிரதிஷ்டை செய்து சிம்சுமாரதானம் செய்தால் வெகு காலத்திற்குப் பிறகு புத்திரன் பிறப்பான், அல்லது தாராந்திரத்தில் பிறக்கும் என்று சிலரும் சொல்கிறுர்கள். தனக்கு ஒரே புத்திரனுண்டாகும். சாந்தியாக சூரிய யந்திரதானம் செய்தல் முதலிய முயற்சிகளால் புத்திரர்கள் இருவர்களாவது, மூவர்களாவது முன் சொல்லியபடி வெகு கஷ்டத்தோடு உண்டாவர்.

(13) ஜென்ம லக்கினம் மேஷம் (சாங்கரியாம்சம்) ஆகி ஒன்பதிற்குடைய குரு பத்தாமிடத்தில் சுக்கிரன் சந்திரனுடன் கூடியிருந்தால் ஜாதகனுடைய தகப்பனுனவன் பாக்கியம் உள்ளவன், புத்திரனுடன் கூடினவன்.

(14) ஜென்ம லக்கினம் மேஷம் (காலாம்சம்) ஆகி புத்திரஸ்தானுதிபதி சூரியன், புதனுடன் கூடி பத்தாம் இடத்தில் இருந்தாலும், புத்திர ஸ்தானத்தில் சனியுடன் கூடினுலும் வளர்ப்பு

பிள்ளையால் சந்ததி யுண்டாகும். ஏகாதசியில் கோதானமும் ஸந்தான பிரதிமை விஷ்ணு ரூபமாகவும் செய்தலாலும் எண்பத்தொரு தானத்தாலும் அநேக புண்ணிய வசத்தாலும் அந்திய காலத்தில் அப்போதிருக்கிற களத்திரத்தினுல் புத்திர லாபம் அல்லது வேறு களத்திரத்தினுல் புத்திர லாபம் உண்டாகும்.

(15) ஜென்ம லக்கினம் மேஷம் (காலாம்சம்) ஆகி ஏழுக்குடையவன் சந்திரனுடன்கூடி களத்திர ஸ்தானம் சனியால் பார்க்கப்பட்டால் தன் பட்டணத்திலிருந்து வடக்கு பாகத்தில் காட்டுக்குச் சமீபமாகக் களத்திர லாபம் உண்டாகும். அவள் புத்திரனுடன் கூடினவள்.

(16) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி, ஐந்தாம் பாவாதிபதி புதனுடன் கூடியிருக்க, ஒன்பதாம் பாவத்தைக் குரு பார்த்தால் ஜாதகனுக்கு இரு மனைவியரிடத்தில் நல்ல புத்திரனுண்டாவார்கள். ஐந்தாம் பாவாதிபதி தெசை மிக்க சுபமாக இருக்கும், ஜாதகன் நீண்ட ஆயுளுடைய் இரண்டு புத்திரனுடையவன், இரண்டு புத்திரியுடையவன், மூன்று புத்திரர்களும், மூன்று புத்திரியும் உண்டு என்று வேறு சிலர் சொல்லுகிறுர்கள். மிதுன இராசியின் திரிகோணங்களில், குரு கோச்சாரத்தில் சஞ்சரிக்கும் காலையில் அல்லது ஜென்ம காலத்தில் குருவின் பார்வையடைந்த ராசியின் திரிகோணங்களிலாவது குரு வரும் சமயம் ஜாதகனுக்குப் புத்திர உற்பத்தி யுண்டாகும்.

(17) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி புத்திரகாரகனுன குரு மிதுன ராசியிலிருக்கத் தன் அம்சத்தில் இருக்கப்பட்ட செவ்வாயால் குரு பார்க்கப்பட்டால் ஜாதகனுக்குச் சில குழந்தைகள் மரித்துவிடும். அதற்காகச் சுப்பிரமணிய விரதம் செய்ய வேண்டும்.

(18) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவத்திற்கு ஐந்தில் சனி ஆறும் பாவாதிபதியுடன் கூடியிருக்க, குருவானவர் ராகு, கேது இவர்களுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு கொஞ்சம் காலம் தள்ளிப் புத்திர பிராப்தி நேரும். மூத்த பிள்ளை மரணமடைவான். அதனுல் புத்திர கிலேசம் உண்டாகும். ஜாதகனுக்கு இருபத்தைந்து அல்லது இருபத்தாறுது வயதில் புத்திரவ உற்பத்தி உண்டாகும். மூன்று பிள்ளைகளும், இரண்டு பெண்களும் ஆயுள்ளவர்களா யிருப்பர் அதிகம் பிறந்தால் மரித்துவிடும்.

(19) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஒன்பதாம் பாவத்தில் கேதுவும், மேஷாம்சத்தில் குருவும், லக்கின பாவத்திற்கு ஏழில் சனியும் இருந்தால் ஜாதகனுடைய புருஷக் குழந்தைகள் நாசத்தை அடையும். அந்த தோஷத்திற்காக நாகசாந்தி செய்து சொர்ண கேதுப் பிரதிமையை அர்ச்சித்து ஜோதிஷனுக்குத் தானம் செய்தால் நல்ல புத்திரனுண்டாகும்.

(20) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி செவ்வாய் பதினோராம் பாவத்தில் மூன்றும் பாவாதிபதியுடன் கூடியிருந்தால் ஜாதகன் நல்ல யோகமுடையவனும், புத்திர புத்திரி சுகத்துடன் கூடியவனுமாவன்.

(21) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகிப் புத்திர பாவாதிபதி சூரியன் செவ்வாயுடன் கூடியிருந்தாலும், செவ்வாயால் சூரியன் பார்க்கப்பட்டிருந்தாலும் ஜாதகன் புத்திர புத்திரி சமிர்த்தியுடையவன், ஆயுள்ள மூன்று புருஷப் பிள்ளைகளும், இரண்டு புத்திரிகளும், சுக ஜீவிகளாக உடையவன்.

(22) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகிச் சனி புத்திர ஸ்தானத்துக்கு ஆரூடாதிபதியாகி ஆரூடாதிபதி ஒரு. பாவததின் அதிபதி அந்த ராசியிலிருந்து எத்தனையாவது ராசியி லிருக்கின்றாரோ அத்தனை ராசி அவர் இருக்கும் ராசியிலிருந்து எண்ண வருகின்ற ராசியாதிபதியே அந்தப் பாவத்தின் ஆரூடாதிபதி பதியாவர். இரட்டைப்பட்ட அம்சமாகிய யுக்மாம்சத்தி லிருக்கப்பட்ட செவ்வாயால் பார்க்கப்பட்டு லக்கினத்திற்கு ஆறும் பாவாதிபதியும் செவ்வாயால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு இரட்டைப் பிள்ளை பிறககும். சூரியன் ரிஷப விருச்சிக ராசிகளில் இருந்தால் சனி புத்திராரூடாதிபதி ஆவார்.

(23) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஏழாம் பாவாதிபதி மீன ராசியில் (காதாம்சத்தில்) இருக்க இரண்டாம் பாவத்தில் செவ்வாய் இருந்தால் ஜாதகனுடைய மூத்த மனைவி புத்திரனில்லாதவள், ஜாதகன் வேறு மனைவியால் அத்தார திசையில் புத்திர விருத்தியுண்டாகும்.

(24) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஏழாம் பாவத்தில் சனி இருந்து சுக்கிரன் கேதுவுடன் கூடியிருந்து ராகுவால் பார்க்கப்பட்டும், புத்திர காரகனுன குரு தன் உச்சமாம்சத்திலிருந்து சனியாலும் பார்கப்பட்டிருந்தால் ஜாதகனுடைய மனைவிக்கு ஜாதகனுடைய இருபத்தி நான்காவது வயதில் சுகமும், இருபத்

தைந்து அல்லது இருபத்தாறுவது வயதில் புத்திர உற்பத்தியும், பிரசவத்திற்கு பிறகு மனைவிக்குத் தேக பீடையும், வாயு பீடை முதலிய பயமும் உண்டாகும்.

(25) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஐந்தாம் பாவத்தில் செவ்வாய் இருந்தால் ஜாதகனுடைய மனைவிக்கு ஐந்து அல்லது ஏழு தடவைகளில் கர்ப்ப நஷ்டமுண்டாகும்.

(26) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஏழாம் பாவாதிபதி சுக்கிரன் லக்கினத்திற்கு ஆறும் பாவததில் நீச்சனுயிருந்து சனியுடனும்கூடி இருந்தால் ஜாதகனுக்கு இரண்டு மனைவியருண்டாவார்கள். ஜாதகனுடைய முதல் மனைவி ஒரு புத்திரனும், ஒரு புத்திரியும் ஆக இருவர் பிறந்த பிறகு சூதிகா தோஷத்தால் ஜாதகனுக்கு இருபத்தெட்டு அல்லது இருபத்தொன்பதாம் வயதில் சுமங்கலியாகவே மரிப்பாள். பிறகு அப்புத்திரியும் மரித்துவிடும், ஜாதகன் பிறகு இரண்டாம் மனைவியை மணந்து அவள் மூலமாக மூன்று பிள்ளைகளும் ஒரு பெண்ணையும் அடைவான்.

(27) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி சூரியன் ஏழாம் பாவத்தில் நீச்சனுகி அங்கு செவ்வாயுடன் கூடியிருந்து, தனுசு ராசியில் ராகு இருந்தால் ஜாதகனுக்குப் புத்திர சந்தானத்துக்கு இடைஞ்சலுண்டாகும், நாகப் பிரதிஷ்டை செய்து சுப்பிரமணிய விரத மிருந்தால் அத்தோஷம் நீங்கி புத்திர சுகமுண்டாகும்.

(28) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி லக்கின பாவாதிபதி ஆறுவது பாவத்தில் ஐந்தாம் பாவாதிபதியின் கூடியிருந்து பத்தாம் பாவாதிபதி சுய க்ஷேத்திரத்தில் பலத்துடன் இருந்து நவாம்சத்தில் சனி நான்காவது பாவாதிபதியுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு நல்ல யோகமுண்டாகும். ஜாதகனுக்கு முப்பத்தைந்தில் புத்திர நஷ்டமும், முப்பத்தொன்பதில் புத்திர பிரதிபந்த சாந்தியும், நாற்பத்தொன்றில் புத்திர உற்பத்தியும், நாற்பத்துமூன்றில் ஜாதகனுடைய புத்திரன் மூலமாகத் தெய்வானுகூலமாக நிதி லாபமும், புத்திர சந்தானமும், ஐம்பத்தைந்து, ஐம்பத்தாறில் புத்திரீ புத்திர விவாகமும், அறுபத்தேழில் புத்திர பிரபலமும், பௌத்திர விர்த்தியும் நேரும்.

(29) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி சூரியன் ஐந்தாம் பாவத்திற் இரண்டாமிடமான லக்கினத்திற்கு ஆறுமிடத்திலிருந்து ஒன்று, எட்டுக்குடைய பாவாதிபதியுடனும்

கூடியிருந்து புத்திரகாரகன் ஆறும் பாவாதிபதியுடன் கூடியிருந்து ஏழாம் பாவாதிபதி சுப சத்துருவுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்குப் பற்பல விதமான புத்திர தோஷ முண்டாகும்.

(30) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஒன்பதாமாதிபதி துலா ராசியிலிருந்து சூரியன் ஆறும் பாவத்தில் எட்டாம் பாவாதிபதியுடன் கூடியிருந்தால் ஜாதகனுடைய தகப்பனுடைய மூத்த சகோதரன் புத்திரி புத்திரவம்ச விருத்தியுடையவன், ஜாதகனுடைய தகப்பனுடைய இளைய சகோதரர் இருவர்களில் ஒருவனுக்குப் புத்திர புத்திரி விருத்தியுண்டாகி சந்ததி நஷ்டமடையும், அவன் ஒரே ஒரு சந்ததி உடையவன், மற்றொருவன் புத்திரி புத்திரனில்லாதவன், ஜாதகனுடைய தகப்பனுடைய சகோதரிகள் மூவர்களில் இரு சகோதரிகள் புத்திரவமிச விருத்தி உடையவர்கள், அவர்கள் சுமங்கலியாகவே மரிப்பார்கள், மற்றவள் புருஷனில்லாத ஸ்ரீ ரூபமுள்ளவளை மணந்து நஷ்டமடைவாள்.

(31) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி, பத்து பதினோராம் பாவாதிபதிகளும், ஒன்பதாம் பாவாதிபதியும், எட்டு முதலிய பாவாதிபதியும் கூடியிருந்து லக்கினத்திற்கு இரண்டாவது பாவத்தில் இரண்டு கிரகம் கூடியிருந்து மூன்றும் பாவத்தில் நான்கு கிரகம் கூடியிருந்தால் கேந்திராதி யோகம் ஏற்படும், ஜாதகனுடைய பதினாறு வயது முதல் ஐம்பத்தெட்டு வருஷம் வரையிலும் உத்தியோகப் பிரபலமும், நல்ல சுகமும், உண்டாகிச் சீமானாகவும், நல்ல புத்திரன் முதலான பாக்கியமுள்ளவராகவும் இருப்பன்.

(32) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஒன்பதாம் பாவாதிபதியாகிய குரு பத்தாம் பாவத்தில் நீச்சத்தில் உச்சாம்சத்தில் இருந்து பிதுருகாரகனான சூரியன் உச்ச இராசியில் இருந்து நவாம்ச சக்கிரத்தில் மிதுனத்தில் செவ்வாயும் சூரியனுமிருந்தால் ஜாதகனுடைய தகப்பன் மத்திம வயதுடையவன், ஒரே புத்திரனையுமுடையவன், ஜாதகன்தான் பிறந்த இரண்டு அல்லது மூன்றும் நாளில் கண்ட முடையவனாகி, ஜாதகனுக்குக் கண்ட நிவர்த்தியும், அவ்வருஷ முடிவில் தகப்பனுக்கு மரணமும் நேரிடும்.

(33) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஐந்தாம் பாவாதிபதியாகிய சூரியன் தன் உச்ச ராசியில் லக்கினத்தில் மூன்றும் பாவாதிபதியுடன் கூடியிருந்து புத்திர காரகனான குரு நீச்ச ராசி

யில் சந்திரனுடன் கூடியிருந்து புத்திர ஸ்தானம் குடும்பாதிபதியாகிய சுக்கிரனுடன் கூடிச் செவ்வாயால் பார்க்கப்பட்டு, லக்கினத்திற்குக் குடும்ப ஸ்தானமும் சனியால் பார்க்கப்பட்டிருந்தால், ஜாதகனுக்குப் புத்திர சந்தானத்துக்கு இடைஞ்சலுண்டாகும், சாந்தியால் புத்திர சந்தான முண்டாகும், சாந்தி செய்யாவிட்டால் தத்து புத்திரனால் சந்ததி விருத்தியுண்டாகும்.

(34) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி, ஜாதகனுடைய குடும்ப ஸ்தானம் பதினோராவது பாவத்திலுள்ள செவ்வாயாலும் பன்னிரண்டாம் பாவத்திலுள்ள சனியாலும் பார்க்கப்பட்டிருந்தால் ஜாதகனுக்கு வாக்கு கொஞ்சம் தெத்துதலும், ஆயுள்வரை அம்மான் வீட்டிலேயே வாசமும், ஜாதகனுக்கு இருபத்தைந்து அல்லது இருபத்தாறுவது வயதில் புத்திர உற்பத்தியும் உண்டாகும், புத்திரி புத்திரர்கள் இருவர் சுகத்துடன் புத்திர பௌத்திர விருத்தியுடன் ஆயுளுள்ளவரை சுகமுடனிருப்பார்கள்.

(35) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி, லக்கினத்திற்குப் பன்னிரண்டாம் பாவம் வம்ச விருத்தி ஸ்தானம் ஆனபடியால், அந்த வம்சவிருத்தி ஸ்தானத்திற் கதிபதி லக்கினத்திற்குப் பத்தாம் பாவத்தில் நீச்சராசி யடைந்து வர்கோத்தமமு மடைந்து இருக்க, அந்த பாவாதிபதியாகிய சனி ஜென்ம லக்கின பாவத்தில் நீசமடைந்து சர ராசியில் மேஷத்தில் இருந்து பன்னிரண்டாம் பாவாதிபதி, பத்தாம் பாவாதிபதியால் பார்க்கப்பட்டு, வம்சவிருத்தி ஸ்தானமான பன்னிரண்டாம் பாவத்தில் லக்கினாதிபதியாகிய பாபக் கிரகம் இருந்து லக்கினத்திலும் பாபக்கிரக மிருந்தால் ஜாதகன் புத்திரனால் வம்சவிருத்தி யில்லாதவனாவான்.

(36) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஐந்தாம் பாவாதிபதியாகிய சூரியன் எட்டாம் பாவத்தில் இராசியிலும், நவாம்சத்திலும், மீன நவாம்சையில் விரையாம்சத்தை யடைந்து இருந்து, புத்திர காரனாகிய குரு கேந்திர ராசியில் இருந்து, விருச்சிகாம்சத்திலும் இருந்து, புத்திரபாவத்தைப் பார்க்காமலிருந்து, இரண்டு பதினொன்றுக்குடைய பாவாதிபதிகளுடன் கூடியிருந்தாலும், சூரியன் சுகதாம்சத்தில் இருந்து சனியாலும் பார்க்கப்பட்டாலும் ஜாதகன் புத்திர சந்தானத்துக்குத் தடங்கலுடையவனாவான். வியாபாரத்தில் தனலாபமும் அடைவன்.

(37) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஐந்தாம் பாவத்தில் ராகு இருந்து ஐந்தாம் பாவமான புத்திர நவாம்சம் செவ்வாயால் பார்க்கப்பட்டால் ஜாதகன் புத்திர சந்தான தடங்கலுடையவன், சிறிது காலம் கடந்து பிறகு சேது ஸ்நானம் நாகசாந்தி முதலியன செய்தால் ஜாதகனுக்கு புத்திரர் இருவர் உண்டாவார்கள்.

(38) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி, புத்திர ஸ்தானம் சனியால் பார்க்கப்பட்டிருந்து மேற்படி சனியும் புத்திர ஸ்தானாதிபதியும் குருவால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்குப் புத்திர ஸந்தானம் ஐம்பத்திரண்டாவது வயதில் அல்லது ஐம்பத்து மூன்றும் வயதில் சந்தேகமில்லாமல் உண்டாகும்.

(39) ஜென்ம லக்கினம் மேஷம் ஆகி ஒன்பதாம் பாவத்தில் சூரியனிருந்து ஒன்பதாவது பாவாதிபதி ஆறுவது பாவத்திலிருந்து இருவரும் நவாம்சத்தில் சிம்ம ராசியில் இருந்தால் ஜாதகனுடைய தகப்பன் தீர்க்க வயதுடையவனும், புத்திர சந்தானமும், ஒரே மனைவியுமுடையவனும் ஆவன்.

[இதற்கு மேற்பட்ட அயிட்டங்களுக்கு இந்தப் புத்தகத்தின் இரண்டாவது மலரை வாங்கிப் பார்க்கவும்.]

---

# 2-வது அத்தியாயம்.

—:✲:—

## ரிஷப லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் ரிஷபம் (துருவாம்சம்) ஆகி ஜென்ம லக்கினத்தைக் குரு பார்த்து, சனி பாராவதாம்சத்திலிருந்து, சூரியன் மேஷத்தில் பரமோச்சத்திலிருந்தால் ஜாதகன் லக்ஷ்மியோகமுடையவனுவான், அனேக புத்திரர்களுடையவனும், அவர்களால் உபசரிக்கத்தக்க பாக்கிய முடையவனுயு மிருப்பான்.

(2) ஜென்ம லக்கினம் ரிஷபம் (துருவாம்சம்) ஆகி ஜென்மத்திற்கு மூன்றில் ராகு இருந்தால் ஜாதகனுடைய தாயாரானவள் காலத்தில் புத்திரசோக முடையவன், பெரிய தாயும் புத்திர சோகத்தில் வருந்துவாள், இரண்டாம் தாய்க்குப் புத்திர னுண்டாவான்.

(3) ஜென்ம லக்கினம் ரிஷபம் (துருவாம்சம்) ஆகி லக்கினத்திற்கு ஐந்தாமதிபனுன புதன் பதினொன்றில் அமர்ந்து, புத்திர காரகனுன குரு ஒன்பதிலிருந்தால் ஜாதகன் ஆறு புத்திரர்களை

யும், இரண்டு பெண்களுக்கு அதிகமான பெண் மக்களையும் பெறுவான், இருவர் அல்லது மூவர் இறப்பர். ஐந்து புத்திரர்களுடனும், ஒரு பெண்ணுடனுமிருப்பன், சாந்தி, தான, புண்ணியத்தால் மக்களுக்கு ஆயுள் வளரும்.

(4) ஜென்ம லக்கினம் ரிஷபம் (துருவாம்சம்) ஆகி லக்கினத்திற்கு ஒன்பதாமதிபனான சனி பதினொன்றில் இருந்தால் இருபத்திரண்டிலிருந்து புத்திர பேறு மேன்மேலும் விருத்தியடையும்.

(5) ஜென்ம லக்கினம் ரிஷபம் (கமலாம்சம்) ஆகி ஏழாமிடமான விருச்சிகத்தில் நீசனான சந்திரன், சனி குஜன் இவர்களுடன் கூடியிருந்தால் இரு புத்திரரும், ஒரு புத்திரியும் தீர்காயுளுடையவரா யிருப்பார். அதிக மக்களும் உண்டாகும். சாந்தி யாதிகளால் மக்களுக்குச் சுகமுண்டு.

(6) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அபலாம்சம் பூர்வ பாகம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் ராகுவுடன்கூடி பதினோராம் பாவத்தில் குஜன் இருந்தால் ஜாதகனுக்குச் சந்தானத் தடை யுண்டாகும்.

(7) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அபலாம்சம் பூர்வ பாகம்) ஆகி பதினோராம் பாவத்தில் சூரியன் இருந்தால், ஜாதகன் நிச்சயமாய்ச் சந்தான மடைவான்.

(8) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அபலாம்சம்) ஆகி எட்டாம் பாவாதிபனான குரு ஐந்தாம் பாவாதிபனால் பார்க்கப்பட்டால் ஜாதகன் குறைந்த சந்ததி யுடையவனாவான்.

(9) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அபலாம்சம் பூர்வ பாகம்) ஆகி எட்டாம் பாவாதிபனான குரு ஐந்தாம் பாவாதிபனால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு நாகேஸ்வரப் பிரசாதத்தால் காலாந்திரத்தில் சந்தானம் சந்தேகமில்லாமல் உண்டாகும்.

(10) ஜென்ம லக்கினம் ரிஷபம் (சீதளாம்சம்) ஆகி புத்திர ஸ்தானாதிபதியாகிய ஐந்தாம் பாவாதிபன் மிதுனத்தில் துலாம்சத்தில் சுக்கிரனுடன் இருந்தால் ஜாதகனுடைய மனைவி கெர்ப்ப சிராவமுடையவள், சந்தான தடையுடையவள்.

(11) ஜென்ம லக்கினம் ரிஷபம் (சீதளாம்சம்) ஆகி புத்திர ஸ்தானமாகிய ஐந்தாம்பாவத்தில் சனி மிதுனம்சத்தில் குஜனுடன் கூடில் ஜாதகனுக்குச் சந்ததி தடையுண்டாகும். அந்தப் பாப பரிகாரகத்திற்குச் சிம்சுமாரதானம் செய்யவும், அப்படிச் செய்ய ஜாதகன் தீர்காயுளுடையவனாவான், சந்தான மடைவான், இதில் சந்தேகம் இல்லை. இரு புத்திரர், இரு பெண்கள் தீர்காயுளுள்ளவரா யிருப்பர்.

(12) ஜென்ம லக்கினம் ரிஷபம் (கதாம்சம்) ஆகி பாக்யாதிபனை சனி ஆறும் ராசியிலிருந்து, ஆறும் பாவாதிபன் பன்னிரண்டாம் பாவத்திலிருந்து அல்லது பத்தாம் பாவத்தில் சூரியனிருந்தால் ஜாதகன் புத்திரனுடையவன்.

(13) ஜென்ம லக்கினம் ரிஷபம் (கமலாம்சம்) ஆகி ஜென்மத்திற்கு ஐந்தாம் பாவமாகிய புத்திர ஸ்தானத்தின் அதிபனான புதன் சண்டாம்சத்தில் (அதாவது அலியாம்சத்தில்) சூரியனுடன் கூடினால் ஜாதகனுக்குச் சந்ததி க்ஷயமடையும்.

(14) ஜென்ம லக்கினம் ரிஷபம் (கமலாம்சம்) ஆகி ஜென்மத்திற்கு ஐந்தாம் பாவத்திலும், ஒன்பதாம் பாவத்திலும் சனி வந்தியாம்சத்தி லிருந்தால் (அதாவது மலடியாம்சத்தி லிருந்தால்) ஜாதகன் மலடிக்கு நாயகனுவான் அல்லது அவன் மனைவி மறித்த மகவைப் பெறுவாள்.

(15) ஜென்ம லக்கினம் ரிஷபம் (கமலாம்சம்) ஆகி சுக்கிரன் அங்காரகனுடன் கூடி சனியால் பார்க்கப்பட்டால் ஜாதகன் அதிர்ஷ்டப் பிரயத்தன யோகத்தால் காலாந்திரத்தில் புத்திரனை யுடையவனுவான்.

(16) ஜென்ம லக்கினம் ரிஷபம் (சிவதாம்சம்) ஆகி புத்திர ஸ்தானதிபனான புதன் நீசாம்சத்தில், நீச்ச இராசியிலிருந்தால் ஜாதகனுக்குச் சந்தானத் தடை உண்டாகும், அதிருஷ்டப் பிரயத்தனத்தால் காலாந்திரத்தில் புத்திரனுண்டாகும், கோபாலப் பிரதிமை தானம், ஞாயிற்றுக்கிழமை திரியம்பக ஜபம், வாழைத் தோட்ட தானம் இவைகளால் சந்தான முண்டாகும். இல்லாவிடில் புருஷனும் மனைவியும் கர்ப்ப நோயுடையராவர். இவன் மனையாள் கர்ப்ப சங்கையால் பீடை யடைவாள். அந்தப் பாப பரிகாரகத்திற்கு விதிப்படி சாந்தி செய்யவும்.

(17) ஜென்ம லக்கினம் ரிஷபம் (சிவதாம்சம்) ஆகி பத்தாம் பாவாதிபன் விருச்சிகத்தில் சோம வல்யம்சத்திலிருந்தால் ஜாதகனுடைய மனைவி கர்ப்பம் கலைவதால் வருந்துவாள், சந்தான தடையுடையளாவாள். கொஞ்சம் கற்பம் கலையும் என்ற பயமுண்டு. பானுவார விரதம் அனுஷ்டித்து ஏகாதசியில் பரிசுத்தனய்க் கறுப்புப் பசு தானம் செய்து 3 பொன்னல் கிருஷ்ணன்போல் பிரதிமை செய்து ஜென்மம் முதலிய தினத்தில் விதிப்படி தானம் செய்தால் தீர்காயுளுடைய சந்தானம் உண்டாகும்.

(18) ஜென்ம லக்கினம் ரிஷபம் (மங்களாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி தன் உச்சராசியிலிருக்க எட்டாம் பாவாதிபதி நீச னுடன் கூடியிருந்தாலும், குரு, ரவியுடன் கூடியிருந்தாலும் ஜாத கனுக்குக் காலாந்திரத்தில் நல்ல புத்திரன் உண்டாவான் அல்லது ஜாதகன் வேறு மனைவி யிடத்திலாவது புத்திரனை யடைவான். முதலில் பெண் குழந்தையும், அதன்பின் ஆண் குழந்தைகளாலும் ஜெனிப்பார்கள்.

(19) ஜென்ம லக்கினம் ரிஷபம் (மங்களாம்சம்) ஆகி பதினோ ராம் பாவாதிபதி சூரியனுடன் கூடியிருந்து ஏழாம் பாவாதிபதி நீசராசியை யடைந்திருக்கப் புதன் அஷ்டமாதியின் அம்சத்தை அடைந்திருந்தால் சந்தானத்துக்கு இடைஞ்சல் உண்டாகும். அந்த தோஷத்திற்குப் பரிகாரமாக பாலகோபாலப் பிரதிமை யைத் தானம் செய்வதாலும், ஞாயிற்றுக்கிழமையில் விரத மிருப்ப தாலும், சேதுஸ்தானம் அவசியம் செய்து முதலில் கோதானத் தைச் செய்து மற்ற தானங்களைப் பின்பு செய்தாலும் நல்ல திர்கா யுளையுடைய புத்திரன் பிறப்பான், க்ஷேம திசையில் முன்பாகத் தில் புத்திரன் பிறப்பான், இரண்டாம் பாகத்தில் விசேஷ பாக்கி யத்தை யடைவான்.

(20) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அம்புஜாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் சனியிருந்து ஐந்தாம் பாவாதிபதி தன் உச்ச இராசியை அடைந்திருந்து லக்கின கேந்திரத்தைக் குரு அடைந்தால் ஜாதக னுக்கு மத்திய வயதில் புத்திரனுண்டாவான். ஜாதகன் அர்ப்ப சந்தான யோகமுடையவன், முதலில் பெண் குழந்தை உண்டா கும், சிலர் வேறு மனைவியிடம் புத்திரனுண்டாவான் என்றும் இரண்டு மனைவியிடம் புத்திரனுண்டாவான் என்றும், இரண்டு ஆண் குழந்தை இரண்டு பெண் குழந்தைகளும் உண்டு என்று சொல்லுகிறார்கள்.

(21) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அம்புஜாம்சம்) ஆகி சந்திர னுக்குப் பத்தாமிடத்தில் குரு இருந்தால் அமலாயோகம் என்று சொல்லப்படுகிறது. இந்த யோகத்தில் ஜெனித்தவன் வெகு தனம், புத்திர லாபம், வாகனம முதலியன உடையவனுவன்.

(22) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அபலாம்சம் பூர்வ பாகம்) ஆகி ஜனித்தவனுக்கு ஏழாம் பாவாதிபதி சனியால் பார்க்கப்பட்

பட்டால் இரண்டு விவாகம் நடக்கும், மூத்த மனைவி புத்திரனில்லாதவள் ஆவாள்.

(23) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அபலாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் குரு இருந்து இரண்டு பாபக் கிரகங்களால் பார்க்கப்பட்டால் ஜாதகன் முன்ஜென்மத்தில் பிராமண சாபத்தை அடைந்தவன், அந்தத் தோஷ நிவர்த்திக்காக சேது ஸ்நாநம், சிவார்ச்சனை, நாகப்பிரதிஷ்டை முதலியவற்றைச் செய்தால் ஸந்தானம் உண்டு.

(24) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அபலாம்சம் பூர்வ பாகம்) ஆகி ஜெனித்தவனுக்கு ஐந்தாம் பாவாதிபதி ராகுவுடன் கூடியிருந்து பதினோராம் பாவத்தில் சனியிருந்தால் சந்தானத்துக்கு இடைஞ்சல் உண்டாகும்.

(25) ஜென்ம லக்கினம் ரிஷபம் (அபலாம்சம்) ஆகி எட்டாம் பாவாதிபதி ஐந்தாம் பாவத்தில் இருந்து சனியால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு ஸந்ததி க்ஷீணமாய் விடும்.

(26) ஜென்ம லக்கினம் ரிஷபம் (பங்கஜாம்சம்) ஆகி, செவ்வாய் ஐந்தாம் பாவத்தில் இருக்க அந்த ஐந்தாம் பாவாதிபதி சுபக் கிரகத்துடன் கூடியிருக்கக் குரு சுபக்கிரகாம்சத்தில் இருந்தால் காலாந்திரத்தில் ஜாதகன் புத்திரனை அடைவான்.

(27) ஜென்ம லக்கினம் ரிஷபம் (பங்கஜாம்சம்) ஆகி இரண்டாம் பாவத்தில் குரு இருந்து ஐந்தாம் பாவத்தில் செவ்வாய் இருந்து ஐந்தாம் பாவாதிபதி பாபியுடன் கூடியிருந்தால் ஜாதகன் புத்திர சந்தானத்துக்கு இடைஞ்சல் உண்டாகும். அந்த தோஷத்துக்கு விதிப்படி சாந்தி செய்யவேண்டும். அதாவது, கோபால கிருஷ்ணப் பிரதிமை தானம், பதினாயிரம் சிவார்ச்சனை, நாகப் பிரதிஷ்டை, நாகசாந்தி முதலியன செய்தால் புத்திர பிராப்தி உண்டாகும்.

(28) ஜென்ம லக்கினம் ரிஷபம் (பங்கஜாம்சம) ஆகி ஐந்தாம் பாவத்தில் பாபக்கிரக மிருந்து அந்த ஐந்தாம் பாவாதிபதி நீச சத்துரு க்ஷேத்திரங்களை அடைந்து குருவும் பலக் குறைவுடையவராக இருந்தால் ஜாதகன் சந்தான நாசத்தால் சோகத்தை அடைவான்.

(29) ஜென்ம லக்கினம் ரிஷபம் (பங்கஜாம்சம்) ஆகி ஒன்பதாம் பாவத்தில் சந்திரன் சுபாம்சத்திலிருந்து சகடயோகத்தில்

பிறந்தவனுக்கு அந்திய வயதில் புத்திரன் பிறப்பான். ஜாதகன் ஒரு பிள்ளையும் அநேக பெண் குழந்தைகளும் உடையவன். நான்காம் பரியாயத்தில் கோசாரத்தில் குரு ரிஷப இராசியை அடையும் சமயம் நல்ல ஆயுளுள்ள புத்திரனை சந்தேகமில்லாமல் அடைவான்.

(30) ஜென்ம லக்கினம் ரிஷபம் (சித்திராம்சம்) ஆகி பத்து, ஒன்பது, இரண்டு, ஏழு முதலிய பாவங்களில், குரு, சுக்கிரன் இவர்களிருந்தாலும், ஒன்பது பத்துக்குடையோர் பதினோராம் பாவத்தில் அல்லது லக்கின பாவத்தில் இருந்து சுபக்கிரகத்துடன் கூடியிருந்தாலும் லக்கினாதி யோகம் உண்டாகும். ஷெ யோகத்தில் ஜெனித்தவன் சீமானாகவும், நல்ல புத்திரன், மனைவி வாகனம் முதலிய பாக்கியங்களுடையவனாகவும் இருப்பன்.

(31) ஜென்ம லக்கினம் ரிஷபம் (கமலாம்சம் பூர்வ பாகம்) ஆகி நீச்ச சந்திரனுடன், சனி, செவ்வாய் இவர்கள் ஏழாமிடத்தில் கூடியிருக்கப் பிறந்தவன் தீர்க்க ஆயுளுள்ள இரண்டு பிள்ளைகளையும், நீண்ட ஆயுளுள்ள இரண்டு பெண்களையு முடையவன். ஜாதகனுக்கு அதிகமாயும் குழந்தைகள் பிறக்கும். சாந்தி செய்தால் புத்திர சுகம் உண்டாகும்.

(32) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி இரண்டாம் பாவாதிபதி சனியுடன் கூடில் ஜாதகனுக்கு இரு தாரமும், இருபத்தைந்து முதல் புத்திர விருத்தியும், யோகமும் உண்டாகும்.

(33) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி நான்காம் பாவத்தில் புத்திரஸ்தானாதிபதியாகிய புதன் இருந்து ஒன்பதாம் பாவாதிபதியுடனும் கூடியிருந்து புத்திர காரகனான குரு லக்கினத்திற்குப் பதினொன்றில் இருந்து, சந்திரன் லக்கினத்திற்கு ஐந்தாம் பாவத்தில் இருந்தால் ஜாதகன் அற்ப சந்தான யோகமுடையவன். அதற்காக நாகப் பிரார்த்தனை செய்து, சுப்பிரமணிய விரதம் இருந்தால் ஜாதகன் இரு புத்திரருடையவன், இரு புத்திரிகளுமடையவன், இதைவிட அதிக சந்ததி பிறந்தாலும் அதிக மானவர்கள் மரித்து விடுவார்கள்.

(34) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி ஒன்பது பத்துக்குடைய பாவாதிபதி இரண்டு ஐந்துக்குடைய பாவாதிபதியுடன் கூடியிருந்தால் ஜாதகன் அந்தத் திசைகளில் விசேஷ கீர்த்தியும், பாக்கிய

மும், புத்திர வர்கத்தில் அதிக சுபமும், மனைவி, புத்திரன் முதலிய சுகமும் உடையவன். பிரபுவின் புத்திரனுடைய சிநேகிதத்தால் அதிக சுக தனலாபமும் உண்டு.

(35) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி ஒன்பதாம் பாவத்தில் சூரியன் சுபருடன் கூடியிருந்து, ஒன்பதாம் பாவாதிபதி குருவுடன் கூடியிருந்து, ஒன்பதா மாருடத்தில் விருச்சிகத்தில் செவ்வாயிருந்தால் ஜாதகன் வேறொருவரால் தத்து கொள்ளபடுவான், ஒன்பதாம் பாவத்தில் இருக்கும் லக்கின பாவாதிபதியாகிய சுக்கிரன் ஸ்வீகிருதாம்சத்தில் இருந்தால் ஜாதகன் தன் குலத்திலேயே தத்து போவான். ஜாதகனுடைய சொந்த தகப்பன் புத்திரனால் சுகமடைவன். சுவீகார தகப்பன் தன் குலதர்மப்படி வாழ்பவன், தத்து புத்திர சுகமுடையவன், பரோபகார குணமுடையனுவான்.

(36) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி ஒன்பதாம் பாவாதிபதி குருவுடன் கூடியிருந்தால் ஜாதகன் மனைவி புத்திர பாக்கியமுடையவன், ஜாதகன் யோகம், பாக்கியம்; கீர்த்தி முதலிய உடையவனுவான், இவனுக்கு ஐம்பதாம் வயதில் மனைவி, புத்திரனிவர்களால் சுகமும் ஏற்படும்.

(37) ஜென்ம லக்கினம் ரிஷபம், (மீன நவாம்சம்) ஆகி சூரியன் மித்திர ராசியில் இரண்டாம் பாவத்திலிருந்து சூரியனுக்கு ஏழாமிடத்தில் சனி யிருந்தால் ஜாதகன் முன் புண்ணிய பாக்கியத்தினுல் புத்திரனுடையவனுவான்.

(38) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கின பாவத்திற் கெட்டில் சனி இருந்து இரண்டாம் பாவத்தில் சூரியனிருந்து ஏழாம் பாவாதிபதியாகிய செவ்வாய் நீச்ச மடைந்தால் ஜாதகன் இரண்டாவது விவாக மடைவான், அவளிடம் காலம் கடந்து புத்திரருடையவன், ஜாதகனுடைய மூத்த மனைவி புத்திரனில்லாதவளென்று சிலரும், ஒரு புத்திரனுடையவள் என்று வேறு சிலரும் எண்ணுகின்றனர். ஜாதகனுடைய முப்பத்தைந்து அல்லது முப்பத்தேழாவது வயதில் ஜாதகன் மூத்த மனைவி மரிப்பாள். பிறகு இரண்டாவது மனைவி வந்தபின் அவளிடம் சாந்தியால் புத்திரன் பிறப்பான். சாந்தியாக நாக சாந்தியும், சொர்ண லிங்க தானமும் செய்யவேண்டும் செய்த பிறகு ஐந்தாவது திசையில் இரண்டு புத்திரரும் மூன்று புத்திரிகளு முண்டாவார்கள்.

(39) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கினத்திற்கு ஏழாம் பாவத்தில் சந்திரனிருந்தால் ஜாதகன் மூன்ருவது திசையில் பாக்கிய வம்சத்திலுள்ள ரூபவதியான மனைவியை மணப்பன். அவள் காலங் கடந்து புத்திர யோகம் முடையவள். மேலும் இதற்கே ஜென்ம லக்கினமாகிய ரிஷபத்திற்கு ஐந்தாம் பாவத்தில் கேது இருந்து குரு, சனியுடன்கூடி சிம்ம இராசியிலிருந்தால் ஜாதகன் காலம் கடந்து புத்திரனை யடைவன், இருபத்தேழு வயதில் புத்திரி சந்ததியும் பிறகு சாந்தியால் இரண்டு புத்திரரும் உண்டாவார்கள். ஜாதகன் இரண்டு புத்திரரும், இரண்டு புத்திரிகளு முடையவன், வேறு சிலர் மூன்று புத்திரி யுடையவன் என எண்ணுகின்றனர். ஜாதகன் விவாகமடைந்த பின்பு மேஷ திரிகோணத்தில் குரு வரும்போதல்லது துலா இராசியில் அல்லது அதன் திரிகோண இராசியில் சனி வரும்போது புத்திரீ புத்திர ஜனனம், அல்லது கர்பாதானமாவது அடைவான்.

(40) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி ஜென்ம லக்கினத்திற்கு ஐந்தா பர்வாதிபதி ராகுவுடன் கூடியிருந்து குருவுக்கு ஐந்தாம் இடத்தில் சனி யிருந்து, குரு வானவர் புதனுடைய அம்சத்திலிருந்தால் ஜாதகன் காலங் கடந்து புத்திரனை யடைவான். சந்தானத் தடையுடையவன் அல்லது முன் ஜென்ம பாபம் காரணமாக மரித்த பிள்ளை பெறுவான்.

(41) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி லக்கினத்திற்கு ஐந்தாம் பாவத்திலும், ஒன்பதிலும் பாபரிருந்து, குருவும் மலட்டு அம்சத்திலிருந்தால் ஜாதகன் மலட்டு ஸ்திரீயின் கணவனுவான், அல்லது புத்திரர் பிறந்து மரித்து விடுவார்கள். வேறு சிலர் தத்து புத்திரனுடையவனென்றும் அல்லது அபிமான புத்திரனுடையவனென்றும் எண்ணுகின்றனர்.

(42) ஜென்ம லக்கினம் ரிஷபம் (கதாம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபதி சிம்ம ராசியிலிருந்தால் ஜாதகன் இருதார யோகமுடையவன், முப்பது வயதுக்குமேல் புத்திர உற்பத்தி யுடையவன். ஐம்பத்திரண்டாவது வயதில் இரண்டாவது மனைவி லாபமும், ஐம்பத்தாறில் புத்திர உற்பத்தியும் அடைவான். ஜாதகனுக்கு இரண்டாம் மனைவி யிடத்தில் புத்திர உற்பத்தி சாந்தி மூலம் உண்டாகும்.

(43) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி யாகிய புதன் நான்காம் பாவாதிபதியுடன்கூடி பன்னிரண்டாம் பாவத்தில் இருந்து லக்கினத்திற்கு இரண்டாவது பாவத்தில் குரு இருந்தால் ஜாதகனுக்கு புத்திரீ புத்திர ருண்டாவார், மூன்று புத்திரரும் ஒரு புத்திரியு முண்டாவார்கள்.

(44) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி நான்காம் பாவாதிபதி யாகிய சூரியனுனவர் சுக்கிரன், புதன் இவர்களுடன்கூடி யிருக்க செவ்வாயுடன் உள்ள ராகுவால் இவர்கள் பார்க்கப்பட்டாலும், இவர்களுடன் அவர்கள் கூடியிருந்தாலும் ஜாதகனுக்கு நாகப் பிரார்த்தனை செய்த பின்பு காலதாமதத்தில் புத்திர உற்பத்தி யும், இருபத்தேழாம் வயதில் சொர்ண சூரிய யெந்திர தானமும், சுப்பிரமணிய விரதமும் செய்த பிறகு அல்ப சந்தானமும் அடை வான். ஐம்பதில் விசேஷ கீர்த்தியும், புத்திர பிரபலமும் முடையவன்.

(45) ஜென்ம லக்கினம் ரிஷபம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி கேந்திர ராசியிலிருந்து சுக்கிரன் சூரியனுடன் கூடியிருந்தாலும், ஒன்பதாம் பாவாதிபதி சுய க்ஷேத்திரத்தில் இருந்து புத்திர காரகனுகிய குரு பாபருடன் கூடியிருந்தாலும், ஜாதகன் நாசத் தால் துக்கமடைந்து, காலங் கடந்த பிறகு நர்கப் பிரார்த்தனை சுப்பிரமணிய விரதம், ஞாயிற்றுகிழமை விரதம் முதலியவற்றால் புத்திர விருத்தியடைவான். மூன்று புத்திரரும், இரண்டு புத்திரி களும் தீர்காயுளுடைபவரா யிருப்பார்கள். இவர்கள் தவிற அதிகம் பிறந்தாலும் இறந்துவிடும்.

[இதற்கு மேற்பட்ட அயிட்டங்களுக்கு இந்தப் புத்தகத்தின் இரண்டாவது மலரை வாங்கிப் பார்க்கவும்.]

---

## 3-வது அத்தியாயம்.

—:※:—

### மிதுன லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் மிதுனம் (கமலாம்சம்) ஆகி ஐந்தா மதிபனுன சுக்கிரன் பதினென்றிலும், பதினேராமதிபனுன செவ்

வாய் நீச்ச ராசியிலுமிருப்பின் ஜாதகனுக்கு மூன்று பெண்ணும், ஒரு புத்திரனுமுண்டு, பாபத்தால் அதிகம் பிறந்தும் மறிக்கும்; குழந்தைகள் அல்பாயுளாய் பால்யத்திலேயே மரிக்கும். மூத்த மனைவிக்கு ஒரு பெண் தீர்க்காயுளுடன் உண்டு; மூத்த மனைவி வம்ச ஹீனமாயினும் ஒரு பெண்ணுடையவள்; மூத்த மனைவி இறந்த பிறகு அவள் பெண் கோபத்தால் வீட்டை விட்டேகும். இரண்டாம் மனைவியின் வம்சம் ராஜ்யம் வசிக்கும். ஜாதகன் இறந்த பிறகு இரு மனைவியரும் வெகு நாள் வசிப்பர். இரண்டாம் மனைவி கண்ணிழந்தவளாய்ப் புத்திர சோகத்தால் வாடி பேரன் பாக்கியத்தை அனுபவிப்பாள்; அவனும் புலிபோல் அயலாரால் நெருங்க முடியாமல் தீர்காயுளுடையோனா யிருப்பான்.

(2) ஜென்ம லக்கினம் மிதுனம் (முத்கராம்சம்) ஆகி லக்ஷ்மி சஷ்டி அம்சத்தில் ஜெனித்த ஜாதகனுக்குக் குரு மீனத்தில் துலாம் சத்திரிருந்தால் ஜாதகன் மனைவியிடமும், மகனிடமும் அன்புடையவனாவான்.

(3) ஜென்ம லக்கினம் மிதுனம் (கமலாம்சம்) ஆகி ஐந்தாமதிபனான சுக்கிரன் பன்னிரண்டில் ராகுவுடனிருந்து, திரிகோண ஸ்தானமாகிய கும்பத்தில் குரு விருந்தால் ஜாதகனுக்கு முதலில் ஸ்திரீ சந்தானம் உண்டு; புத்திரர் அற்பம்.

(4) ஜென்ம லக்கினம் மிதுனம் (கமலாம்சம்) ஆகி ஐந்தாமதிபனான சுக்கிரன் பன்னிரண்டில் ராகுவுடனிருந்து, திரிகோண ஸ்தானமாகிய கும்பத்திலிருக்கும் குரு சனியால் பார்க்கப்பட்டு இருந்தால் ஜாதகனுக்குப் புருஷ சந்ததி தடை யுண்டாகும்; சேது ஸ்தானத்தாலும், நாகப் பிரதிஷ்டையாலும் காலாந்திரத்தில் புத்திர லாபமுண்டு சாந்தி செய்யாமல் புத்திரன் பிறக்கின் உடனே மரிக்கும். சாந்தி செய்தால் இரு புத்திரர்; ஒரு பெண் தீர்காயுளுடையவராய் இருப்பர்.

(5) ஜென்ம லக்கினம் மிதுனம் (வசுதாம்சம்) ஆகி ஐந்தாமதிபனான சுக்கிரன் புதனுடன்கூடிப் பன்னிரண்டிலிருந்து, புத்திரகாரகனான குரு தன் சுய க்ஷேத்திரத்திலிருந்து: ஐந்தாமிடம் சூரியன், ராகு இவர்களால் பார்க்கப்பட்டால், ஜாதகன் புத்திரபாவ முடையவனாயினும் ஜாதகனுக்குத் தத்துப் புத்திர

ளுல் சந்ததி விருத்தி உண்டாகும். ஏகாதசியில் கோதானம் செய்தும், அரசமரப் பிரதிஷ்டை செய்தும், பொன் சந்தான கோபால மூர்த்தி தானம் செய்தும், மஞ்சள் லிங்கம் பூஜித்தும், பிரதிஷ்டை செய்தும், சேது ஸ்நானம் செய்தால் ஜாதகனுக்குக் காலாந்தரத்தில் புத்திர லாபம் அல்லது வேறு மனைவியிடம் புத்திரப் பேறு உண்டாகும்.

(6) ஜென்ம லக்கினம் மிதுனம் (வசுதாம்சம்) ஆகி ஏழாமதி பன் சுவக்ஷேத்திரத்தில் தன் சொந்த அம்சத்தில் இருந்து குஜனுல் காணப்பட்டால் ஜாதகனுக்குப் பத்தொன்பது வயதில் சிவந்த நிறமும், புத்திர பாக்கியமு முள்ளதார முண்டு.

(7) ஜென்ம லக்கினம் மிதுனம் (சுராம்சம்) ஆகி குரு துலாத்திலிருந்து சனி அங்காரகனுல் பார்க்கப்பட்டால் ஜாதகன் புத்திரப் பேறுக்கு யோகமுடையவன்; புகழுடையவன்; சுக வான்.

(8) ஜென்ம லக்கினம் மிதுனம் (சுராம்சம்) ஆகி குரு துலா ராசியிலேயே சுராம்சத்திலிருந்து ஆறும் பாவாதிபனுல் பார்க்கப் பட்டால் ஜாதகனுக்குத் தன்னுடைய மூன்ருந் திசையில் புத் திரப் பேறு உண்டு, அரசாங்கத்தில் பிரவேசம்; வித்தை கிடைத தல் முதலியவை யுண்டாகும்.

(9) ஜென்ம லக்கினம் மிதுனம் (துருவாம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபன் ஆறும் பாவம் அல்லது ஆறும் அம்சத்திலிருந்து நாலாம் பாவம் ராகுவால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு இரண்டு அல்லது மூன்று சந்தானம் நாசமுண்டு.

(10) ஜென்ம லக்கினம் மிதுனம் (துருவாம்சம்) ஆகி லக்கி னத்தில் ஐந்து கிரக யோகமிருந்தால் ஜாதகனுக்கு மரித்த சந்தா னம் அதிக முண்டு. மனையாள் கர்ப்ப சிராவத்தால் வருந்து வாள், ஜாதகன் சந்தானத்தடை யுடையவனுவான்.

(11) ஜென்ம லக்கினம் மிதுனம் (துருவாம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபன் ஆறும் பாவம் அல்லது ஆறும் அம்சத்திலிருந்து, லக்கினத்திலிருந்து மூன்ரும் பாவத்தில் சனி இருந்தால் ஜாதக னுக்கு இரண்டு அல்லது மூன்று சந்தானம் நாசமாகும்.

(12) ஜென்ம லக்கினம் மிதுனம் (துருவாம்சம்) ஆகி கேது லக்கினத்திலிருந்து அல்லது ஏழாம் பாவத்திலிருந்து அந்தப்

பாவாதிபன் ராகுவால் பார்க்கப்பட்டால் ஜாதகனுடைய மனை விக்கு வயிற்றில் பீடை உண்டாகும். கர்ப்பப் பையில் புழு இருக்குமென்று கருதப்படுகிறது. அவ்வித மில்லாவிட்டால் தன் மனைவி கர்ப்ப சங்கை உடையவள்.

(13) ஜென்ம லக்கினம் மிதுனம் (கமலாம்சம்) ஆகி ஐந்தா மிடத்துக்குடைய சுக்கிரன் பன்னிரண்டாமிடத்தில் ராகுவுடன் கூடியிருந்தாலும் கும்பத் திரிகோணமான மிதுன துலா ராசி களில் குரு இருந்து ஸ்திரீ காலத்தில் ஜாதகன் பிறந்தாலும் முதலில் ஸ்திரீ பிரஜையே பிறக்கும், புருஷப் பிரஜை ஸ்வல்ப மென்று அறியவும்.

(14) ஜென்ம லக்கினம் மிதுனம் (கமலாம்சம்) ஆகி சனி, ராகு இவர்களால் குரு பார்க்கப்பட்டால் ஆண் குழந்தை பிறப்ப தற்கு தோஷம் ஏற்பட்டிருக்கும். இதற்குப் பரிகாரம் சேது ஸ்நானமும், நாகப் பிரதிஷ்டையும் செய்தால் காலாந்தியத்தில் புத்திர லாபம் உண்டாகும். இதில் சந்தேகமில்லை. சாந்தி செய்யாவிட்டால் புத்திரன் பிறந்தாலும் மறித்துவிடும், சாந்தி செய்தால் தீர்காயுள் உள்ள இரண்டு புத்திரிகளும் இரண்டு புத்திரர்களும் இருப்பார்கள்.

(15) ஜென்ம லக்கினம் மிதுனம் (வசுதாம்சம்) ஆகி ஐந்தா மிடத்துக்குடைய சுக்கிரன், புதனுடன் பன்னிரண்டாமிடத்தை அடைந்திருந்தால், புத்திர காரகன் தன் வீட்டிலிருந்து, புத்திர ஸ்தானத்தைச் சூரியன், செவ்வாய் இவர்கள் பார்த்தால் புத்திர தோஷத்துடன் கூடின ஜாதகனுன இவன் தத்து புத்திரனுல் சந்ததி அடைவான். ஜன்மாந்திரத்தில் செய்த தோஷத்தாலும், பத்தினியின் திரவியத்தை அபகரித்ததாலும், அன்னியருடைய தனத்தை அபகரித்த தோஷத்தாலும் இந்த ஜன்மத்தில் புத்திர னில்லாதவனுவான். ஏகாதசியில் பசு தானம், அரசமரத்தைப் பிரதிஷ்டை, செய்வதாலும், தங்கத்தால் செய்த ஸந்தான கோபாலனுடைய விக்கிரகத்தைத் தானம் செய்வதாலும் என்பத் தொருவித தானங்களையும் செய்வதாலும், சிவலிங்கபூஜை செய்வ தாலும், நாகப் பிரதிஷ்டை செய்வதாலும், சேது ஸ்நானம் முதலிய புண்ணிய காரியங்களாலும் காலந்தப்பி புத்திர லாப முண்டாகும்; அல்லது மறுதாரந் திடமாகப் புத்திரன் பிறப்

பான். சாந்தி முதலிய தானங்கள் செய்வதால் வெகு பிரயாசையின் பலனாக புத்திரன் பிறப்பான்.

(16) ஜென்ம லக்கினம் மிதுனம் (வசுதாம்சம்) ஆகி ஏழாமிடத்துக்குடைய குரு சுய க்ஷேத்திரத்திலிருந்து தன் அம்சத்தில் இருக்கப்பட்ட செவ்வாயால் பார்க்கப்பட்டால் இருபதாவது வயதிலாவது இருபத்தொன்பதாவது வயதிலாவது விவாஹம் நடக்கும். ஜாதகன் சிவப்பு நிறமான பத்தினியடைவான், காலாந்தரத்தில் கஷ்டத்தினால் பெண் பிரஜை ஜெனிக்கும்.

(17) ஜென்ம லக்கினம் மிதுனம் (வசுதாம்சம்) ஆகி பத்தாமிடத்துக்குடைய குரு ஏழாமிடத்திலாவது பத்தாமிடத்திலாவது சந்திரனுடன் கூடியிருந்தால் ஜாதன் நல்ல கிரிகைகளையுடையவன், தனம், தாரம், புத்திரன் மூலம் பீடையும் உடையவனாவான்.

(18) ஜென்ம லக்கினம் மிதுனம் (சாங்கரியாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் பாபக்கிரகமிருந்து அந்த பாவாதிபதி பாபக்கிரகத்துடன் கூடியிருக்கப் புத்திர காரகன் நீசராசியி லிருந்தால் ஜாதகனுக்குச் சந்தானத்துக்கு இடைஞ்ச லுண்டாகும்.

(19) ஜென்ம லக்கினம் மிதுனம் (சாங்கரியாம்சம்) ஆகி குரு, லக்கினம், சந்திரன் இவற்றிற்கு ஐந்தில் பாபக்கிரகமிருந்தால் ஜாதகனுக்குப் புத்திர சந்தானம் நாசமடையும். ஆகையால் சாந்தி செய்யவேண்டியது. சகட யோகமிருந்தால் அற்ப சந்தானம், அதாவது ஒரே ஒரு சந்தானம் உண்டாகும்.

(20) ஜென்ம லக்கினம் மிதுனம் (சுதாம்சம்) ஆகி சகட யோகத்தில் ஜெனித்தவன் அநேக தனமுள்ள தனவானாயிருந்தாலும் சந்தானத்துக்கு இடைஞ்ச லுடையவன் ஆவான்.

(21) ஜென்ம லக்கினம் மிதுனம் (சுதாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் சனியிருந்து, ஏழாம் பாவாதிபதி செவ்வாயுடன் சேர்ந்திருந்து லக்கின பாவத்துக்கு ஏழில் கேது இருந்தால் புத்திர சந்தானத்துக்கு இடைஞ்ச லுண்டாகும். அந்தத் தோஷம் பரிகாரமாகும்படி சொர்ணத்தால் செய்யப்பட்ட கேது பிரதிமையை அர்ச்சித்து, ஜோதிஷனுக்கே தானம் கொடுக்கவேண்டியது. அப்படிச் செய்தால் முன் ஜென்மாந்திர புண்ணிய பிரபாவத்தாலும் பாலகிருஷ்ணனுடைய அனுகிரகத்தாலும், சூரிய புக்தியில் கர்பாதானம் சந்தேகமில்லாமல் உண்டாகும்.

(22) ஜென்ம லக்கினம் மிதுனம் (சுதாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் பாபக்கிரக மிருக்க அந்த பாவாதிபதியும் பாபக் கிரகத்துடன் கூடியிருந்து, குருவானவர் செவ்வாயுடன் கூடி யிருந்தாலும், செவ்வாயால் பார்க்கப்பட்டாலும், தங்கத்தால் சிவலிங்கம் செய்து அதைத் தானம் செய்யவேண்டும். விசேஷ தனம் உண்டாகும், புத்திரி பிறப்பாள், பிறகு புத்திர லாபம் உண்டாகும்.

(23) ஜென்ம லக்கினம் மிதுனம் (சுராம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் குரு இருந்து, ஐந்தாம் பாவாதிபதி சூரியனுடன் கூடி யிருந்தால் ஜாதகனுக்குக் காலந் தள்ளி குழந்தைகள் விருத்தி யுண்டாகும். முதலில் பெண் குழந்தை ஜெனிக்கும். அற்ப சந்தான யோகமுடையவன், ஆயுளுடைய மூன்று கன்னிகைகளை யடைவான். கோட்சாரத்தில் கடக ராசியில் குரு வரும் சமயம் ஜாதகனுக்குப் புத்திரப் பிராப்தி யுண்டாகும்.

(24) ஜென்ம லக்கினம் மிதுனம் (க்ஷமாம்சம்) ஆகி ஒன்ப தாம் பாவாதிபதி சனி, செவ்வாயுடன்கூடி, குருவால் பார்க்கப் பட்டால் ஜாதகன் புத்திரி மூலம் சுசமுடையவன்.

(25) ஜென்ம லக்கினம் மிதுனம் (பாயாம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபதி கேந்திர ராசியிலிருந்து இரண்டாம் பாவாதிபதி தன் உச்ச இராசியி லிருந்தால் ஜாதகன் இரண்டு மனைவியிடமும் • க மும், புத்திர, புத்திரிகளையு முடையவனும் ஆவான்.

(26) ஜென்ம லக்கினம் மிதுனம் (சௌம்யாம்சம்) ஆகி ஐந் தாம் பாவாதிபதி சூரியனுடன் கூடியிருக்க, குரு வானவர் செவ் வாயின் க்ஷேத்திரத்தில் இருந்து ஐந்தாம் பாவத்தைச் செவ்வாய் பார்த்தால் ஜாதகனுக்கு மரித்த குழந்தைகள் சில உண்டாகும். இரண்டு, மூன்று நாசமாயினும் ஜாதகனுக்கு இரண்டு புத்திரர் மூலம் சுகமுண்டாகும். பெண்களும் அப்படியே. ஆனால் வேறு சிலர் அதிகமும் உண்டாகலாம் என்று சொல்லுகிறார்கள்.

(27) ஜென்ம லக்கினம் மிதுனம் (சௌம்யாம்சம்) ஆகி மூன் றாம் பாவத்தைக் குரு பார்த்தால் ஜாதகனுக்கு மனைவி வம்சத் தில் சுகமுண்டாகும். ஜாதகனுடைய மாமனருக்கு மூன்று மனைவிகள் உண்டாவார்கள். ஜாதகன் அந்திய காலத்தில் நற் புத்திரனை உடையவனாவான்.

(28) ஜென்ம லக்கினம் மிதுனம் (சௌம்யாம்சம்) ஆகி இரண்டாம் பாவாதிபதி நீச இராசியில் பாபக் கிரகத்துடன் கூடியிருந்தால் இரண்டாம் பாவாதிபதி தெசையில் பூர்வ பாகத்தில் சபல யோகமும், உத்தர பாதியில் சுகமும் உண்டாகும், அந்த தெசை ஐந்தாம் தெசையாகி வரும்போது சகோதரர்களுக்குள் கலகம் உண்டாகிப் பங்கு பிரிவினை யுண்டாகும். ஜாதகன் புத்திரன் மூலமாக சுகமடைவான்.

(29) ஜென்ம லக்கினம் மிதுனம் (நளினி அம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி சூரியனுடன் கூடியிருந்து குரு, ராகுவுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்குக் கால விளம்பத்தில் புத்திர உற்பத்தி உண்டாகும். முதலில் பெண் குழந்தை ஜெனிக்கும். பிறகு ஆண் குழந்தையும் பிறக்கும்; எப்போதாவது அப் புத்திரன் கால வசத்தால் உண்டாவான்.

(30) ஜென்ம லக்கினம் மிதுனம் (கமலா கர சஷ்டியம்சம்) ஆகி புத்திர பாவாதிபதி சுய க்ஷேத்திரத்திலிருந்து செவ்வாயால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு முதலில் ஸ்திரீப் பிரஜை பிறக்கும். பிறகு புத்திரன் பிறந்தால் அந்த புத்திரன் மரித்து விடுவான். அதற்குப் பிறகு இருபத்தேழாம் வயதில் அல்லது ஜாதகனுக்கு இருபத்தாராவது வயதிலேயே புத்திரன் பிறப்பான். ஆயுள் தீர்க்கமுடைய இரண்டு புத்திரனும், மூன்று புத்திரிகளும் பிறப்பார்கள். மற்றவை மறித்துவிடும்.

(31) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி ஏழாம் பாவாதிபதி கேந்திர இராசியி லிருந்தாலும் பாபருடன் கூடியிருந்தால் ஜாதகனுடைய மனைவியர் அனேகர் மரித்து விடுவார்கள். வயோதிக வயதில் புத்திர சௌக்கிய முண்டாகும், சேது ஸ்தானத்திற்கு முந்தி கோதானம் செய்யவும்.

(32) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி ஐந்தாம் பாவத்தில் ராகு இருந்து, ஐந்தாம் பாவாதிபதி கேதுவுடன் கூடியிருந்து, குருவும் செவ்வாயும் கூடி (கும்ப இராசியில்) இருந்த.ல் ஜாதகனுக்குச் சந்தான தடையுண்டாகும். இந்தத் தோஷ பரிகாரமாக நாக சாந்தியும், சிம்சுபார தானமும் செய்தால் ஜாதகனுக்கு ஜீவனுள்ள சந்தானமாக ஒரு புத்திரனும், இரண்டல்லது மூன்று புத்திரிகளும் ஆயுளுட னிருப்பார்கள். மேற்படி சாந்தி

செய்யாவிடில் சந்தானம் (உண்டானாலும்) பிறந்தாலும் அவை நசித்துவிடும். ஜாதகன் தத்து புத்திரனை யடைவான். ஜாதகன் விவாகமடைந்த பிறகு சுகமும் சுயப் பிரபலமும், தன சம்பாதனையும் உடையவனாவான்.

(33) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி ஒன்பதாம் பாவாதிபதி இரண்டாம் பாவத்தில் இருந்து சூரியன் பன்னிரண்டாம் பாவத்தில் சுய நவாம்சத்தில் இருந்தால் ஜாதகன் தகப்பன் தீர்காயுளுடையவன். வித்தை, புத்தி முதலியன கூடினவனாயும் ஜாதகனுடைய தகப்பன் இந்த ஜென்மத்தில் விசேஷ பாக்கியமும், புத்திர பௌத்திர விருத்தியும் ப்ரபலமும் அடைவான்.

(34) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி குரு இராசியில் மிதுனத்திலும், நவாம்சத்தில் செவ்வாயின் அம்சத்திலும் இருந்து பலக் குறைவுடனு மிருந்தால் ஜாதகன் புத்திர சோக முடையவனாவான்.

(35) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி ஐந்தாம் பாவாதிபதியாகிய சுக்கிரன் சுய க்ஷேத்திரத்தில் இருந்து, அந்த ஐந்தாம் பாவத்திலிருந்து நான்காமிடத்தில் அம்சத்தில் (ரந்திர இராசியான மகர நவாம்சத்தில்) இருந்து, புத்திர ஸ்தானமான ஐந்தாம் இடத்தில் செவ்வாய் வர்க்கோத்தமடைந்து புத்திர ஸ்தானத்தில் சூரியன் இருந்தால் ஜாதகனுக்கு மூன்று விதமாக புத்திர தோஷமேற்படும்.

(36) ஜென்ம லக்கினம் மிதுனம் (ஸ்மாம்சம்) ஆகி புத்திர ஸ்தானத்தைச் சனி தன் சுய க்ஷேத்திரமான மகர ராசியிலிருந்து பார்த்தாலும், சுக்கிரன் மேற்படி சனியுடன் கூடியிருந்தாலும், ஜாதகனுக்குப் புத்திர தோஷமுண்டாகும். அந்தத் தோஷங்களுக்குச் சாந்தி செய்தால் ஜாதகனுக்கு நல்ல புத்திர உற்பத்தியுண்டாகும்.

(37) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி இரண்டாவது பாவாதிபதி கேந்திர ராசியிலிருந்து நான்காவதான கன்னியா ராசியில் சுக தாம்சத்தில் சனியிருந்தால் ஜாதகன் சௌக்கிய மடைவான். ஜாதகனுடைய புத்திரீ புத்திரர்கள் மரித்து விடுவார்கள், ஜாதகனுக்குப் புத்திர சந்ததி நிலைக்காது. ஜாதகன் தன் மூத்த சகோதரனின் புத்திரனைத் தத்து எடுத்துக்கொள்வான்.

(38) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி ஐந்தாம் பாவத்தில் ஐந்தாம் பாவாதிபதி சூரியனுடன் கூடியிருந்து புத்திர பாவத்தில் குரு இருந்தாலும், புத்திர பாவத்தைக் குரு ராசி அம்சங்களில் பார்த்தாலும், புத்திர நவாம்சத்தில் குரு இருந்து ராகு கேதுக்களுடன் கூடியிருந்தாலும், ராகு கேதுககளால் புத்திர நவாம்சம் பார்க்கப்பட்டாலும், ஜாதகனுக்குப் புத்திர ஸ்தானத்திற்கு குரு பார்வை யிருந்தால் புத்திர சந்தான முண்டாகும். சனி, ராகு இவர்களால் புத்திர ஸ்தானம் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்குப் புத்திரி சந்தானம் உண்டாகும். ஜாதகனுக்குப் புத்திர ஸ்தானத்தில் (ராசியில் அல்லது அம்சத்தில்) குரு, சூரிய சுக்கிரர் கலந்து இருந்தால் ஹரி, ஹர சாபத்தால் ஜாதகனுக்குப் புத்திர சந்தான முண்டாகாது. சாந்தி செய்யின் ஜாதகனுக்குத் தத்து புத்திரன் தீர்காயுளுடனிருப்பான். அச் சாந்திகளாவது:— நாக சாந்தி, தானம், பாலகிருஷ்ண் தானம், நாராயண பலி தானம் முதலியவைகளைக் கிருஷ்ணயாமள கல்ப விதிப்படி செய்தால் ஜாதகனுக்குத் தத்து சந்ததி நிலைக்கும். அப்படிச் செய்யாவிடில் தத்து புத்திரனுக்கு, ரோக பீடையால் பிராண பயமுண்டாகும்.

(39) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி ஏழாம் பாவாதிபதி நீச்ச இராசியில் எட்டாம் பாவத்திலிருந்து களத்திர காரகனாகிய சுக்கிரன் சுய க்ஷேத்திரத்தில் ஐந்தாம் பாவத்தில் சனியுடன் கூடியிருந்து, ஏழாம் பாவத்தில் சூரியன் செவ்வா யிவர்களிருந்து சனியால் சூரியனும் செவ்வாயும் பார்க்கப்பட்டால் ஜாதகன் ஒரே ஒரு தார முடையவன். அவள் கற்பாதான காலத்திலிருந்து கணவனோடு விரோதமடைவாள், பிறகு யௌவன வயதின் கடைசியில் தெய்வானுகூலமாகக் கணவனுடன் கூடுவாள். பிறகு ஒரே ஒரு புத்திர சந்தானத்தை அடைவான், இப்புத்திரனால் ஜாதகனுடைய வம்சவிருத்தி ஏற்படும்.

(40) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி ஐந்தாம் பாவாதிபதியாகிய சுக்கிரன் சுய க்ஷேத்திரத்தில் எட்டு ஒன்பதுக்குடைய பாவாதிபதிகளுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்குப் புத்திர சந்தானத்திற்கு இடைஞ்ச லுண்டாகும். இப்படி கிரக மிருந்து, நீச்ச ராசியில் தன் உச்சாம்சத்தில் குரு இருந்தால் ஜாதகனுக்குச் சாந்தியால் புத்திர சந்ததி ஏற்படும்.

(41) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி வித்தியா ஸ்தானத்தில் சூரியன், செவ்வாயிவர்கள் கூடியிருந்தால் ஜாதகன் வித்தைக்கு இடையூறுடையவன், இவன் ஒரே தாரம், தீர்காயுசுள்ள ஒரே புத்திரனுடையவன். ஜாதகன் புத்திர பௌத்திர விருத்தியுடைய வனுவான்.

(42) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி ஜாதகனுக்குப் புத்திர ஸ்தானுதிபதி சனியுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்குச் சீமந்த சிசு மரித்துவிடும், பிறகு இரண்டு புத்திரரும், இரண்டு புத்திரி களும் ஆக நால்வர் சுகமுடையவர்க ளுண்டாவார்கள்.

(43) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி கேதுவுடன் கூடியிருந்து ஐந்தாம் பாவம் சனியால் பார்க்கப்பட்டு புத்திர காரகனுன குரு, சூரியனுடன்கூடி லக்கின பாவத்தி லிருந் தால் ஜாதகன் அற்ப சந்தான மடைவான். ஜாதகன் ஷை கிரகப் பிரீதியாக நாகதானம் செய்தால் புத்திர பிராப்த்தியுண்டு. இந்த கிரகமுள்ள ஜாதகனுக்கு மிதுன இராசியில் திரிகோணத்தில் அல் லது மேஷ சிம்ம ராசிகளிலாவது குரு வரும்போது ஜாதகன் புத் திரீ புத்திர உற்பத்தியடைவான். இரண்டு புத்திரரும், இரண்டு புத்திரிகளும் நிலேயாயுடையவன். அதிகம் பிறந்தால் அவை நாச மடையும்.

(44) ஜென்ம லக்கினம் மிதுனம் ஆகி தனுசில் சந்திரனும் மிதுனத்தில் குருவும் இருந்து பத்தாம் பாவாதிபதியாகிய ஷை குரு தெசை வந்தால் ஜாதகன் புத்திரன் அந்த திசையில் கொண் டாடப்பட்ட கீர்த்தியும், க்ஷேத்திர கிராம சௌக்கியத்தையும் அடைவான், ஜாதகன் பேரனேக் காணும் சந்தோஷமும், புத்திர னுல் சுகமும் அடைவான்.

[இதற்கு மேற்பட்ட அயிட்டங்களுக்கு இந்தப் புத்தகத்தின் இரண்டாவது மலரை வாங்கிப் பார்க்கவும்.]

---

# 4-வது அத்தியாயம்.

—:*:—

## கடக லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் கடகம் (மஞ்சுளாம்சம்) ஆகி ஐந்தாமதிபனுன செவ்வாய் மிதுனத்திலிருந்து, விருச்சிகத்தில் சனி இருந்து, புத்திர காரகனுன குரு சூரியன் இராசியிலிருந்து, மகராம்சத்தில் சுக்கிரனுடன் கூடியிருந்தால் ஜாதகன் புத்திர னற்றவன், தத்து புத்திரனுல் சந்ததி யுண்டாகும்; கஷ்டத்தால் இரண்டு அல்லது மூன்று பெண் சந்ததி யுண்டாகும், துர்த்தேவதை பீடையால் புருஷ சந்ததி இல்லை. அரசமரப் பிரதிஷ்டை, எண்பத்தொரு சக்ர தானம், பொன் சந்தான கோபால மூர்த்திப் பிரதிமை தானம் முதலிய சாந்திகளால் காலாந்தரத்தில் வேறு மனைவியிடம் புத்திர லாபமுண்டு; இல்லாவிட்டால் குழந்தை பிறந்தாவது மறிக்கும், அன்றி இல்லாமலாவது இருக்கும்.

(2) ஜென்ம லக்கினம் கடகம் (குடிலாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் தனுசு அம்சத்தில் நீச்ச இராசியிலிருந்து ராகுவால் பார்க்கப்பட்டு இருந்தால் ஜாதகனுக்கு அதிகமான அவயவமுடைய புத்திரன் பிறப்பான்; அல்லது குறைந்த அவயவத்துடன் புத்திரன் பிறப்பான்.

(3) ஜென்ம லக்கினம் கடகம் (சம்பகாம்சம் பூர்வ பாகம்) ஆகி ஸாம்ராஜ்யத்தில் சுக பாவாதிபன் இருந்தால் ஜாதகன் கேசரி மகா யோகத்தில் பிறந்தவனுவான் யோகமுள்ளவனுகவும், இரண்டு தாரமும், நல்ல புத்திரனும் உடையவனுவான்.

(4) ஜென்ம லக்கினம் கடகம் (சம்பகாம்சம் பூர்வ பாகம்) ஆகி குஜன் சூரியனுடன் கூடியிருக்கில் ஜாதகனுடைய பிதா புத்திரனுக்குப் பயந்து அரசனை பார்க்கப் போய் போய் வருவான். ஜாதகனுக்கு இருபத்து மூன்ருவது வயதில் சந்தான உற்பத்தி நாசமடையும்.

(5) ஜென்ம லக்கினம் கடகம் (சம்பகாம்சம்) ஆகி பதினேராம் பாவம், ஒன்பதாம் பாவம், எட்டாம் பாவம், ஐந்தாவது பாவம், சப்தம பாவம் இவைகளில் சூரயன் முதலிய கிரகங்களிலிருந்தால் ஜாதகனுக்கு உண்டாகும் யோகத்திற்குக் கேந்திராதி

யோகம் என்று பெயர். ஜாதகன் நற்புத்திரர் மனைவி இவர்களுடன் கூடினவனும், யோகவானுயு மிருப்பன்.

(6) ஜென்ம லக்கினம் கடகம் (சம்பகாம்சம்) ஆகி குரு நீச்சத்தில் தன்னுச்சாம்சத்தில் ஐந்தாம் பாவாதிபதினுடன் கூடியிருந்தால் ஜாதகன் புத்திர, புத்திரிகளுடன் கூடியவன். புருஷப்பிரஜை மூன்றும் தீர்காயுளா யிருக்கும், பெண்களில் ஒருத்தி சுகஜீவியாக இருப்பள்.

(7) ஜென்ம லக்கினம் கடகம் (கமலாம்சம்) ஆகி செவ்வாய் நீசமடைந்து குரு, கேது இவர்களுடன் கூடியிருந்தாலும், இவர்களால் பார்க்கப்பட்டாலும் ஜாதகனுக்குக் காலாந்திரத்தில் அற்ப சந்தானம் உண்டாகும். குரு நீச்ச மடைந்திருந்தால் பிறந்து பிறந்து மரிக்கும். அந்தத் தோஷ சாந்திக்காக நாகப் பிரதிஷ்டை, நாக தானம் முதலிய சாந்தி செய்தால் காலம் கடந்து புத்திர சந்தானம் உண்டாகும்; அல்லது வேறு மனைவியிடம் சந்ததியுண்டாகும். க்ஷேம தெசையில் மறு விவாகமும் பிரத்தியக் தெசையில் நல்ல புத்திரன் பிறத்தலும் உண்டாகும். மூத்த மனைவி பிரஸவத்தில் மரித்த பிள்ளையைப் பிரசவிப்பாள்.

(8) ஜென்ம லக்கினம் கடகம் (சுப்ரபாம்சம்) ஆகி பூர்வ பாகத்தில் ஜெனித்தவனுக்கு லக்கினத்துக்கு இரண்டிலும் பன்னிரெண்டிலும் பாபக்கிரகங்கள் இருந்தாலும், சந்திரனுடன் கிரகமில்லாதிருந்தாலும் சந்திரனுக்கு இரண்டிலும் பன்னிரண்டிலும் பாபக்கிரக மிருந்தாலும் கத்தரி யோகம் என்று சொல்லப்படும். ஷை கத்தரி யோகத்தில் பிறந்தவனுக்கு மத்திம ஆயுளும் தார, புத்திர பாக்கியம் இவைகளும் உடையவனு யிருப்பன்.

(9) ஜென்ம லக்கினம் கடகம் (சுப்ரபாம்சம்) ஆகி சந்திரன் சுபக் கிரகத்துடன் கூடியாவது, சுபக் கிரகத்தால் பார்க்கப்பட்டாவது இருந்தாலும், வர்க்கோத்தமாம்சத்தில் சந்திரன் நான்கு கிரகங்களுடன் கூடியிருந்தாலும், பார்க்கப்பட்டாலும், லக்கினத்திலிருந்து இரண்டாம் பாவத்திலிருந்தாலும் சீமானும், நல்ல உத்தியோகமும், புத்திரன் பிறப்பதால் உண்டான சந்தோஷமும் உடையவனுவான்.

(10) ஜென்ம லக்கினம் கடகம் (கமலாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் குரு இருந்தாலும், வந்தியாம்சத்தை அடைந்திருந்தா

லும், லக்கினத்திற்கு விரய பாவத்தில் சனி யிருந்தாலும், ஐந்தாம் பாவாதிபதி நீச ராசியை அடைந்திருந்தாலும், ஸந்தான பிரதி பந்தகம் உண்டாகும், அந்த தோஷ நிவர்த்திக்குச் சுப்ரமணிய விரதமும் ; நாக சாந்தியும் செய்து ஹரிவாஸர நாளில் பசு தான மும் செய்து ஞாயிற்றுகிழமைகளில் பாநுவார விரதமும் ஒரு வருஷம் வரை அநுஷ்டித்தால் ஜென்மாந்தர சுசி ருதத்தாலும் இப்போது செய்யும் வெகு புண்ணியாறு ஸாரத்தாலும் சந்ததி யுண்டாகும். சேது ஸ்நானம் செய்து இச் சாந்திகளைச் செய்தால் புத்திரனுண்டாகும். சிலர் வேறு மனைவியினிடத்தில் புத்திரன் உண்டென்றும் அல்லது தத்துப் புத்திரன்தான் உண்டு என்றும் அபிப்பிராயப்படுகிறார்கள்.

(11) ஜென்ம லக்கினம் கடகம் (பங்கஜாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி நீச்ச இராசியிலிருந்து, புத்திர காரகன் கேதுவுடன் கூடியிருந்தால் பெண் குழந்தை தீர்க்கமாயிருக்கும். புருஷக் குழந்தையால் சோகம் உண்டாகும். குரு கோசாரத்தில் விருச் சிக இராசியில் இருக்க கற்போற்பத்தி உண்டாகும். புத்திர ஸ்தா னுதிபதி நீசராசியி லிருந்தால் சீமந்த சிசுவானது மரித்துவிடும். இந்த தோஷத்திற்குச் சாந்தி செய்தால் ஜீவனுள்ள சந்தானம் உண்டாகும். சாந்தியாக சேது ஸ்நாநம் அவசியம் செய்து நாக சாந்தி, சிம்சுமார தானம் செய்யவேண்டியது. பின்பு இரண்டு புத்திரர்களும் புத்திரிகளும் தீர்க்க ஜீவியாய் இருப்பார்கள்.

(12) ஜென்ம லக்கினம் கடகம் (வாருணும்சம்) ஆகி பதினே ராம் பாவாதிபதி புதனுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு இரு பத்திரண்டாவது வயதில் புத்திரோற்பத்தியும் அல்லது இருபத்து மூன்று வயதிலாவது புத்திர பிராப்த்தியும் ஏற்படும். ஐம்பத் தாறுவது வயதுமுதல் யோகமும், புத்திரன் மூலம் சுகப் பிராப்தி யும் உண்டு.

(13) ஜென்ம லக்கினம் கடகம் (வாருணும்சம்) ஆகி ஸுதா ஷஷ்டி யம்சத்தில் குரு விருந்து புத்திர ஸ்தானுதிபதியால் பார்க் கப்பட்டு அல்லது புத்திர ஸ்தானுதியுடன் கூடியிருந்து, சனி மீன இராசியிலிருந்தால் வெகு புத்திர யோகம் உண்டு.

(14) ஜென்ம லக்கினம் கடகம் (வாருணும்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி சனியால் பார்க்கப்பட்டால் ஜேஷ்ட புத்திரி நாச மடைவாள், பிறகு புத்திர சுகம் உண்டாகும்.

(15) ஜென்ம லக்கினம் கடகம் (திரை லோக்யாம்சம்) ஆகி செவ்வாயின் அம்சத்தில் செவ்வாயும் குருவும் கூடியிருந்தாலும் செவ்வாய் சனியால் பார்க்கப்பட்டாலும், நான்காம் பாவத்தில் ராகு இருந்தாலும் புத்திரன் பிறந்து மரித்துவிடுவதால் சோகத்தால் பீடிக்கப்பட்டவனாகவும், தேசாந்திரத்தில் சுகமுள்ளவனாகவும் இருப்பான்.

(16) ஜென்ம லக்கினம் கடகம் (திரை லோக்யாம்சம்) ஆகி பத்து, ஒன்பது, ஏழு, எட்டு முதலிய ஸ்தானங்களில் ரவி முதலிய கிரகங்களிலிருந்தால் கேந்திராதி யோகம் என்ற பெரிய யோகம் உண்டாகும். அந்த யோகத்தில் பிறந்தவன் தனவந்தனாயும், கீர்த்திவானாயும், சுகவானாயும், நல்ல மனைவி, புத்திரன் பாக்கியம் இவைகளையுடையவனாயு மிருப்பான்.

(17) ஜென்ம லக்கினம் கடகம் (சௌம் யாம்சம்) ஆகி குருத் திரிம்சாம்சத்தில் ஜெனித்தவன் இருபத்தைந்து வயதுக்கு மேல் யோகமுள்ளவனாயும், விருத்தாப்பிய வயதில் புத்திர சோகமுள்ளவன், தத்து புத்திரனால் சந்ததி விருத்தியுள்ளவன்.

(18) ஜென்ம லக்கினம் கடகம் (சௌம் யாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி நீச்சனாகி சனியுடன் சேர்ந்திருந்தாலும், சனியால் பார்க்கப்பட்டாலும், ஒன்பதாம் பாவாதிபதி ராகுவுடன் சேர்ந்திருந்தாலும்,, சந்தானத்திற்கு இடையூறுண்டாகும். ஐந்தாம் பாவத்தில் சுக்கிரன் இருந்தாலும், ஸ்திரி கால ஜாதகத்தில் முதலில் பெண் குழந்தையும், கன்னிகை விருத்தியும் சொல்லவும். குரு மிருந்த புத்ராம்சத்தில் இறந்தாலும் பிறக்கும் புருஷ சந்தானம் நாசமடையும். க்ஷேம தார தெசையில் ஸ்திரீ பிரஜைகளினுடைய விருத்தி யுண்டாகும்.

(19) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கினத்திற்கு ஐந்தாம் பாவத்தில் ராகு இருந்து குரு மகர ராசியில் செவ்வாயுடன் கூடியிருந்தால் ஜாதகன் சந்தான தடையுடையவன். அதற்குச் சாந்தியாக நாக தானம், பாலகிருஷ்ண தானம், சொர்ண லிங்கதானமிவற்றைச் செய்தால் சந்தானம் நிலைக்கும். இல்லாவிடில் சந்தான நாசமேற்படும். ஜாதகன் அற்ப சந்தான யோகமுடையவன். மூலத் திரிகோணத்தில் அல்லது ரிஷப ராசி திரிகோணத்தில் கோசாரத்தில் குரு வரும்போது ஜாதகனுக்குப் புத்திரி புத்திர உற்

பத்தி அல்லது ஜனனம் ஏற்படும். ஜாதகன் அற்ப புத்திரியுடையவன். விவாகத்திற்குப் பிறகு சுயப் பிரபலமடைவான்.

(20) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கினத்திற்குக் கேழாமிடத்தில் பாபரிருந்து சுக்கிரனும் ராகுவுடன் கூடியிருந்தால் ஜாதகன் பரஸ்திரீ சங்கமமுடையவன். வேறு சிலர் மனைவி கொஞ்சம் கணவனை மிஞ்சினவள் என்று எண்ணுகின்றனர். காலங் கடந்து புத்திர உற்பத்தி யுண்டாகும். இரண்டு மூன்று சந்தான நாசமேற்படும்.

(21) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி மகர ராசியில் குருவும், செவ்வாயும் கூடியிருந்தால் ஜாதகனுக்கு உச்சக் கிரகமும் நீச்சக் கிரகமும் கூடினுல் நீச்ச கிரகத்தின் தோஷம் நீங்கி உச்ச பலனுக ராஜயோக மேற்படும். அப்போது குருவின் திசையில், குருவுடன் கூடிய செவ்வாய் புக்தியில் சுபா சுபமிரண்டும் கலந்தும், புத்திரனுல் நல்ல யோகமும், புத்திரனுக்குக் பாக்கிய விருத்தியும் ஏற்படும்.

(22) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி சகடயோகத்தில் பிறந்தவனுக்கு ஒரு சமயம் யோக பங்கமடைவான். கொஞ்சம் புத்தர சோகமுடையவ்ன், நாற்பது வயதிற்குமேல் யோகமடைவான்.

(23) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி செவ்வாயாகி எட்டாம் பாவத்தில் பாப இராசியில் இருந்து அவருடைய திசை வந்தால் ஜாதகன் அந்த திசையில் மனஸ்தாபமும், புத்திர நாசமும் அடைவன், திசை முதலில் வெகு க்ஷேத்திர லாபமும், பிரபுவாகவும் ஆவான், திசை மத்தியில் புத்திர நாசமும், புத்திர சோகமும், ருணமும் ஏற்படும்.

(24) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி செவ்வாய் சனி க்ஷேத்திரத்தில் கரளாம்சத்தி லிருந்தால் ஜாதகன் யோக பங்கமும், புத்திர நாசத்தையும், ஷை திசையில் அடைவான்.

(25) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி ஏழாம் பாவாதிபதி தன் உச்ச ராசியிலிருந்து லக்கின பாவத்தில் நீச்சக் கிரக மிருந்தால் ஜாதகன் பரஸ்திரீகமனமுடையவன், துஷ்ட ஸ்திரி சங்க தோஷத்தால் சந்தான நாசமுடையவன், இருபத்தி நான்காவது வயதில் மனைவியிடம் புத்திரி ஜனிப்பாள், பிறகு புத்திர யோக முண்டாகும்.

(26) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கின பாவத்தில் செவ்வாயிருந்து அவர் மிருத புத்திராம்சத்திலு மிருந்தால் ஜாதகனுக்குப் புத்திரர் பிறந்து மரித்துவிடுவர், இரு புத்திரிகளும் மூத்த மனைவியிடம் புத்திரனுமுடையவன், அற்ப சந்தான யோகமுடையவன். முப்பத்தாறு அல்லது முப்பத்தேழாவது வயதில் இரண்டாவது மனைவியை மணந்து அவளிடம் புத்திரனை யடைவன், நாற்பதாவது வயதில் இரண்டாம் மனைவியிடம் யோக சாலியான புத்திரன் பிறப்பான்.

(27) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி லக்கின பாவத்திலிருந்து அவருடைய திசை வந்தால் ஜாதகன் அந்த திசையில் ஐந்தாம் பாவாதிபதி யிருக்கும் நவாம்ச திரிகோண ராசியில் கோச்சாரத்தில் குரு வரும்போது பாலகிருஷ்ண பிரதிமைதான சாந்திமூலம் ஜாதகன் இரண்டு புத்திரரையும், இரண்டு புத்திரிகளையுமடைவான், வயோதிக வயதில் புத்திர யோக முடைவனுமாவான்.

(28) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி சூரியனுடன்கூடி இரண்டாம் பாவத்திலிருந்தால் ஜாதகன் காலாந்திரத்தில் சற்புத்திரனை அடைவான். இரண்டு புத்திரரும், இரண்டு புத்திரிகளு முடையவன்.

(29) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி இரண்டாம் பாவத்தில் சூரியன், புதன் இவர்களுடன் கூடியிருந்து புத்திர காரகனுகிய குருவும் பன்னிரண்டாம் பாவத்திலிருந்தால் ஜாதகன் அற்ப சந்தான யோகமுடையவன்.

(30) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி மூன்றும் தாராதிபதி கேதுவாகி அவர் பதினோராம் பாவத்திலிருந்து பத்தாம் பாவாதிபதியுடன் கூடியிருந்தாலும், பத்தாம் பாவாதி பதியால் பார்க்கப்பட்டாலும் அவர் திசையில் ஜாதகனுக்கு விசேஷ பாக்கியமும், புத்திர வர்க்கத்தில் சுபமும் உண்டு, ஜாதகர் மூன்று புத்திரிகளும், மூன்று புத்திரர்களு முடையவர்.

(31) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி லக்கினத்திற்கு ஐந்தாம் பாவத்தில் ராகு இருந்தால் ஜாதகர் சந்தானத் தடையுடையவர், அதற்காகப் பாலகிருஷ்ண பிரதிமையையும், நாக சாந்தியும் செய்தால் இரண்டு புத்திரரும், மூன்று புத்திரிகளும் நீண்ட ஆயுளுடனிருப்பார்கள்.

(32) ஜென்ம லக்கினம் கடகம் ஆகி நான்காம் பாவாதிபதியாகிய சுக்கிரன் தன் உச்சத்திலிருந்து சந்திரன் சுய க்ஷேத்திரத்திலிருந்தால் ஸ்திர லக்கினத்தில் பிறந்தவருக்குத் தாய் சௌக்கியமுண்டாகும். மேற்படி சந்திரன் குருவால் பார்க்கப்பட்டால் ஜாதகன் தாய் குணவதியாவாள், எப்போதும் பதி பக்தியுடையவள், புத்திரனால் சுகமுடையவள்.

[இதற்கு மேற்பட்ட அயிட்டங்களுக்கு இந்தப் புத்தகத்தின் இரண்டாவது மலரை வாங்கிப் பார்க்கவும்.]

---

## 5-வது அத்தியாயம்.

—:※:—

### சிம்ம லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் சிம்மம் (சிவ தாம்சம்) ஆகி சனி லக்கினத்திற்கு மூன்றும் பாவத்தில் உச்சத்தில் பலவானு யிருக்கினும், அல்லது சனி சந்திரனுடன்கூடி இருப்பினும் ஜாதகனுக்குச் சந்ததி உற்பத்தி நாசம். சிம்சுமார தானத்தால் புத்திர சுகமுண்டு;

(2) ஜென்ம லக்கினம் சிம்மம் (மங்களாம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபன் குரூர ஷஷ்டியாம்சத்தி லிருந்தால் ஜாதகனுக்கு ஐந்து புத்திரர்களும், நான்கு பெண்களும் அல்லது இவைகளுக்கு அதிகமாகவும் உண்டு. சாந்தியால் புத்திர சுகமுண்டு, மூன்று புத்திரர், மூன்று பெண்கள் தீர்காயுளுடையவரா யிருப்பர்.

(3) ஜென்ம லக்கினம் சிம்மம் (சம்ப காம்சம்) ஆகி புத்திர ஸ்தானாதிபனுன குரு குஜனுடன் கூடியாவது, பார்க்கப்பட்டாவது இருந்தால் ஜாதகனுக்கு இரு புத்திரர், இரு பெண்கள் தீர்காயுளுடையவரா யிருப்பர், மிச்சம் நாசமாகும்.

(4) ஜென்ம லக்கினம் சிம்மம் (சுக் தாம்சம்) ஆகி ஐந்துக்குடைய குரு பதினோராமிடத்தில் புதனுடன் கூடியிருந்து, நல்ல சந்திரனால் பார்க்கப்பட்டால் ஸ்திரீ பிரஜை முதலில் ஜனிக்கும், ஐந்து பெண்களும், இரண்டு ஆண் பிள்ளைகளும் பிறப்பார்கள்.

(5) ஜென்ம லக்கினம் சிம்மம் (சுக தாம்சம்) ஆகி சுக்கிரன் லக்கினத்திற்கு பன்னிரண்டா மிடத்திலிருக்கச், சனி, செவ்வாய் இவர்களால் பார்க்கப்பட்டால் மறு தாரத்தினால் சந்ததி உண்டாகும். மூத்தவனுக்கு ஒரு பெண்ணாவது, ஆண் பிள்ளையாவது நிச்சயமாய் இருக்கும். புத்திரன், புத்திரியுடன், இரண்டாவது மனைவி கண்டபடி சண்டை செய்வதில் விருப்பமுள்ளவள்.

(6) ஜென்ம லக்கினம் சிம்மம் (சமாம்சம்) ஆகி ஐந்துக்குடையவன் நான்காமிடத்தில் (காரகனுடன் கூடியிருந்தால்) புத்திரனில்லாமல் வெகு காலம் இருப்பான். இதன் பரிகாரமாக ஏகாதசியில் கோதானமும், அரசமரம் நட்டு காப்பாற்றுவதாலும் வெகு நாளைக்குப் பிறகு காலாந்திரத்திலாவது வேறு மனைவி யிடத்திலாவது புத்திர பிராப்தி யுண்டாகும்.

(7) ஜென்ம லக்கினம் சிம்மம் (வசு தாம்சம்) ஆகி மூன்றும் பாவாதிபதி பாவருடன்கூடிச் சகோதர காரகன் நீசனாகி விரய ஸ்தானத்தில் இருந்தால் ஜாதகன் பத்தினி, தாய், புத்திரன், மூத்த சகோதரனுடனும் கூடினவன்.

(8) ஜென்ம லக்கினம் சிம்மம் (வசுதாம்சம்) ஆகி ஐந்தாமிடத்துக்குடைய குரு லக்கினத்தில் புதனுடன்கூடி மேஷாம்சத்தில் இருக்கச் சுக்கிரன், சனி இவர்களால் புத்திர பாவம் பார்க்கப்பட்டிருந்தால் ஜாதகன் காலாந்திரத்தில் நல்ல புத்திரனை அடைவான். மூத்தவளிடம் பிள்ளை பிறக்காது, பிறந்தாலும், அப்பிள்ளை மறிக்கும். மரித்த பிள்ளைக்காகச் செய்த சாந்தி முதலியவற்றாலும் புண்ணியத்தாலும் மறுபடியும் புத்திர யோகம் உண்டாகும். மறு களத்திரத்தினால் புத்திர லாபமும் உண்டாகும் என்று சிலர் சொல்லி யிருக்கிறார்கள். ஒரு பிள்ளை நீண்ட ஆயுளை உடையவன், புண்ணிய வசத்தால் இரண்டு பிள்ளையாவது இருக்கலாம். முன் செய்த பாபத்தால் பிள்ளை யில்லாமல் பெண் சந்ததி யுடனாவது இருப்பான்.

(9) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி ஐந்துக்குடைய குரு மிதுனத்திலிருந்து சுக்கிரன், செவ்வாய் இவர்களால் பார்க்கப்பட்டாலும், சுக்கிரன், செவ்வாய் இவர்கள் குருவுடன் கூடியிருந்தாலும் ஜாதகன் மலட்டு ஸ்திரீயினுடைய நாயகனாகவும், ஒரு சமயம் புத்திரன் ஜெனித்தாலும் புத்திரன் ஈனனாகவும் ஆவான். ஜாதகனுடைய மனைவி சீக்கிரம் மரிப்பவளாகவும் ஆவாள்.

(10) ஜென்ம லக்கினம் சிம்மம் (சாம தாம்சம் பூர்வ பாகம்) ஆகி ஜெனித்தவனுக்கு ஏழாம் வீட்டுக் குடையவனுடைய அம்சத்தில் சுக்கிரனிருந்து, ஏழுக்குடையவன் ஐந்தாமிடத்தில் இருந்து ஐந்துக்குடையவன் தன் உச்சத்திலிருந்தால் ஜெனித்தவனுக்கு இரண்டு தாரம் உண்டு. இரு மனைவியரிடத்தில் புத்திரப் பிராப்தம் உண்டாகும். புத்திர வர்க்கத்தில் எவனுக்காவது ஒருவனுக்கு பிரபல உத்தியோக ஜீவனம் உண்டு. அவன் அரசன்மூலம் பிரசித்திப் பெற்றுச் சேனியாதிபதி யாவான்.

(11) ஜென்ம லக்கினம் சிம்மம் (சாம தாம்சம்) ஆகி புத்திர ஸ்தானுதிபதி சுபக் கிரகத்துடன் கூடியிருந்து புத்திர ஸ்தானத்தில் சனி யிருந்தால் பத்து புத்திர புத்திரியோகமுண்டு. இரண்டு புத்திரிகள் திர்க்க ஆயுளுடையவர்கள், மீதி குழந்தை நாசமுறும்.

(12) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி ஆறும் தாராதிபதி ராகு லக்கின கேந்திரத்திலிருந்து சுபனுன பாக்யேசனுடன் கூடியிருந்து அந்த ராகு தெசை வந்தால் அந்த ஜாதகன் ஸ்ரீயோகம் என்கிற யோகசார முடையவன். அவனுக்கு வெகு சௌக்கியமும் புத்திரப் பிரபல்யமும் உண்டாகும். புத்திரனல் தனவரவு உண்டாகும்.

(13) ஜென்ம லக்கினம் சிம்மம் (சுக தாம்சம்) ஆகி ஜெனித்தவனுக்குத் தன லாபாதிபதி பத்தாம் பாவாதிபதியுடன்கூடி கேந்திரத்தி லிருந்தால் புத தெசையில் ஜாதகனுக்குப் புத்திர உற்பத்தி உண்டு.

(14) ஜென்ம லக்கினம் சிம்மம் (ஈஸ்வரி யம்சம்) ஆகி இரண்டாம் பாவத்தில் நான்கு கிரகமிருந்தால் ஜாதகன் விபத்தார தெசையில் புத்திரனில்லாத விசார முடையவனுகிருன்.

(15) ஜென்ம லக்கினம் சிம்மம் (ஈஸ்வரி யம்சம்) ஆகி புத்திர பாவாதிபதி பாபருடன் கூடியிருந்து, குரு புத க்ஷேத்திரத்தை அடைந்திருந்தால் புருஷ சந்தானத்துக்கு இடைஞ்சலுண்டு. ஜாதகன் அதிகமான பெண் குழந்தைகளையுடையவனுமாகி ஆண் குழந்தையினுல் சோக பீடிதனுகி காலாந்திரத்தில் பலனுண்டாகும். அந்த தோஷ நிவர்த்திக்காக அவசியம் சேது ஸ்தானம் செய்தும், சிவார்ச்சனை செய்தும் சக்திரக்ஷை தரித்தும், ஷஷ்டி திதி விரதமும், சுப்பிரமணிய விரதமும், ஸந்தான கோபால பிரதி

மை தானமும், நாகப் பிரார்த்தனை செய்தும், நாகப் பிரதிஷ்டை செய்தும் நாகத்தைத் தரித்த சிவலிங்கப் பிரதிமையை சகலா பரண பூஷிதமாக தானம் செய்தலால், காலந்தள்ளி நல்ல புத்திரன் பிறப்பான். விபத் தெசையில் குரு புக்தியில் இவ்வித மான புத்திரன் பிறப்பான். புத்திரன் பிறந்த பிறகு யோக முடையவனுவான்.

(16) ஜென்ம லக்கினம் சிம்மம் (தனஞ்ஜயாம்சம்) ஆகி ஐந் தாம் பாவத்தில் கேது இருந்தால் ஜாதகனுடைய மனைவிக்குப் பீடை யுண்டாகும். மனைவியாலும், புத்திரனலும் சஞ்சலத்தை அடைவான். முதலில் ஸ்திரீப் பிரஜை ஜெனிக்கும். அந்திய காலத்தில் நல்ல புத்திரன் பிறப்பான்.

(17) ஜென்ம லக்கினம் சிம்மம் (தனஞ்ஜயாம்சம்) ஆகி ஐந் தாம் பாவத்தில் சந்திரனிருந்து அந்த பாவாதிபதி புதனுடைய ராசியிலிருக்க ஏழாம் பாவத்தில் பாபக்கிரக மிருந்தால் சந்தானத் துக்கு இடைஞ்சலுண்டாகும். அந்த தோஷத்திற்கு எத்தனத் தால் ஜாதகன் சாந்தி செய்துக்கொண்டால் முன் ஜென்மாந்திர புண்ணியத்தால் அந்திய காலத்தில் நல்ல புத்திரனை அடைவான்.

(18) ஜென்ம லக்கினம் சிம்மம் (ஸுப்ராம்சம்) ஆகி ஏழாம் பாவத்தில் செவ்வாயிருந்தால் ஜாதகன் மனைவிக்குப் பீடையும், விசாரமும் உண்டாகும். அந்தச் செவ்வாயிருக்கும் இராசி நாதன் ஜாதகத்தில் பலவானுக எங்கிருந்தாலும் பாபக் கிரகத் துடன் கூடியிருந்தால் ஜாதகன் இரண்டு மனைவியுடையவன் ஆவான். அப்படி யில்லையேல் ஜாதகனுடைய மனைவிக்கு கர்ப்ப காலத்தில் சங்கர தோஷம் சம்பவிக்கும், ஷை ஜாதகனுக்குப் புத்திர சந்தானத்துக்கும் இடைஞ்சல் உண்டாகும். அந்த தோ ஷம் விலக சிம்சு மாரதானம் செய்தால் இரண்டு புத்திரிகளும் தீர்க்க ஆயுளுடையவர்களாகச் சந்தேகமில்லாமல் உண்டா வார்கள்.

(19) ஜென்ம லக்கினம் சிம்மம் (சம்பகாம்சம்) ஆகி பன் னிரண்டாம் பாவத்துக்கு ஐந்தாமிடத்தில் ராகு இருந்து ஜென்ம லக்கினத்திற்கு ஐந்தாம் பாவத்தில் குரு, செவ்வாயானவர் சூரி யன் இவர்களுடன் கூடியிருந்தால் ஜாதகன் சந்ததிக்கு இடைஞ்ச லுண்டாகும். அந்த தோஷம் நிவர்த்தியாகும்படி சேது ஸ்நாக

மும், ஐந்து கோதானமும், பாலகிருஷ்ணப் பிரதிமை தானமும் செய்தால் நல்ல புத்திரன் பிறப்பான்.

(20) ஜென்ம லக்கினம் சிம்மம் (சம்ப காம்சம்) ஆகி சுக்கிரன் ஐந்தாம் பாவத்தில் இருந்து பாபக்கிரகங்களுடன் கூடியிருந்தால் ஜாதகன் துஷ்ட ஸ்திரீ சேர்க்கையால் தோஷமுண்டாகியும், புத்திர நாசத்தால் சோகமுடையவனுகவும் இருப்பான். சேது ஸ்நாநம் முதலியன செய்து நாக சாந்தியும் செய்தால் ஐந்த ம் தெசையில் நல்ல புத்திரனுண்டாவான்.

(21) ஜென்ம லக்கினம் சிம்பம் (சம்ப காம்சம்) ஆகி ஜெனித ஜாதகனுக்கு குரு ஐந்தாம் பாவத்தில் சூரியனுடன் கூடியிருந்தால் காலந்தள்ளி புத்திரன் பிறப்பான் என்றும் அல்லது வேறு மனைவியிடம் புத்திரனுண்டாவான் என்றும் சிலர் சொல்லுகிறார்கள். வேறு சிலர் ஜாதகன் ஒரே தாரமுடையவன் என்பர். ஜாதகனுடைய ஐந்தாம் திசையில் தோஷம் நிவர்த்தி செய்த பிறகு அந்திய காலத்தில் ஜாதகன் புத்திரனை அடைவான் என்று சொல்லுகிறார்கள்.

(22) ஜென்ம லக்கினம் சிம்மம் (குஹாம்சம்) ஆகி. லக்கின பாவத்துக்கு ஐந்தாமிடத்தில் ராகு இருந்து அந்த பாவாதிபதி சந்திரனுடன் கூடியிருந்தால் சந்தானத்துக்கு இடைஞ்சல் உண்டாகும். வேறு சிலர் மேலும் லக்கினத்திற்கு இரண்டாம் பாவத்தில் சூரியனிருந்தால் வேறு மனைவியிடம் புத்திர னுண்டாவான் என்றும் அல்லது அந்திய வயதில் புத்திரனுண்டாவான் என்றும் சொல்லுகிறார்கள்.

(23) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி குரு நான்காம் பாவத்தில் பாபருடன் கூடியிருந்தால் ஜாதகன் காலங்கடந்து புத்திரனை அடைபவன், சுப்ரமணிய விரதமிருந்து நாக சாந்தி செய்வதாலும், சேது ஸ்நானம் செய்வதாலும் சந்தான சௌக்கிய முடையவனுவான். இரண்டு புத்திரரும், இரண்டு புத்திரிகளுமுடையவனுவான். ஷெ குரு கேதுவுடன் கூடியிருந்தால், இரண்டு, மூன்று சந்ததிகள் முதலில் நாசமடையும்.

(24) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி சந்திரன் கன்னியா இராசியில் வர்க்கோத்தமத்திலிருந்து, புத திரிம்சாம்சத்தில் சகட யோகத்தில் பிறந்தவனுக்கு ஜென்ம தெசையில் பாலரோக முண்

டாகி, ஜென்ம தெசையின் முடிவில் தாய் மரணம் அடைவாள். இரண்டாம் திசையில் சுதந்திரமின்றி சில நாளிருப்பான், கிராமாந்தர சஞ்சார முடையவன், விவாகத்திற்கு பிறகு மனைவி வம்சத்தில் அரிஷ்டம் சம்பவிக்கும். அப்படியில்லாவிட்டால் புத்திர நாசம் ஏற்படும். ஐந்தாம திசையில் மூன்றும் மனைவியிடம் புத்திர புத்திரீ சுக முடையவனுகவும் ஆவான்.

(25) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி ஏழாம் பாவாதிபதி பன்னிரண்டாம் பாவத்திலிருந்து சுக்கிரன் கேதுவுடன்கூடி சுய க்ஷேத்திரத்தில் மூன்றும் பாவத்திலிருந்தால் ஜாதகன் இரு மனைவியுடையவன். இரு மனைவியரிடத்திலும் சந்ததி யுடையவன். மூத்த மனைவி ஒரு புத்திரனும், இரண்டு புத்திரிகளுமுடையவள். இரண்டாம் மனைவியும் இவ்விதமே யுடையவள். இருபத்தேழாவது வயதில் ஜாதகன் புத்திரனை அடைவான். முதலில் ஸ்திரி பிரஜையும், பிறகு நாகசாந்தி, கோதானம், சேது ஸ்நாநம், பாலகிருஷ்ண தானம் முதலிய செய்து ஷ புத்திரரை அடைவான். சாந்தி செய்யாவிடில் ஜாதகனுக்குப் புத்திரர் மரித்து விடுவார்கள். நான்காவது தெசையில் புததிர உற்பத்தியும், வெகு வியாபார லாபமும் உண்டாகும்.

(26) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி ஏழாம் பாவத்தில் கேது இருந்து சுக்கிரன் செவ்வாயுடன் கூடியிருந்தால் ஜாதகன் இரு மனைவியடைவான். இரு மனைவியரும் அற்ப புத்திருடையவர்கள்.

(27) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி லக்கின பாவத்தில் ராகு இருந்து அந்த ராகு தெசை நான்காவது திசையாக வந்தால் ஜாதகன் மனைவி அந்தத் திசையில் சுய புக்தியில் மரிப்பாள். ஜாதகன் இரண்டாவதாகத் தன் மனைவியை உறவின் வர்கத்திலேயே அடைவான். இரண்டாம் மனைவியிடம் முதலில் ஸ்திரீ பிரஜை பிறக்கும் என்று சிலர் எண்ணுகின்றனர். சாந்தியால் இரண்டாம் மனைவியிடம் புத்திரனை யடைவான். இந்த மனைவியால் ஜாதகன் பூமி சுகம், தனம் முதலிய சுகத்தையும், யோகத்தையு மடைவான்.

(28) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி கும்ப ராசியில் ஏழாம் பாவாதிபதி மனைவி நாசமடையும் பாகத்திலிருந்து செவ்வாயால்

பார்க்கப்பட்டு, சுக்கிரன் ராகுவுடன் கூடியிருந்தால் ஜாதகன் மனைவிகள் மரித்து விடுவார்கள். மூன்று மனைவிகளை நாசம் செய்யும் யோகமுடையவன். நான்காவது மனைவியுடன் சுகியா யிருப்பான். ஜாதகனுடைய முதல் மனைவி இருபத்தைந்தாவது வயதில் புத்திர பிரசவத்தில் மரித்த பிறகு, இரண்டாம் மனைவி ஒரு புத்திரியைப் பிரசவத்துப் பிறகு துர்மாணமாக மரித்து விடுவாள். முப்பத்து மூன்றாவது வயதில் இரண்டாவது மனைவி மரித்த பின்பு உடனே சிக்கிரமே மூன்றாவது மனைவி அந்த பாபம் காரணமாக மரித்து விடுவாள், முப்பத்தாறுவது வயதில் அற்ப சந்தானமுடைய மனைவியை நான்காவது மனைவியாக மணப்பான். இவள் அற்ப சந்தானமாக இரண்டு புத்திரரும், இரண்டு புத்திரியு முடையவளாக ஆவாள்.

(29) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி நான்காம் பாவத்தில் ராகு இருந்து, லக்கின பாவத்தில் குரு இருந்து, ஒன்பதாம் பாவத்தையும் ஷை குருவையும் சனி பார்த்தால் ஜாதகன் சந்தான தடை யுடையவனுவான். அந்தத் தோஷம் சாந்தியாக சேது ஸ்நானம், நாகசாந்தி, பால முகுந்ததானம் முதலியன செய்தால் மேலுள்ளபடி இரு புத்திரரும், இரு புத்திரிகளும் தீர்காயுளுடைய ராவர்.

(30) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி சந்திரன் கேந்திர திரிகோணங்களி லிருந்தாலும் கேதுவுடன்கூடி மகர ராசியிலிருந்தாலும் ஜாதகன் தாய் தீர்காயுசும், புத்திர புத்திரி சுகமும், புத்திரனால் அதிக சுகமும் உடையவளாகி ஜாதகனுடைய நான்காவது திசையில் மரிப்பாள்.

(31) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி சந்திரனுக்கு ஐந்தாமிடத்தில் சனி யிருந்தாலும், குருவுக்கு ஐந்தாமிடத்தில் சனி யிருந்தாலும் குரு லக்கினத்திற்கு கைந்தாமிடத்தி லிருந்தாலும் ஷை குரு வந்தியாம்சத்தை யடைந்திருந்தால் ஜாதகனுக்கு காலம் கடந்து புத்திரர் நாகசாந்தியும், சிவலிங்க தானமும் செய்த பின்பு முதலில் பெண் குழந்தையும் பிறகு ஆண் குழந்தையும் பிறக்கும். பாலகிருஷ்ண பிரதிமை தானம் செய்யின் முப்பது வயதிற்கு மேல் முப்பத்தாறுவது வயதில் சந்ததி உண்டாகும்.

(32) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி ஆறு, ஏழுக்குடையவருடன் கூடி ஒன்பதாம் பாவத்திலிருந்தால் ஜாதகன் புத்திர சந்தான விரோதமுள்ளவன். ஜாதகன் பிதுரு சாபதோஷ முடையவன். அந்த தோஷ நிவர்த்திக்காக நாராயண பலி செய்தால் மேற்படி தோஷம் நீங்கி ஜாதகனுக்குப் புத்திர சந்தான முண்டாகும். மேலும் மேற்படி சனி சிம்ம லக்கின ஜாதக விஷயத்தில் ஷஷ்டாதி பத்திய தோஷத்துடன் மேஷ இராசியிலிருந்தால் நீச்ச தோஷமும் ஏற்படும். அதற்காக மூன்று விரல் கடைப்பொன்னால் சந்தான கோபால பிரதிமை செய்து கிருஷ்ணயாமள கல்பத்தில் உள்ள விதிப்படி மூன்று விரள கடைப் பொன்னை ஜீவத் புத்திர சந்தானமுடைய பிராம்மணனுக்குத் தானம் செய்து பிராம்மண போஜனம் செய்வித்தால் ஒரு புத்திரனும், இரண்டு புத்திரிகளும் உண்டாவார்கள்.

(33) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி சூரியன் வர்க்கோத்தமாம்சத்தில் விருச்சிக இராசியில் இருந்து குரு திரிம் சாம்சத்தில் பிறந்தவனுக்கு இரு மனைவி யோகமுண்டு. முதல் மனைவி கொஞ்சகாலம் பொருத்து ஒரு புத்திரியைப் பிரசவிப்பாள். அப் புத்திரி மரித்துவிடும். அப்போது ஜாதகன் மனைவி தேக ரோகமடைவாள். அதனால் ஜாதகன் அவளை விட்டுவிடுவான். இரண்டாம் மனைவியை ஜாதகன் இருபத்தைந்து அல்லது முப்பதாவது வயதில் மணப்பான். அவள் பதிபக்தியும், வம்ச விருத்தியும் உடையவள்.

(34) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி ஐந்தாம் பாவத்தில் செவ்வாய் சந்திரனுடன் கூடியிருந்து, புத்திர ஸ்தானம் சனி, குரு இவர்களால் பார்க்கப்பட்டால், சனியால் பார்க்கப்படுவதால் புத்திர தோஷம் உண்டாகி புத்திர மரணமும், குரு திருஷ்டியால் புத்திர விருத்தியும் உண்டாகும். அதற்குச் சாந்தியாக வெள்ளியால் பத்து ரூபா இடையில் பாலமுகுந்தப் பிரதிமை செய்து கிருஷ்ணயாமள பிரகாரம் பூஜைசெய்து, அதே அளவு தக்ஷிணையாகவும் ஜோதிஷனுக்கு பிராம்மணனுக்குத் தானம் செய்யவேண்டும். மேலும் சனிப் பிரீதிக்காக நாராயண பலியும், செவ்வாயிருப்பதாக சுப்பிரமணிய விரதமும் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் இரண்டு புத்திரரும், இரண்டு புத்திரிகளும் தீர்காயுசுட னிருப்பார்கள். இந்த சாந்திகளைச் செய்தால் முப்

பது வயதுக்குமேல் சுகமும், வியாபாரத்தில் சுகமும், நாற்பதாம் வயதில் நல்ல யோகமும் உண்டாகும், கொஞ்சம் ரேகாயோக முண்டாகும், புத்திர சந்தான யோகமும் வியாபார தனமும், ஆயுள்வரை சுகமும் ஏற்படும்.

(35) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி ஏழாம் பாவாதிபதி யாகிய சனி லக்கின கேந்திரத்தில் கேதுவுடன் கூடியிருந்து, ஏழாம் பாவத்தில் சூரியன் ராகுவுடன் கூடியிருந்து, மேற்படி சனி, சூரியனுல் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு ஜன்மாந்திரத் தில் சத்துரு சம்மந்தமும், ஏழாம் பாவத்தில் (கும்ப இராசியில்) லக்கின பாவாதிபதியாகிய சூரியன் ராகுவுடன் கூடியபடியால் விதவை ஸ்திரீயின் தோஷமும், மனைவிக்கு மூலரோக பீடையும், இதனுல் தன விரயமும் ஏற்படும், இதற்கே மேலும் சுக்கிரன் குரு வால் பார்க்கப்பட்டால் ஜாதகன் மனைவிக்கு பிரதிபந்த நிவர்த்தி யும், இருபத்திநான்காம் வயதில் நிச்சயமாக ரோகம் உண்டாகிப் பிறகு, ஏழாம் வருஷத்திலேயே சேது ஸ்தானத்தினுல் மட்டும் நிவர்த்தியாகும். களத்திர சுகமும், தேக சுகமும், புத்திர சந் தான யோகமும், இருபத்தெட்டல்லது, இருபத்தொன்பதாம் வயதில் கர்ப்பா தானமும் புத்திர உற்பத்தியு முண்டாகும்.

(36) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி யாகிய குருவும் குருநின்ற ராசிநாதனும் வக்கிரமடைந்து, புத்திர ஸ்தானத்தில் சுக்கிரனிருந்து, புத்திர ஸ்தானமும், சுக்கிரனும் செவ்வாயால் பார்க்கப்பட்டாலும், நவாம்சத்தில் தனுசு ராசியில் சனி, சூரியனிவர்கள் கூடியிருந்து, குரு ரிஷப நவாம்சத்திலும் இருந்து வக்கிரகெதியி லிவர்களிருந்தால் ஜாதகனுக்குப் புத்திர பிரதிபந்த தோஷமுண்டாகும். அல்லது புத்திரியே பிறந்து இருந்தாவது மரித்துவிடும். இதற்குச் செவ்வாய் மூலம் ஏற்படும் தோஷ பரிகாரமாக நாக சாந்தியும், நாக பலியும் சுக்கிரனுடைய தோஷத்தின் பொருட்டு சேது ஸ்நானமும் செய்தால் புத்திரி சந்தான முண்டாகும். முப்பத்தொன்பதில் கர்ப்பாதானமும், நாற்பதில் புத்திரி சந்தானமும், மனைவிக்குத் தேக பீடையும், அதிலிருந்து மூன்றும் மாதத்தில் மனைவி மரணமும் நேரிடும். ஜாதகன் இரண்டாம் மனைவியிடம் புத்திர சந்தான மடைவான். அவளும் பிரசவித்த ஒரு மாதம் அல்லது ஒன்னரை மாதத்தில் மறிப்பாள். ஜாதகனுக்கு நாற்பத்தேழாம் வயதில் புத்திரிக்கு

விவாகம் செய்வான். அப் புத்திரியை வெளிதேசத்தில் பாக்கிய வம்சத்தில் விவாகம் செய்து கொடுப்பான்.

(37) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி, சுக்கிரன் ஏழாம் பாவத்திலிருந்தால் ஜாதகனுக்கு ஐம்பத்திரண்டாம் வயதில் சுகமும் புத்திரியின் கண்வன் மூலம் சுகமும், ஐம்பத்தேழில் புத்திர வர்க்கத்தில் சுபாதிகமும் உண்டாகும்.

(38) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி, பத்தாம் பாவாதிபதி ஐந்தாம் பாவத்திலிருந்து, நான்காம் பாவாதிபதி பத்தாவது (அம்சத்தில்) ரிஷப இராசியில் நவாம்சையில் குருவுடனும் கூடியிருந்தால் ஜாதகன் அந்திய வயதில் வேதாந்தத்தில் மனமுடையவனுகி எப்போதும் மன நிம்மதி யுடையவனுவான். பன்னிரண்டாம் பாவாதிபதி சர ராசியிலிருந்து செவ்வாயால் பார்க்கப்பட்டாலும், பன்னிரண்டாம் பாவத்தில் கேது யிருந்தால் ஜாதகன் ஆபத்துச் சன்னியாசமடைந்து, மரண காலத்தில் ரோகபீதியின்றி ஞானமார்க்கத்திலேயே மரித்து விடுவான். மூத்த புத்திரியின் புத்திரன் மூலமாக கர்ம மடைவான்.

(39) ஜென்ம லக்கினம் சிம்மம் ஆகி சுய க்ஷேத்திரத்தில் சுநதாம்சத்தில் சூரியனிருந்து, நான்கு, ஒன்பதுக்குடைய பாவாதிபதிகளுடன் கூடியிருந்தாலும், இரண்டு, பதினொன்றுக் குடையவருடன் கூடியிருந்தாலும், ஜாதகன் தகப்பன் சுகமும், ஒரே தாரமும், புத்திர சந்தானமு முடையவன்.

[இதற்கு மேற்பட்ட அயிட்டங்களுக்கு இந்தப் புத்தகத்தின் இரண்டாவது மலரை வாங்கிப் பார்க்கவும்.]

---

# ௬-வது அத்தியாயம்.

—:※:—

## கன்னியா லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் கன்னி (சாங்கரியாம்சம்) ஆகி ஐந்துக் குடைய சனி விருச்சிகத்தில் சிம்மத்தின் நவாம்சத்தில் இருந்து புத்திர காரகனுன குரு மீனத்தில் சுய க்ஷேத்திரத்தில் சந்திர

னுடன்கூட இருந்து செவ்வாயால் பார்க்கப்பட்டால் இரண்டு புத்திரர்கள் வெகு காலம் நீண்ட ஆயுளை உடையவர்களாகவும், இரண்டு புத்திரிகள் அப்படியே நீண்ட ஆயுளை யுடையவர்களாகவும் இருப்பார்கள்.

(2) ஜென்ம லக்கினம் கன்னி (சாங்கரியாம்சம்) ஆகி சனியும் குருவும் மீனத்திலும், நவாம்சத்தில் குரு கும்பாம்சத்தில், இருந்து குஜனால் பார்க்கப்பட்டால் ஜாதகனுடைய எட்டாவது அல்லது ஒன்பதாவது வயதில் ஜாதகனுடைய தாய் மரிப்பாள் என்று அன்னிய சாஸ்திரத்தில் பண்டிதர்கள் சொல்கிறார்கள். சனி, செவ்வாய், சூரியன், ராகு புக்தி காலங்களில் மனைவி, புத்திரன் முதலியவர்களுக்குப் பீடை உண்டாகும். மூன்று புத்திரர்களையும் இரண்டு புத்திரிகளையும் உடையவள் என்று சிலர் சொல்கிறார்கள். அதிகம் புத்திரனுள்ள இந்த ஜாதகன் விஷயத்தில் சாந்தியின் மூலம் புத்திர சுகம் உண்டாகும்.

(3) ஜென்ம லக்கினம் கன்னி (சாங்கரியாம்சம்) ஆகிப் பிறந்தவனுக்கு ஒவ்வொரு தெசையிலும சனி புக்தியிலும், குஜ, சூரிய, ராகு, கேது முதலான கிரகங்களின் புக்திகளிலும் கோசாரத்தில் சனி கெட்ட ஸ்தானத்தில் இருக்கும்போது அபமிருத்து பயம் உண்டாகும். மனைவிக்கும், புத்திரனுக்கும் பீடையும் தனக்குத் திருடர்களாலும், நெருப்பாலும், உபத்திரவம் நேரும், பிதா மரணம் நேரும்.

(4) ஜென்ம லக்கினம் கன்னி (மாலின்யம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி ஏழாம் பாவத்தில் சுக்கிரனுடன் கூடியிருந்தால் ஜாதகன் புத்திரன், மனைவியுடன்கூடி மாமியார் வீட்டில் வாசம் செய்வான்.

(5) ஜென்ம லக்கினம் கன்னி (சீதளாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி மூன்றும் பாவத்தில் குருவுடன் கூடியிருந்தால் இரண்டு புத்திரர்கள் தீர்காயுளுடையவர்கள். மூன்று புத்திரிகளும் ஆயுளுடையவர்களாவார்கள். மீதி இரண்டு மூன்று சந்தானம் நாசமடையும்.

(6) ஜென்ம லக்கினம் கன்னி (சுதாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தைச் சந்திரன் அடைந்து, சந்திரன் ராகு கேதுக்களால் பார்க்கப்பட்டாலும், கூடியிருந்தாலும் அல்லது செவ்வாய், சனி,

சூரியன் இவர்களால் பார்க்கப்பட்டாலும் பிரதிபந்த பீடை யுள்ளனாகவும், குரு பலவானாகி வேறு இடத்தில் இருந்தாலும் போக ஸ்திரீவர்கத்தில் அனேக கன்னிகைகளை அடைந்து கலி யாண மில்லாதவனாகி அநேக குழந்தைகள் உண்டாகும். அநேக குழந்தைகள் மரித்துவிடும்.

(7) ஜென்ம லக்கினம் கன்னி (சுதாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் சுக்கிரனிருந்தாலும், ஒன்பதாம் பாவத்தைக் குரு பார்த்தாலும், காலாந்திரத்தில் ஜாதகனுக்குப் புத்திரப் பிராப்தி யுண்டாகும். அல்லது ஜாதகன் சுவீகாரம் செய்துக்கொள்ளப் பட்ட புத்திரனுடையவனாவான்.

(8) ஜென்ம லக்கினம் கன்னி (பங்கஜாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி தன் உச்ச இராசியிலிருந்து, அந்த உச்ச பாவாதிபதி நீச்ச ராசியிலிருந்து பன்னிரண்டாம் பாவத்தில் குருவும் இருந் தால் ஜாதகனுக்குக் காலாந்திரத்தில் நல்ல புத்திரன் பிறப்பான்.

(9) ஜென்ம லக்கினம் கன்னி (பங்கஜாம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபதி சூரியனுடன் கூடியிருந்தாலும், சூரியனால் பார்க்கப் பட்டாலும், நான்காம் பாவத்தில் கேதுவும் இருக்க ஜெனித்த ஜாதகனுக்குக் காலாந்திரத்தில் புத்திரன் பிறப்பான். அந்த தோஷத்திற்குப் பரிகாரமாக ஞாயிற்றுக்கிழமை விரதமும், கேதுப் பிரீதியும், நாக சாந்தியும் செய்த பிறகு ஜாதகனுடைய ஐந்தாம் திசையில் தீர்காயுளுள்ள இரண்டு புத்திரர்களும், நான்கு புத்திரிகளும் பிறப்பார்கள்.

(10) ஜென்ம லக்கினம் கன்னி (சம்பகாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி நீசமடைந்து இருக்க, குருவுக்கு ஐந்தாம் பாவத்தில் சூரியனிருந்தால் ஜாதகனுக்கு அந்திய காலத்தில் புத்திர உற் பத்தியும், முதலில் பெண் பிரஜைகளும் உண்டாகும்.

(11) ஜென்ம லக்கினம் கன்னி (தனதாம்சம்) ஆகி நான்காம் பாவாதிபதி நீச்ச ராசியிலிருந்து நான்காம் பாவத்தில் சனி யிருந்தால் ஜாதகன் வளர்புத்தாய் மூலம் சௌக்கியமும், அவ ளால் திரவிய லாபமும் அடைவான். வியாபாரத்தில் தன விருத்தியும் புத்திரனால் கொஞ்சம் சுகமும் உடையவன்.

(12) ஜென்ம லக்கினம் கன்னி (தனதாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி சுக்கிரனால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு முதலில்

பெண் குழந்தைகளுண்டாகும். ஜாதகன் அற்ப சந்தான யோக முடையவன். காலாந்திரத்தில் அல்லது வேறு மனைவியிடம் நல்ல புத்திரன் உண்டாவான்.

(13) ஜென்ம லக்கினம் கன்னி (தன தாம்சம்) ஆகி மூன்றும் பாவத்தில் சனி யிருந்தால் ஜாதகனுடைய மாமனுர் மரணமடைவர். மூன்றுமிடம் யாமியார் வீடு ஆதலால் மூன்றும் பாவத்தில் சனியிருக்கப் பிறந்த ஜாதகனுக்கு பெண்ணைக் கொடுத்தால் பெண் கொடுக்கிற மாமனுர் மரணமடைவான். மூன்றும் பாவத்தில் சனி யிருப்பதால் சீமந்தம் செய்யப்பட்ட பின் பிறந்த ஜாதகனுடைய சீமந்த புத்திரன் நாசமடைவான்.

(14) ஜென்ம லக்கினம் கன்னி (திரை லோக்கியாம்சம்) ஆகி சகோதர ஸ்தானுதிபதியாகிய செவ்வாய் பதினொன்றில் கேந்திர திரிகோணங்களிலிருக்க ஜெனித்த ஜாதகன் சந்தானத்துக்கு இடைஞ்சலுடையவனுவான்.

(15) ஜென்ம லக்கினம் கன்னி (மங்களாம்சம்) ஆகி ஒன்பதாம் பாவத்திற்கு மூன்றுமிடத்தில் குரு இருந்தால் ஜாதகன் புத்திரர், புத்திரி சுகமுடையவன்.

(16) ஜென்ம லக்கினம் கன்னி (மங்களாம்சம்) ஆகி சந்திரன் ஐந்தாம் பாவத்திலிருந்து அந்த ஐந்தாம் பாவாதிபதி லக்கினத்திற்கு ஆறும் பாவத்தில் இருந்து, ஐந்தாம் பாவத்தைக் குரு பார்த்தாலும், அல்லது ஐந்தாம் பாவத்தில் குரு இருந்தாலும் புத்திர ஸந்தானத்திற்கு இடைஞ்சலுண்டாகும் சாந்தி செய்தால் இடைஞ்சல் நீங்கி ஆறும் பாவத்தில் சனி யிருந்தாலும் கர்ப்ப முண்டாகும்.

(17) ஜென்ம லக்கினம் கன்னி (மங்களாம்சம்) ஆகி சூரியன் புதன், குரு, சுக்கிரன் இவர்கள் ஒன்பதாம் பாவத்தில் இருந்தார்களாயின் ஜாதகன் அற்ப புத்திரனும், வியாபாரமு முடையவன்.

(18) ஜென்ம லக்கினம் கன்னி (கமலாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி ஆறும் பாவத்திலிருந்து சுய க்ஷேத்திரமாகிய விருச்சிகத்தில் இருக்கப்பட்ட செவ்வாயால் பார்க்கப்பட்டு ஒன்பதாம் பாவாதிபதி சுக்கிரன், ஐந்தாம் பாவத்தில் இருக்க ஒன்பதாம் பாவத்தில் குருவும் இருக்கப் பிறந்த ஜாதகனுக்குப் புத்திர பலமான து நாசமடைந்துவிடும். விருஷப ராசித் திரிகோணங்களில்

கோட்சாரத்தில் குரு வரும் சமயம் புத்திர ப்ராப்தியுண்டாகும். குருவின் பார்வையுள்ள இராசி திரிகோணங்களில் கோட்சாரத்தில் குரு விருந்தாலும், புத்திர புத்திரி ப்ராப்தியுண்டாகும். சுப்பிரமணிய விரதம் செய்தால் இரண்டு புத்திரன்களும், இரண்டு புத்திரிகளும் தீர்காயுளுடையவர்களா யிருப்பார்கள். அதிகம் பிறந்தால் மறித்துவிடும்.

(19) ஜென்ம லக்கினம் கன்னி (ரௌத்ராம்சம்) ஆகி குரு சிம்மத்தில் காதாம்சத்திலிருக்கச் சுக்கிரன் சனியுடன் கூடியிருந்தாலும் சனியால் பார்க்கப்பட்டாலும் ஜாதகனுக்கு மூன்று மனைவிகள் ஏற்படுவார்கள் மூத்த மனைவி அற்ப சந்தான முள்ளவள். பிரசவத்தில் அவள் மரிப்பாள். இரண்டாம் மனைவியும் அப்படியே ஆவாள். மூன்றும் மனைவி சுகத்தை யுடையவள். மூன்றும் மனைவி ஸ்திரீ பிரஜைகளைப் பெறுவாள். அற்ப சந்தான முடையவளாவாள்.

(20) ஜென்ம லக்கினம் கன்னி (ஸ்நிக்தாம்சம்) ஆகி ஜாதகனுக்கு ஏழாம் பாவாதிபதி ராகுவுடன் கூடியிருக்க ஏழாம் பாவத்தைச் செவ்வாய் பார்த்தால் ஜாதகனுடைய மூத்த மனைவி புத்திர னில்லாதவள். வேறு மனைவியிடம் ஜாதகன் புத்திரனை அடைவான்.

(21) ஜென்ம லக்கினம் கன்னி (ஸ்நிக் தாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் கேது இருந்து ஐந்தாம் பாவாதிபதி தன் உச்ச இராசியில் இருக்கச் சந்திரனுக்கு ஐந்தாமிடத்தில் சனி யிருந்தால் ஜாதகனுக்கு சந்தானத்துக்கு இடைஞ்சல் உண்டாகும். அந்த தோஷத்துக்குப் பரிகாரமாகச் சேது ஸ்நாநம், சிவார்ச்சனை, நாக சாந்தி, பாலகிருஷ்ணப் பிரதிமை தானம் இவற்றில் முதலில் சேது ஸ்நாநம் செய்து, பசு தானம் செய்து பிறகு மற்ற தானம் முதலிய பரிகாரங்களைச் செய்யவேண்டும். அதற்குப் பிறகு தன் மூத்த மனைவியிடம் காலாந்திரத்திலாவது வேறு மனைவி யிடத்திலாவது அற்ப சந்தானம் யோகமுடையவனு யிருந்தாலும் முதலில் பெண் குழந்தைகளும், பின்பு புருஷக் குழந்தைகளும் பிறக்கும். தீர்காயுளுடைய மூன்று பெண்களும், இரண்டு புருஷப் பிள்ளைகளும் பிறப்பார்கள்.

(22) ஜென்ம லக்கினம் கன்னி (கிரீசாம்சம்) ஆகி பூர்வ பாகத்தில் பிறந்தவனுக்கு ஏழாம் பாவாதிபதி சுக்கிரன் வீட்டி-

லிருந்து சுக்கிரனும், சூரியனும் கூடியிருந்தால் ஜாதகன் வேறு மனைவியிடம் புத்திரனை யடைவான். ஜாதகனுடைய மூத்த மனைவி புத்திரனில்லாதவள். உத்தராம்சத்தில் பிறந்தவனுக்கு இரண்டாவது தாரம் உண்டாகாது, மூத்த மனைவியிடமே காலாந்திரத்தில் புத்திர விருத்தியுண்டாகும். பூர்வ பாகத்தில் ஜனித்தவனுக்கு இரண்டாம் மனைவியிடத்தில் காலம் கடந்து முதலில் பெண்கள் பிறந்து சௌக்கியம் உண்டு. பிறகு காலாந்திரத்தில் புத்திரர்கள் பிறப்பார்கள். தீர்காயுளுடைய இரண்டு புருஷப் பிரஜையும், மூன்று பெண் பிரஜைகளும் உண்டாகும். உத்தராம்சத்தில் பிறந்தவனுக்கு ஒரு புத்திரனும், நான்கு புத்திரிகளும் பிறப்பார்கள்.

(23) ஜென்ம லக்கினம் கன்னியாகி ஏழாம் பாவாதிபதி சூரியனுடன்கூடி பதினோராம் பாவத்திலிருந்து, பன்னிரண்டாம பாவத்திலுள்ள சுக்கிரன், சனியால் பார்க்கப்பட்டாலும்; தாராரூடமாகிய ஏழாமாரூடத்தில் (அதாவது விருச்சிகத்தில்) ராகு இருந்தால் ஜாதகன் இரண்டாந்தர மடைவான். ஜாதகனுடைய மூத்த மனைவி புத்திர னில்லாதவள், கணவனுடன் விரோதமுடையவள். ஜாதகனுடைய இரண்டாவது மனைவி புகழுடையவள். புத்திரீ புத்திர ருடையவள். ஜாதகனுக்கு முப்பத்தாறுவது வயதில் அல்லது முப்பத்தேழாவது வயதில் இரண்டாம் மனைவி யிடத்தில் முதலில் பெண் பிரஜையும், பிறகு புத்திர உற்பத்தியு முண்டாகும். ஜாதகன் அற்பச் சந்தான யோகமுடையவன்.

(24) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி ஏழாமதிபதியாகிய குரு இரண்டாம் பாவத்தில் இருந்து சுக்கிரன் பாபருடன் கூடாம லிருந்தால் ஜாதகன் மனைவி ரூபம் நிறைந்தவள், பதிபக்தியுடையவள், முன் ஜென்மாந்திர பாபம் காரணமாகக் காலாந்திரத்தில் சற்புத்திரி யுடையவள்.

(25) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி ஐந்தாம் பாவத்தைச் சனி பார்த்து குரு கேதுவுடன்கூடி இரண்டாம் பாவத்தில் இருந்து பஞ்சமாரூடத்தில் சந்திரன் இருந்தால் ஜாதகன் சந்தான தடையுடையவன். அந்த தோஷ சாந்தியாக சேது ஸ்நானமும், சிவார்சனையும், நாக சாந்தியும், சொர்ண பாலகிருஷ்ண தானமும் செய்தால் ஜாதகனுக்குப் புத்திர சந்தான மேற்படும், காலாந்திரத்

தில் புத்திரன் உண்டாவான். சாந்தி செய்யாவிடில் கன்னிகைகள் பிறப்பார்கள், ஆண் சந்ததி பிறந்து மரித்துவிடும். இந்த ஜாதகனுக்கு மேஷ திரிகோணத்தில் அல்லது கும்ப ராசியின் திரிகோணத்தில் கோச்சாரத்தில் குரு வரும்போது புத்திரீ புத்திரர் பிறப்பார்கள். மனைவியின் புண்ணிய வசத்தினால் சந்தான யோகமுண்டாகும். ஜாதகனுக்கு நான்காம் திசையின் முடிவில் புத்திர லாபமும் ஏற்படும்.

(26) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி குரு சனியுடன் கூடியிருந்தால் ஜாதகன் தன்னுடைய இருபத்தைந்தாவது வயதில் விவாக மடைவான். ஜாதகனுடைய மனைவி ரூப லக்ஷணம் வாய்ந்தவள், காலங் கடந்து புத்திரரைப் பெறுவாள், சாந்தியால் காலாந்திரத்தில் புத்திரனைப் பெறுவாள், இருபத்தெட்டாவது வயதில் புத்திரிகளுண்டாவார்கள், அல்லது முப்பதாவது வயதில் புத்திரி பிறப்பாள். முதலில் பெண் பிரஜையும், பிறகு ஆண் சந்ததியு முடையவன்.

(27) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி ஐந்தாம் பாவாதிபதியாகிய சனி செவ்வாயினுடைய ராசியில் குருவுடன் கூடியிருந்தால் ஜாதகன் மறு மனைவியிடம் புத்திரனைக் காலாந்திரத்தில் பாலகிருஷ்ணப் பிரதிமை தானத்தால் அடைவான்.

(28) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி ஐந்தாம் பாவத்தில் சுக்கிரனிருந்து ஷை சுக்கிரனுக்கு ஐந்தாமிடத்தில் சனி யிருந்து (இவர்கள்) செவ்வாயால் பார்க்கப்பட்டால், ஜாதகன் மறு மனைவியை யுடையவனாயும் இரண்டாம் மனைவியிடம் புத்திரனை அடைவான். ஜாதகன் மூத்த மனைவி புத்திரனில்லாதவள், அல்லது அவளுக்கு குழந்தை பிறந்து மரித்துவிடும். ஜாதகன் ஜன்ம தேசத்தில் ஜன்ம கிராமத்தில் விவாக மடைவான். முப்பதாவது வயதில் மனைவி நாசமுடையவன். சீக்கிரமே மறு விவாக மடைவான். காலங் கடந்து புத்திரருண்டாவர். அப்போதும் முதலில் பெண் குழந்தை பிறந்து அதன் பிறகு சாந்தியால் நாற்பதாவது வயதில் புத்திரனை யடைவான். வேறு சிலர் முப்பதாவது வயதில் புத்திரனை அடைவான் என எண்ணுகின்றனர்.

(29) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி நான்கு ஏழுக்குடைய குருவானவர் ஏழாம் பாவத்திற்கு ஒன்பதாம் பாவமாகிய மூன்

ரும் பாவத்தில் இருந்து நவாம்சத்தில் கன்னியா நவாம்சத்தில் இருந்து சுய க்ஷேத்திரத்தி லிருக்கும் சந்திரனுக்கு ஐந்தாமிடத்தில் இராசியில் இருந்தால் சுகாதிகமும் விசேஷ யோகமும் உண்டாகும். அந்தக் குரு புக்தியில் பிரபல உத்தியோகமும், மூத்த புத்திரனுக்கு விவாகமும், வாகனாதி சுகமும், பூமி லாபமும் உண்டாகும்.

(30) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி லக்கின பாவத்திற் கைந்தாம் பாவத்தில் சனி சுய க்ஷேத்திரத்தில் இருந்து சுய க்ஷேத்திரத்திலுள்ள சந்திரனுக்கு ஏழிலிருந்து நவாம்சத்தில் சந்திரன் மீனத்திலும் சனி கடகத்திலுமிருந்தால் ஜாதகனுக்கு நடக்கும் அந்தச் சனி புக்தியில் புத்திரனுக்கு அரசாங்கத்தில் உத்தியோகமும், மனைவி சௌக்கியமும், உத்தியோக பிரபலமும், இருபதினாயிரம் தனலாபமும், தாய்க்குப் பீடையும் அதற்குப் பிறகு புத புக்தியில் விசேஷ பலனும் உண்டாகும்.

(31) ஜென்ம லக்கினம் கன்னியாகி லக்கின தசமாதிபதியாகிய புதன் சந்திரனுக்கு ஐந்தாமிடத்தில் விருச்சிக இராசியில் இருந்து அம்சத்தில் மகா நவாம்சத்திலிருந்து விருச்சிக இராசியில் கன்னியா நவாம்சத்தி லிருக்கப்பட்ட குருவால் பார்க்கப்பட்டால் இந்தக் குருவின் திசையில் ஷை புதனுடைய புக்தியில் மூத்த புத்திரனுக்கு உத்தியோகமும் இரண்டாவது புத்திரனுக்கு அரசாங்கத்தில் உத்தியோகமும் உண்டாகும்.

(32) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி இரண்டாம் பாவாதிபதி எட்டாம் பாவத்திலும் சந்திரன் ஏழாம் பாவத்திலுமிருந்து செவ்வாய் புதனுடன்கூடி புதனுடைய க்ஷேத்திரத்திலும் இருந்து சிம்ம நவாம்சத்தில் ஷை சந்திரன் இருந்தால் ஜாதகன் தீர்க்காயுள்ளவன், இரண்டு தாரமுள்ளவன், பதினாறு வயதிற்குமேல் யோகமுள்ளவன், ஷை யோகம் முப்பது வருஷம் நடந்து அதிக சம்பத்தும், புத்திரன், மனைவி முதலிய சுகத்துடனும், ஜாதகன் இருப்பான்.

(33) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி ஐந்தாம் பாவாதிபதி சுய க்ஷேத்திரத்தில் ஐந்தாம் பாவத்திலேயே கேதுவுடன் கூடியிருந்து மிதுன இராசியில் இருக்கப்பட்ட செவ்வாயால் பார்க்கப்

பட்டால் ஜாதகன் சந்தானத்தடை யுடையவனுவான். சாந்தி செய்தால் சந்தான முண்டாகும்.

(34) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி ஐந்தாம் பாவாதிபதியாகிய சனி மகரமாகிய சுய க்ஷேத்திரத்திலும் புத்திர காரனுகிய குரு பன்னிரண்டாம் பாவத்திலுமிருந்து ஒருவருக் கொருவர் ஷஷ்டாஷ்டகமாகி புத்திர ஸ்தானத்தைக் குரு பார்க்காமலிருந்தால் ஜாதகனுக்குச் சந்தான தடை யுண்டாகும்.

(35) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி ஐந்தாம் பாவாதிபதி வக்கிரமாகி கேதுவுடன்கூடி ராசியில் மகர ராசியிலும், நவாம்சத்தில் கும்பத்திலுமிருந்து, புத்திர காரனுகிய குருவும் வக்கிரமடைந்து தன் ஊச்சாம்சத்தி லிருந்தால் ஜாதகனுக்குப் புத்திர சந்ததிக்கு மனைவியிடம் கருத் தரிக்ினும, கர்ப்ப சிராவம் உண்டாகும். இந்தத் தோஷத்திற்குச் சாந்தி செய்தால் புத்திர சந்தானம் உண்டாகும். மேலும் புத்திர ஸ்தானுதிபதியாகிய சனி சுய க்ஷேத்திரத்திலிருக்கும் தோஷம் ஒராவது, அங்கு அவர் கேதுவுடன்கூடியிருந்தால் ஏற்படும் தோஷம் இரண்டாவது, நவாம்சத்தில் ஷஷ்டாம்சத்திலிருக்கும் தோஷம் மூன்றுவது, புத்திர காரகனுகிய குரு பன்னிரண்டாம் பாவத்திலிருந்தால் ஏற்படுந் தோஷம் நான்காவது, புத்திர காரகனும், புத்திர ஸ்தானுதிபதியும் ராசி அம்சங்களில் ஷஷ்டாஷ்டமத்தி லிருக்கும் தோஷம் ஐந்தாவது, புத்திர ஸ்தான்திபதி சத்துரு சேர்க்கை சத்துரு ராசியிலிருத்தல் இவற்ருல் ஏற்படும் தோஷம் ஆருவது, புத்திர ஸ்தானுதிபதி, புத்திரகாரகன் வக்கிரமடைதலால் ஏற்படும் தோஷம் ஏழாவது, புத்திர ஸ்தானுதிபதி ராகு கேதுக்களுடன் கூடியோ ராகு கேதுக்களால் பார்க்கப்பட்டோ இருந்தால் ஏற்படும் தோஷம் எட்டாவது, புத்திர ஸ்தானுதிபதி சுய க்ஷேத்திரத்திலிருந்து சத்துரு வீட்டிலிருக்கும் செவ்வாயால் பார்க்கப்படும் தோஷம் ஒன்பதாவது ஆகிய ஒன்பது விதமான தோஷங்களுக்காக யுக்தபடி சாந்தி செய்ய வேண்டும். இக் காரணங்களால் ஜாதகனுக்கு விவாகமாகி மனைவியிடம் கர்ப்பாதானத்தின் பிறகு பதினெட்டு வருஷம் வரை புத்திரப் பிரதிபந்த தோஷத்தினல் சந்தானமின்றி யிருந்து ஜாதகனுடைய முப்பத்தைந்தாம் வயதிற்குப் பிறகு பிராமணன் மூலமாக புத்திரப் பிரதிபந்த சாந்தி செய்தால் முப்பத்தாரும் வயதில்

புத்திர சந்தான யோகமும், முப்பத்தேழாம் வயதில் சந்தான உற்பத்தியும் ஏற்படும்.

(36) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி ஐந்தாம் பாவாதிபதி உச்ச ராசியிலிருந்து புத்திர காரகனுன குருவால் பார்க்கப்பட்டா லும், லக்கினுதிபதியும் குருவால் பார்க்கப்பட்டாலும் ஜாதகன் சந்தேகமின்றிப் புத்திரனுடையவனுவான்.

(37) ஜென்ம லக்கினம் கன்னி ஆகி ஏழாம் பாவாதிபதியாகிய குரு பன்னிரண்டாம் பாவத்திலிருந்து சுக்கிரன் கேந்திரத்திலிருந்து ஏழாம் பாவம் சனியால் பார்க்கப்பட்டால் ஜாதகன் இரு மனைவிய ரடைவான். ஜாதகனுடைய மூத்த மனைவி ஜாதகனுடைய அம் மான் புத்திரியாவாள். ஜாதகன் முப்பத்து மூன்றிலல்லது முப் பத்தி நான்காம் வயதில் இரண்டாம் விவாக மடைவான். ஜாதக னுக்கு இவளிடம் ஆறு கெற்ப முண்டாகி இரண்டு கர்ப்பம் நஷ்ட மாகும். மற்ற நான்கு பேர் பிறந்து சுகியா யிருப்பார்கள். மூத்த மனைவியுடனும், இரண்டாம் மனைவியுடனும் ஜாதகன் வெகு நாள் சுகியாகி, புத்திரி புத்திர ருடையவனுகவும், பௌத்திர விருத்தி யுடையனுகவும், ஆயுள்வரை இரு மனைவியருடன் சுகியா யிருப் பான்.

[இதற்குமேற்பட்ட அயிட்டங்களுக்கு இந்தப் புத்தகத்தின் இரண்டாவது மலரை வாங்கிப் பார்க்கவும்.]

---

# 7-வது அத்தியாயம்.

—:*:—

## துலா லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் துலாம் (மாயாம்சம்) ஆகி ஐந்துக் குடைய சனி ராகுவுடன்கூடி புதன், சந்திரன், கேது முதலியவர்க ளால் பார்க்கப்பட்டால் முதலில் பெண் பிள்ளை பிறக்கும். ஆண் பிள்ளைகட்கு இடையூறு உண்டாகும், மூன்று புத்திரிகளாவது, இரண்டு புத்திரிகளேயாவது உண்டாகும் ஆண் பிள்ளை இல்லை. சர்ப்ப தோஷத்தால் முதலில் இந்த ஜென்மத்தில் சபிக்கப்பட்

டிருக்கிறுன். தேவாலயத்தில் உள்ள மரம் முதலானதுகளை வெட்டியதாலும், தேவ சாபத்தாலும் இந்த ஜாதகனுக்குப் புத்திரன் இல்லை. பிறந்தாலும் மரித்துப்போகும். இந்தப் பாப பரிகாரத்துக்கு நாகப் பிரார்த்தனை செய்துகொண்டு சேது ஸ்நாந வசத்தாலும், மரங்கள் வைத்து நந்தவனம் நிர்மாணம் செய்வதாலும் புண்ணியமான சாந்தி தானம் முதலியவற்றைச் செய்தலாலும் காலாந்திரத்தில் பிள்ளை பிறக்கும். வெகு பிரயாசையின் பலனுக ஒரு புத்திரன்தான் பிறப்பான்.

(2) ஜென்ம லக்கினம் துலாம் (நிர்மலாம்சம்) ஆகி கும்ப இராசியில் குரு இருந்து ஐந்தாம் பாவாதிபதி லாபத் தானத்தில் இருந்தால் ஜாதகனுக்கு இரண்டு புத்திரனும், இரண்டு புத்திரிகளும் இருப்பார்கள். இரண்டு கன்னிகைகளும் சுக ஜீவியாயிருப்பார்கள்.

(3) ஜென்ம லக்கினம் துலாம் (நிர்மலாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி கேதுவுடன் கூடியிருக்க ஜெனித்த ஜாதகன் அற்ப சந்தான யோகமுடையவன், முதலில் சுகமுடைய பெண் குழந்தைகளை யுடையவன், க்ஷேத்திர பிரபல யோகமுடையவன்.

(4) ஜென்ம லக்கினம் துலாம் (நிர்மலாம்சம்) ஆகி குரு லக்கின கேந்திரத்திலிருக்க ஜெனித்த ஜாதகன் உத்தமமான பிராபல்ய முடைய புத்திரனை யடைவன்.

(5) ஜென்ம லக்கினம் துலாம் (பங்கஜாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி செவ்வாயுடன் கூடியிருக்க இரண்டாம் பாவாதிபன் கேதுவுடன் கூடியிருந்து பன்னிரண்டாம் பாவத்தில் குருவும் இருந்தால் ஜாதகன் அற்ப சந்தான யோகமுடையவன், குரு மிருத புத்ராம்சத்தில் இருந்தால் குழந்தைகள் பிறந்து பிறந்து மரித்துவிடும். ஒரு புத்திரன் ஆயுளுடன் இருப்பான் என்று சிலரும் வேறு சிலர் இரண்டு புத்திர ரிருப்பார்கள் என்றும் சொல்லுகிறுர்கள். இப்படியே பெண் குழந்தைகளும் இருப்பார்கள். அவசியம் சாந்தி செய்யவேண்டும். சாந்தி செய்த பின்பு இந்த புத்திர புத்திரிகள் இருப்பார்கள்.

(6) ஜென்ம லக்கினம் துலாம் (காலாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி சனி செவ்வாயுடன் கூடியிருந்து அல்லது செவ்வாயால் சனி பார்க்கப்பட்டுப் புத்திர ஸ்தானத்திற்கு ஏழாம் இடத்

தில் ராகு இருந்தால் ஜாதகன் புத்திர நாசத்தால் சோக முடையவன். அந்த தோஷத்துக்குப் பரிகாரமாக சேது ஸ்நாநம் முதலியன செய்து நாக சாந்தியும், துர்காதேவி ஜெபமும் செய்வதால் புத்திரப் பிராப்தி யுண்டாகும்.

(7) ஜென்ம லக்கினம் துலாம் (காந்தாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி நீச்ச ராசியிலிருக்க குரு ஆறு, பன்னிரண்டு, எட்டு முதலிய பாவங்களில் இருந்தால் ஜாதகனுக்குப் புத்திர சந்தானத்துக்கு கெடுதல் உண்டாகும்.

(8) ஜென்ம லக்கினம் துலாம் (காந்தாம்சம்) ஆகி லக்கின பாவத்துக்கு ஏழில் சனியிருந்து ஏழாம் பாவாதிபதி நீச்ச ராசியிலிருந்தால் ஜாதகனுக்குப் புத்திர சந்தானத்துக்கு இடைஞ்சலுண்டாகும். முதலில் பெண் பிரஜைகள் பிறக்கும், சாந்தி செய்தால் நல்ல புத்திரன் பிறப்பான். சேது ஸ்நாநம் முதலிய புண்ணிய தீர்த்த ஸ்நாநம் செய்து பாலகிருஷ்ணப் பிரதிமை தானம் செய்தால் அந்திய வயதில் அற்ப புத்திர சந்தான முண்டாகும், கிழ வயதில் புத்திரன் பிறப்பான்.

(9) ஜென்ம லக்கினம் துலாம் (சுமத்யாம்சம்) ஆகி ஆறு, ஒன்பது, எட்டு, ஏழு முதலிய பாவங்களில் சூரியன் முதலான கிரகங்களிருந்தால் கேந்திராதி யோகம் என்று சொல்லப்படுகிறது. அந்த யோகத்தில் பிறந்த ஜாதகன் ஸ்ரீமான், நல்ல புத்திரன், மனைவி முதலிய பாக்கிய சரித முடையவன்.

(10) ஜென்ம லக்கினம் துலாம் (சுமத்யாம்சம்) ஆகி சந்திரன் சுபாம்சத்தில் இருந்து குருவும் சுபாம்சத்தில் இருந்து சுப லக்னத்தில் பிறந்தவனுக்குச் சகடயோகம் இருந்தால் அந்தச் சகடம் சுப சகடமாக ஆகும். சாம்ராஜ்ய சகட யோகத்தில் துலா லக்கினத்தில் பிறந்தவனுக்கு அற்ப சந்தான யோகமும், தன வரவும் உண்டு. ஒன்று அல்லது இரண்டு மூன்று புத்திரர்கள் தீர்காயுளுட னிருந்தாலும் ஸ்திரீ பிரஜை தீர்க்கமும், இரண்டு புருஷப் பிள்ளைகள் தீர்க்க ஆயுளுடனும் இருப்பார்கள்.

(11) ஜென்ம லக்கினம் துலாம் (சாங்கரியம்சம்) ஆகி, குரு ரிஷபத்தில் மிருக புத்திராம்சத்தி லிருந்தால் ஜாதகனுக்குக் குழந்தைகள் பிறந்து பிறந்து மரிக்கும், வேறு மனைவியிடம் ஜாதகன் சந்தானம் அடைவான், அல்லது முதல் மனைவியிடமே அந்திய

காலத்தில் அற்ப சந்தான மடைவான். ஒரு புத்திரி வெகு ஆயுளுடையவளா யிருப்பாள்.

(12) ஜென்ம லக்கினம் துலாம் (லக்ஷ்மிகாம்சம்) ஆகி ஐந்தா மதிபனான சனி துலாத்தில் ரிஷப நவாம்சத்திலிருந்து கும்பத் திரி கோணத்தில் குரு இருந்தால் ஜாதகனுக்கு முதலில் பெண் சந்ததி யுண்டாகும். புருஷப் பிரஜை சுவல்பம். பெண் சந்ததி இரண்டு அல்லது மூன்று உண்டாகும். சாந்தி, தானம் இதுகளால் புத் திரன் உண்டாகும். இருபத்திரண்டு அல்லது இருபத்து மூன்று வது வயதில் பெண் பிறக்கும்.

(13) ஜென்ம லக்கினம் துலாம் (கமலாம்சம்) ஆகி ஐந்தா மதிபனான சனி கடகத்தில் இருந்து புத்திர காரகனான குரு மிது னத்தில் கும்பாம்சத்திலிருந்து புத, சூரியர்களால் பார்க்கப்பட் டாலும், அன்றி ஜன்ம லக்கினம் துலாம் (கமலாம்சம்) ஆகி ஐந்தாமதிபனான சனி தனுசிலிருந்து புத்திர காரகனான குரு மீனத்தில் கும்பாம்சத்திலிருந்து புத, சூரியர்களால் பார்க்கப் பட்டாலும் ஜாதகன் புத்திரன் அற்றவனாய் தத்து புத்திரனால் சந்ததி யுற்பத்தி செய்வான். பிள்ளை பிறந்தாலும் மரிக்கும். ஸ்திரீ பிரஜை தீர்காயுளுடனிருக்கும். ஏகாதசியில் கோதானம் செய்து அரசமிர் பிரதிஷ்டை செய்து சந்தான கோபாலப் பிரதி மை தானம் செய்தாலும் சிம்சு மாரதானம் செய்தாலும் புத்திர னுண்டாவர்ன். அதுவும் காலாந்திரத்தில் உண்டாகும், வேறு மனைவியிட்மாவது உண்டாகும். இரு பெண், இரு புத்திரர் நிலைக்கும்.

(14) ஜென்ம லக்கினம் துலாம் (சுதாமசம்) ஆகி ஏழாமதிப னான செவ்வாய் சனியால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்குப் பால் யத்திலேயே விவாகம் நடக்கும். மனையாள் ஒரு கண் பார்வை யுடையவளாயும், புத்திரி, புத்திரர்களுடன் கூடியவளாயும், அவர்களுடன் வெகு கா்லம் சுகபோக யனுபவிப்பவளாயு மிருப் பாள்.

(15) ஜென்ம லக்கினம் துலாம் (சுதாம்சம்) ஆகி ஐந்தா மதிபனான சனி ஒன்பதிலிருந்து குரு பலத்துடனிருந்தால் ஜாத கன் பால்யத்திலேயே நல்ல புத்திரனை அடைவான். அனேக தனம், பூமி யுடையவனாவான். சத்புத்திரன் பிறந்தபின் யோக

முடையவனும், பாக்கிய முடையவனும், எட்டு புத்திரர்களுடனும், ஐந்து பெண்களுடனும் கூடியவனுவான், மக்கள் வளர் பிறைச் சந்திரன்போல் வளர்வர்.

(16) ஜென்ம லக்கினம் துலாம் (மாயாம்சம்) ஆகி ஐந்தாமதிபனுன சனி ராகுவுடன்கூடி புதன், சூரியன், கேதுக்களால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்கு முதலில் பெண் ஜெனனமும், புருஷப் பிரஜைக்குத் தடையுமுண்டாகும். இரண்டு அல்லது மூன்று பெண்கள் உண்டாகும். புருஷ சந்ததி கிடையாது. முன்னுல் சர்ப்ப தோஷத்தால் இச்சென்மத்தில் இவ்விதம் நேருமாதலால் நாக விரதமிருந்து நாகப் பிரார்த்தனை செய்தால், ஸேது ஸ்நாநம் செய்து, அரசமரப் பிரதக்ஷிணம் செய்தல் முதலான சாந்தியாதிகளால் காலாந்திரத்தில் புத்திரன் உண்டாகும். ஒரு புத்திரன் இரண்டு பெண்கள் உண்டாகும். சிலர் வேறு மனைவியிடம் புத்திரன் உண்டென்று உரைக்கின்றனர்.

(17) ஜென்ம லக்கினம் துலாம் (நிவிருத்தியாம்சம்) ஆகி ஐந்தாமதிபனுன சனி இரண்டிலிருந்தால் ஜாதகனுக்கு மூன்று புத்திரரும், மூன்று புத்திரிகளு முண்டாகும்.

(18) ஜென்ம லக்கினம் துலாம் (நிர்மலாம்சம் முன் பாகம்) ஆகி லக்கினத்திற்கு பாக்கிய பாவமாகிய ஒன்பதாம் பாவத்தில் குஜனிருந்தால் ஜாதகனுக்கு நடு வயதில் அதிக சுகமுண்டு, முதுமைப் பருவத்தில் புத்திரன் மூலம் அதிக பாக்கிய விருத்தியுண்டு. ஜாதகனுக்கு இரண்டு சிற்றப்பன் மார்கள் புத்திரனுடையவர்கள். ஜாதகனுடைய சிற்றப்பன் ஒருவன் புத்திரனில்லாதவன். சிற்றப்பனுக்கும் இரண்டு தாரமுண்டு, தத்து புத்திரனுடன் கூடியவன். பிதாவின் சகோதரி ஒருத்தி சுக முடையவளாவாள், அவளுக்கு புத்திரருண்டு, சுமங்கலியா யிருப்பாள்.

(19) ஜென்ம லக்கினம் துலாம் (நிர்மலாம்சம் முன் பாகம்) ஆகி பிதா மகாதிபனுன சனி இரண்டு சுபருடன் கூடியிருந்தால் ஜாதகனுடைய பிதா மகன் (பாட்டன்) நற்புத்திர னுடையவன்.

(20) ஜென்ம லக்கினம் துலாம் (நிர்மலாம்சம்) ஆகி லாப பாவமாகிய பதினோராம் பாவத்தில் சனி யிருந்தால் ஜாதகன் இரண்டாவது களத்திரத்தினுல் நல்ல புத்திரனுடையவனுவான்.

மூன்று பெண்கள் தீர்காயுளுடையவரா யிருப்பர், நாலு புத்திரர் உண்டு, முதுமையில் புத்திர சோகத்தால் அதிக வருந்துவான்.

(21) ஜென்ம லக்கினம் துலாம் (இந்திராம்சம்) ஆகி லக்கினாதிபன் ஒன்பதாம் பாவ அம்சத்திலும், லாப பாவாதிபன், பாக்கிய பாவாதிபன், நாலாம் பாவாதிபன் இவர்கள்கூடி இருந்ததோடு சுக்கிரனும் சனியும் கூடியிருந்தால் இந்திர யோகமாகும். இதில் ஜாதகன் தனவான், புத்திமான், புத்திர மித்திருடையவனுவான்.

(22) ஜென்ம லக்கினம் துலாம் (இந்திராம்சம்) ஆகி சுக்கிரன் ஐந்திராம்சத்திலிருந்து குருவுடன் கூடினால் ஜாதகனுடைய ஒரு சகோதரி சுக முடையவள், ஜாதகனும் சுக முடையவனும் தத்துப் புத்திரனுடையவனுயு மிருப்பான்.

(23) ஜென்ம லக்கினம் துலாம் (சம்பகாம்சம்) ஆகி புத்திர ஸ்தானாதிபனை சனி கன்னியில் மிதுனம்சத்தில் புதனல் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்குச் சந்தான தடையுண்டு. அந்தப் பாப பரிகாரத்துக்குப் 'பால கிருஷ்ண பிரதிமை' தானம் செய்யவும். இரு புத்திரர் இரு பெண்கள் தீர்காயுளாய் இருப்பர். நாடியின் உத்திராம்சத்தில் பிறந்த ஜாதகனுக்கு புத்திரனில்லை, ஆனுல் தத்து புத்திரனுண்டு.

(24) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி குரு உப லக்கினத்திலிருந்தால் ஜாதகன் ஜன்ம தேசத்திலேயே பந்து வர்க்கத்தில் பாக்கியமுள்ள வம்சத்தில் ரூபசாலியான மனைவியை மணப்பான். முன் பாப வசத்தினுல் சொர்ணலிங்க தானம், பால கிருஷ்ண தானம் முதலிய செய்த பிறகு காலங் கடந்து புத்திரன் பிறப்பான். இரண்டு புத்திரரும் இரண்டு அல்லது மூன்று புத்திரிகளுமடைவான்.

(25) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி ஐந்தாம் பாவாதிபதியாகிய சனி நான்காம் பாவத்தில் புத்திர பாவத்திற்கு விரய ஸ்தானத்தில் இருந்து, குரு லக்கின கேந்திரத்திலு மிருந்து, ராசியில் கன்னியா ராசியிலும், நவாம்சத்தில் கும்பத்திலும் சூரியன் இருந்தால் ஜாதகிக்குப் புத்திர சந்தானத் தடையேற்படும், முதலில் ஒரு பெண் பிரஜை பிறந்து அதன் பிறகு பதினெட்டல்லது பத்தொன்பது வருஷம் வரையில் புத்திர சந்தானத்தடையும்

ஜாதகி தன் கணவனுடன் கூடியிராமல் (புருஷனுடன் வசிக்காமல் தனியாக) இருந்து பிறகு கர்ப்பாதானத்தினால் புத்திர சந்தான மடைவாள். இந்த தோஷ நிவர்த்திக்காக நாக சாந்தி செய்யின் புத்திர சந்தானமாக ஜாதகியின் முப்பத்தெட்டாம் வயதில் ஒரு புத்திரன் ஜனிப்பான். மேலும் இதற்கே நாராயண பலியும், ஆறு விரற்கடை வெள்ளியால் சூரிய எந்திரமும் செய்து அந்த சூரிய எந்திரத்தை அருண சூக்த மந்திரத்தில் சொல்லிய விதிப்படி ஒரு மாதமல்லது ஒன்னரை மாத்மவரை பூஜித்துத் தானம் செய்யின் அப்புத்திரன் தீர்காயுசடைவான்.

(26) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி சிம்ம ராசியில் குருவுடன் சனி கேது கூடியிருந்து ஷை சனி கடக நவாம்சத்தில் சுப்பிரபாம்சத்திலும் சத்துரு ராசியில் சூரியனுடைய க்ஷேத்திரத்திலுமிருந்து சந்திராஷ்ட வர்க்கத்தில் அங்கு ஓரே பரலும் வந்து பாரிஜாதாம்சத்தில் சுபாம்சமாகிய ஒன்பதாம் அம்சத்தில் சந்திரனிருந்தால் ஜாதகனுக்கு அத்தெசையில் புத்திர உற்பத்தி உண்டாகும். அன்றி புத்திர ஸ்தானாதிபதியாக ஷை சனி ஆவதால் ஜாதகனுடைய ஐம்பது வயதிற்குமேல் ஐம்பத்தைந்து வயதிற்குள்ளாகக் காலாந்திரத்தில் புத்திரனை அடைவான், ஷை குரு ரிஷப நவாம்சத்தில் சத்துரு அம்சத்தில் ரந்திராம்சத்தில் இருந்தால் ஜாதகனுக்கு வேறு ஸ்திரீயிடம் சம்போக முண்டாகி அங்கு ஜாதகனுடைய வீரியத்தால் யவ்வன வயதில் சந்தான முண்டாகி அதனால் தன் மனைவியிடம் கர்ப்ப முண்டாகாமல் தன் அந்திய வயதில் தன் மனைவியிடம் ஒரே புத்திர சந்தான முண்டாகும்.

(27) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி ஐந்தாம் பாவாதிபதியாகிய சனி ஐந்தாம் பாவத்திற்குப் பன்னிரண்டில் இருந்தால் ஜாதகன் பின் வயதில் விசேஷ பூமியடைவான், யோக விருத்தியு மடைவான், புத்திர சந்தான யோக விருத்தியும், கீர்த்தி விருத்தியும், புது ஸ்தானத்தின் லாபமும், வியாபாரப் பிரபலமும் அடைவான்.

(28) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி பிரபுஸ்தானமாகிய ஒன்பதாம் பாவத்தில் ராகு இருந்து சூரியனால் பார்க்கப்பட்டால் ஜாதகன் முன் வயதில் சந்தான விரோதமும், பின் வயதில்

சந்தான யோகமும் அடைவான், அப்போது லக்கின பாவத்தில் குரு இருந்து ஷ ஸ்தானத்தையும் புத்திர பாவத்தையும் பார்த்தால் ஜாதகனுக்குப் புத்திரி புத்திர விருத்தியடைந்து மூன்று வாகனமும், யோக விருத்தியும் உண்டாகும்.

(29) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி சூரியனும், சந்திரனின் புத்திரனுன புதனும் ஒரு இராசியில் அல்லது ஒரே நவாம்சத்தில் கூடியிருந்து லக்கின பாவாதிபதியும் தன் உச்சத்திலிருந்து குருவும் தன் உச்சத்தில் அல்லது இரண்டாம் பாவத்திலிருந்தால் ஜாதகனைவிட ஜாதகனுடைய புத்திரன் அதிக யோகமுடையவனுக ஆவான்.

(30) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி ஏழாம் பாவாதிபதி மூன்றும் பாவத்தில் வர்க்கோத்தமத்தில் இருந்து களத்திர காரகனுகிய சுக்கிரன் தன் உச்சத்திலிருந்து லக்கினத்திற்கு இரண்டாம் பாவத்தில் குரு, ராகு கேதுக்களுடன் கூடியிருந்தாலும், ஏழாம் பாவத்தைச் சனி பார்த்து இருந்தாலும், ஜாதகனுக்கு இரு மனைவியரேற்படுவார்கள், ஜாதகனுக்கு மூத்த மனைவியால் சுகமின்றி அவள் அற்பாயுசாய் மரித்துவிடுவாள். பிறகு இரண்டாம் மனைவியை விவாகம் செய்வான், அவளால் சுகமடைவான். அம் மனைவியிடம் புத்திர சந்தான முடையவன். ஜாதகனுடைய தலைப் பிள்ளை மரித்துவிடும். இரண்டாவது கெற்பம் சுகமடையும். தீர்காயுளுள்ள புத்திரனுக ஆவான். மூன்றுவது பெண் பிரஜை பிறக்கும். நான்காவது கெற்பம் புத்திரனும், ஐந்தாவது கற்பம் புத்திரியும், ஆறுவது பெண் சந்தானமுமாக, ஏழாவது புத்திரனும் ஆக நால்வர் புத்திரரும் மூன்று புத்திரிகளும் உண்டாவார்கள். இவர்களில் ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் மரித்து விடுவார்கள். மற்றவர்கள் சுகடைவார்கள்.

(31) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி இரண்டு ஏழுக்குடைய பாவாதிபதியான செவ்வாய் நான்காம் பாவத்தில் கேதுவுடன் கூடியிருந்து நவாம்சத்தில் ஷ செவ்வாய் நீச்சத்தில் கேதுவுடன்கூடி பாராவதாம்சத்திலுமிருந்தால் ஜாதகன் மூத்த சகோதரியால் சுகமடைவான். ஜாதகனுடைய மூத்த சக்காதரி சுயகிராமத்திலேயே விவாகமடைவாள், அல்லது தன் ஜென்ம கிராமத்திற்கு மேற்கில் விவாக மடைவாள். அவனுடைய கணவன்

நல்ல யோகமடைந்து தினம் தினம் விசேஷ யோகமடைவான். நூல் வியாபாரத்தில் பிரசித்தி உடையவன், சிவப்பும் கறுப்பும் கலந்த பட்டு வியாபாரம் செய்வான், ஜாதகனுடைய சகோதிரியின் அதிர்ஷ்டம் காரணமாக விசேஷ பாக்கிய மடைவான், வியாபாரத்தில் நிபுணன், பற்பல தேசங்களிலும், பற்பல கிராமங்களிலும், பற்பல வழிகளால் தன விருத்தியும், வியாபார விருத்தியும், வீட்டில் லக்ஷ்மீ கடாக்ஷமும், புத்திர சந்தான யோகமும், இரு புத்திரரும், ஒரு புத்திரியு முடையவனாக ஆவான். வேறு சிலர் இரண்டு புத்திரியுடையனென்று எண்ணுகின்றனர். அப் புத்திரனும் புத்திரி சந்தானமடைந்து ப்ரபல யோகவானாவான், அப் புத்திரன் பால்யத்தில் தாய் தகப்பனை இழந்து வியாபாரத்தால் நஷ்டமடைந்து ஒரு சைவ மதப் பிரபுவால் மேன்மை யடைவான். ஜாதகனுடைய சகோதரியின் கணவன் அந்த சைவ பிரபுவின் ஒரு ஆயிரம் தனத்தை அபகரிப்பான், அதன் பிறகு அந்தத் தனத்தினால் புத்திர ரிருவருக்கும் விவாகம் செய்வான், அதன் பிறகு அப்புத்திரனின் மாமனார் மூலமாக நஷ்ட தனத்தை அடைவான், பிறகு வியாபாரப் பிரபல மடைந்து ஆயுள் வரை சுகிபாவான். ஜாதகனும் தன் சகோதரியின் கணவன் மூலமாக விசேஷ தனமும் பிரசித்தியும், இரண்டு லக்ஷம் தனம் ஆஸ்தி உடையவனாவான். பிறகு இந்த இரண்டு லக்ஷம் தனம் கடன் உண்டாகி மனச் சஞ்சல மடைவான். பிறகு இரண்டு புது மெத்தை வீடுகள் சம்பாதிப்பான். பிறகு லக்ஷ்மீ கடாக்ஷம் ஏற்பட்டு மேற்படி கடன்களைத் தீர்த்து விடுவான். ஜாதகன் இரண்டு புத்திரரும் மூன்று புத்திரிகளு மடைவான். வேறு சிலர் நான்கு புத்திரிகளுண்டாவார்கள். பெரியோர்களிருந்த வீட்டை தன் சகோதரனுக்கு விட்டுவிடுவான். அச் சகோதரன் ஸ்ரீமந்த புத்திர சந்ததி நாசமடையும், இரு புத்திரரும் இரு புத்திரிகளும் தீர்காயுசுடையவர்களை யுடையவன். மற்ற சந்ததிகள் (இவர்களைத் தவிர்த்தவர்கள்) மரித்து விடுவார்கள்.

(32) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி ஏழாம் பாவாதிபதி நான்காம் பாவத்தில் தன் உச்சத்தில் களத்திர காரனாகிய சுக்கிரனுடனும் ராகு அல்லது கேதுவுடனும் கூடியிருந்து மேற்படி செவ்வாய் அம்புஜாம்சத்திலு மிருந்தால் ஜாதகன் காலங் கடந்து விவாகமடைவான். ஜாதகன் அழகி, நல்ல குணவதியாயும்,

சந்தான விருத்தியுடையவளாயும் ஆயுள்பரியந்தம் சுகியாயும் இருப்பள்.

(33) ஜென்ம லக்கினம் துலாம் ஆகி ஐந்தாம் பாவத்தில் சனி வக்ரமடைந்திருந்தால் ஜாதகன் விஷ்ணு தேவதாப் பிரீதியுள்ளவனும் சிவ விஷ்ணு ஆலயங்களைப் புதுப்பிப்பவனும் அதனால் வம்ச விருத்தியும் உள்ளவனுவான். மேலும் மேற்படி சனிப் பிரீதி காரணமாகப் பிரம்ம தீர்த்தத்தில் நாராயண பலியும் பால முகுந்த தானமும் செய்து, புண்ணிய க்ஷேத்திரத்தில் மேற்படி தானத்தைக் கார்த்திகை மாதத்தில் சுக்கில பக்ஷ தசமியில் அல்லது மாசி மாத ஏகாதசியில் பிராம்மணனைக்கொண்டு பூஜை விதிகளின்படி செய்து வெள்ளிக்கிழமையில் நான்கு வாரம் பிராம்மண போஜனம் செய்வித்து பிறகு கட தீபம் சமர்ப்பித்து, சாந்தி செய்தால் சந்ததி நிச்சயமா யுண்டாகும்.

[இதற்கு மேற்பட்ட அயிட்டங்களுக்கு இந்தப் புத்தகத்தின் இரண்டாவது மலரை வாங்கிப் பார்க்கவும்.]

---

## 8-வது அத்தியாயம்.

—:※:—

### விருச்சிக லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தன தாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபனுன குரு, குஜனுடனும் சனியுடனும் கூடினுலும், ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தன தாம்சம்) ஆகி ஏழாமதிபன் கேந்திரத்திலிருந்து குஜன் லக்கினத்தைப் பார்த்தாலும் ஜாதகனுக்கு இரு மனைவியருண்டு, மூத்த மனையாள் துர் நடவடிக்கையுடையவள், மூத்த மனையாளுக்குப் புத்திரன் ஒருவன், புத்திரி ஒருவளுண்டு. மூத்த மனையாள் புதல்வன் களத்திர சோகமுடையவன், மறு மனைவியை அடைவான், அவனுக்கு ஒரே மகன் தான் உண்டு. மூத்த மனைவி வாலிபத்திலேயே மரிப்பாள். இளைய மனைவி அழகானவளாயும், பதிபக்தி யுடையவளாயும் புத்திரன், புத்திரிகளுடன் கூடினவளாயு மிருப்பாள். இரண்டு

புத்திரர், இரண்டு புத்திரிகள் தீர்காயுள். அதிக சுகமும் உண்டாகும், சாந்திகளால் மக்களுக்குச் சுகமுண்டு.

(2) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (வசுதாம்சம்) ஆகி ஐந்தாமதிபனான குரு துலாத்திலிருந்து சுக்கிரனால் காணப்பட்டிருந்தால் ஜாதகனுக்கு வேறு மனைவியிடம் காலாந்திரத்தில் மக்கள் உண்டாகும். இரு புத்திரர்களாவது, அல்லது புத்திரிகளாவது தீர்காயுளா யிருப்பர், சாந்தியால் புத்திர சுகமுண்டு, குஹ்ய ரோகம், மூத்திர கிருச்ரம், பீனிச ரோக பீடை இவைகளால் வருந்துவான்.

(3) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (துருவாம்சம்) ஆகி ஏழாமதிபனான சுக்கிரன் தன் சுய க்ஷேத்திரத்திலிருந்தால் ஜாதகன் அனேக மனைவியரை யுடையவன், இருபத்தொன்றாவது வயதில் விவாகம் நடக்கும், இரு புத்திரர்களுடன்கூடிய அவள் ஜாதகனது முப்பதாவது வயதில் மரிப்பாள். முப்பத்திரண்டில் மறு விவாகம் நடக்கும். அவளுடன் வெகுநாள் சுகமாய் வாழ்வான், அதிக பெண் பிள்ளைகளுடன் கூடியவனாய் முதுமைப் பருவத்தில் அதிக பாக்கிய முடையவனாவான், மூன்றும் மனைவிக்குப் புத்திர பாக்கியமுண்டு, நடு மனைவியின் சாயலாக இருக்கும்.

(4) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (கதாம்சம்) ஆகி ஐந்தாம் வீட்டதிபன் எட்டினில் மேஷாம்சத்திலிருந்து சனியால் பார்க்கப்பட்டால் ஜாதகன் புத்திரனில்லாதவன். தத்து புத்திரனால் சந்ததி விருத்தியுண்டு. விப்பிர சாபத்தினால் சந்ததி இல்லையாகையினால் சிம்சுமார தானத்தாலும், பொன் சந்தான கோபால மூர்த்தி தானத்தாலும், ஏகாதசியில் கோதானத்தாலும், அரச மரப் பிரதிஷ்டையாலும், மஞ்சள் லிங்க பூஜை இத்தகைய சாந்தியாதிகளால் காலாந்திரத்தில் புத்திரன் உண்டானாலும் உண்டாகும். அனேக புண்ணிய வசத்தினால் ஒரு புத்திரன் தீர்காயுளுடையவன், பலவித ரோக முடையவன்.

(5) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (வைஷ்ணவியம்சம்) ஆகி ஐந்தாமதிபன் சூரியனால் பார்க்கப்பட்டு கும்பத்தில் பாபருடன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு சர்ப்ப சாபத்தாலும், துர் தேவதையின் சாபத்தாலும் புத்திரனில்லை. தத்து புத்திரனால் சந்ததியுண்டாகும், சாந்தி தானாதி செய்தால் காலாந்திரத்திலாவது வேறு மனைவியிடமாவது வெகு சிரமத்தால் சந்ததி யுண்டாகும்.

(6) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி ஏழா மதிபனான சுக்கிரன் பத்தில் பலவானாயிருந்து குஜனால் காணப் பட்டால் ஜாதகனுக்குத் தன் ஜென்ம தேசத்திலேயே பாக்கிய முள்ள வம்சத்திலேயே விவாகம் நடக்கும். மனையாள் ரூபவதி யாயும், குணவதியாயும், பாக்கிய முடையவளாயும், சில காலம் புத்திரத் தடை யுடையவளாயு மிருப்பள். காலாந்திரத்தில் அவ ளுக்குப் புத்திரனுண்டாகும்.

(7) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி ஐந்தா மதிபனான குரு, புதனுடன்கூடி லக்கினத்திலிருந்து ஐந்தில் கேது இருந்து அதற்கு ஆரூடத்தில் சனி இருந்தால் ஜாதகனுக் குப் புத்திர தோஷமுண்டு, ஏகாதசியில் கோதானம் செய்து அரசமரப் பிரதக்ஷணம் செய்து பொன்னால் சந்தான கோபால மூர்த்தி தானம் செய்யத் தோஷம் தீரும், காலாந்தரத்தில் இரு புத்திரரும் மூன்று பெண்களும் தீர்காயுளா யிருப்பர்.

(8) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி விருச் சிக ராசியில் குரு, புதன் இவர்கள் கடகாம்சத்திலிருந்து சனி யால் குரு பார்க்கப்பட்டு, புத்திராம்சம் சந்திரன், சனி இவர்க ளால் பார்க்கப்பட்டால் ஜாதகன் புத்திரனற்றவளும், மலடியும், தத்து புத்திரனை எடுப்பவளுமான மனையாள் ஒருத்தியை மணப் பான்.

(9) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி மீன ராசியில் மீனாம்சத்தில் கேது இருந்து குருவால் பார்க்கப்பட் டால் ஜாதகனுக்குச் சாந்தி தானத்தால் காலாந்திரத்தில் புத்திர லாபமுண்டு.

(10) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி சுக் கிரன் அம்சத்தில் புதனுடன் கூடியிருந்தால் ஜாதகனுடைய இல் லாள் வெளுத்த அழகிய மேனியாள், பாக்கியமுடையவள், வீட்டு வேலைகளில் சாமர்தியசாலி, அனேக புத்திரர்களுடன் கூடியவள், அன்ன தானம் முதலிய தானம் செய்வாள்.

(11) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (கதாம்சம்) ஆகி லக்கி னாதிபன், ஆறும் பாவாரூடத்தில் இருந்து அவரால் பார்க்கப் பட்டு, ஏழு அல்லது பத்து இந்த பாவாதிபர்கள் பலவானா யிருந்

தால் ஜாதகன் மகா தானம் முதலியன செய்வான், புத்திர பாக்ய மில்லை.

(12) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (கதாம்சம்) ஆகி லக்கினத்திற்குப் பாக்கிய ஸ்தானமாகிய ஒன்பதில் இருந்து, புத்திர காரகனுன குரு, ராகுவுடன் சேர்ந்திருந்தால் ஜாதகன் புத்திர சோகமடைவான். அத்தோஷத்திற்குப் பரிகாரமாக பொன்னுல் கிருஷ்ணப் பிரதிமை தானம் செய்து, ஷஷ்டி விரதம் இருக்கவும், விதிப்படி நாகப் பிரதிஷ்டை செய்து சேது ஸ்நானம் செய்யவும், மஞ்சள், லிங்கம் பூஜிக்கவும், நல்ல புத்திரனை அடைவான், சிம்சுமார தானத்தால் தீர்காயுளுடைய குமாரனை அடைவான்.

(13) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (கதாம்சம்) ஆகி சகடயோக ஜாதகத்தில் குரு, ராகுவுடன் கூடினுல் ஜாதகனுக்குச் சந்தானத் தடையுண்டு, தாரம், புத்திரர் இவர்கள் விசார முண்டயவன்.

(14) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (கதாம்சம்) ஆகி எட்டாம் பாவாதிபன் ஆறும் பாவத்திலும், பன்னிரண்டாம் பாவாதிபன் ஐந்தாம் பாவத்திலும் இருந்தால் ஜாதகன் வேறு தாரத்திடம் காலாந்திரத்தில் புத்திர னடைவான்.

(15) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி புத்திர ஸ்தானுதிபனுன குரு குஜனுடனும், சனியுடனும்கூடி ஏழாம் பாவ ஆரூடாதிபன் கேந்திரத்திலிருந்து, ஏழாம் பாவாரூடம் குஜனுல் பார்க்கப்பட்டால் ஜாதகன் இருதார யோகமுடையவன், மூத்த மனைவி பதிவிரதை யானவள், மூத்தவளே புத்திர புத்திரிகளுடன் கூடியவள், மூத்த மனைவியின் புத்திரன் மானமுடையவன், தார சோகமுடையவன், வேறு மனைவியிடம் கூடியவன். ஜாதகன் மூத்த மனைவியின் புத்திரி வாலிபத்திலேயே விதவை யாவாள். இளைய மனைவி ரூபவதியும் கணவனிடம் அன்புடையவளும், குணமுடையவளாயும் இரு புத்திரர் மூன்று பெண்கள் தீர்காயுள்ளவளா யிருப்பர், சாந்தி செய்ய இன்ன அதிகமுண்டாகும்.

(16) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் குரு ஆகி துலாத்திலிருந்து சுக்கிரனுல் பார்க்

கப்பட்டால் ஜாதகனுக்கு வேறு தாரத்திடம் புத்திர லாபமுண்டு சில சமயம் காலாந்திரத்தி லுண்டாகும். இரு புத்திரர், இரு புத்திரிகள் தீர்காயுளுடையவரா யிருப்பர், சாந்தியால் புத்திர சுகமுண்டு, புத்திரர் சாந்தியாதிகளால் அதிக முண்டாவர்.

(17) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (வைஷ்ண வியம்சம்) ஆகி ஐந்துக்குடைய குரு செவ்வாயால் பார்க்கப்பட்டு கும்பத்தி லிருக்க புத்திர ஸ்தானம் பாபியுடன் கூடியிருந்தால் ஜாதகன் புத்திரனில்லாதவன், தத்து எடுப்பதால் சந்ததி விருத்தி, முன் ஜென்மத்தில் சர்ப்ப சாபத்தினாலும், துர் தேவதையாலும் சபிக்கப்பட்டு புத்திரனில்லாதவனாகி இந்த ஜென்மத்தில் தத்து மூலம் சந்ததியும், காலாந்திரத்தில் சாந்தியாலாவது அல்லது மறுதாரத்தி னிடத்திலாவது புத்திரனை அடைவான்.

(18) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (காந்தாம்சம்) ஆகி சுக்கிரன் ஏழாம் பாவ திபதியாகி அம்சத்தில் புதனுடன் கூடியிருந்தால் தான் சங்கீத வித்வான், ராஜ சேவை செய்பவன், தெய்வ பக்தியுள்ளவன், புத்திமான், சந்ததி சமிருத்தியுடையவன்.

(19) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (காந்தாம்சம்) ஆகி சுக்கிரனுடைய அம்சத்தில் ரிஷபத்தில் புதனிருந்தால் ஜாதகனுடைய மனைவி கருப்பு நிறமுள்ளவள், பாக்கிய வம்சத்தில் பிறந்தவள், வீட்டு வேலையில் துரந்தரையா யிருப்பாள், வெகு புத்திரர், புத்திரிகளை யுடையவள், சதா தானம் செய்பவள்.

(20) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி நான்காம் பாவாதிபதி பலமுடையவனாகி ரிஷப நவாம்சத்தில் இருக்க நான்காம் பாவத்தில் சுக்கிரனிருந்தால் ஜாதகன் பல்லக்கு முதலிய வாகனமுடையவன், வியாபாரம் பல செய்வான், வெகு புத்திரனை யுடையவன், அனேக ஸ்திரீகளுக்கு நாயகன்.

(21) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி வர்க்கோத்தமத்தி லிருந்தால் ஜாதகன் புத்திரி புத்திரருடையவன்.

(22) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (சசிவாம்சம்) ஆகி புத்திர ஸ்தானத்திற்கு ஏழில் சந்திரன் செவ்வாயுடன் இருந்தால் ஜாதகனுக்கு இரண்டு புருஷப் பிள்ளைகள் ஆயுளையுடையவர்

களும், ஒரு புத்திரியும் தீர்காயுளுடையவளுமாக இருப்பார்கள், மற்றவை நாசமுறும்.

(23) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி சுய க்ஷேத்திரத்தில் ஒன்பதாம் பாவாதியுடன் கூடியிருந்தால் ஐந்தாம் பாவாதியின் திசையில் ஜாதகன் வெகு பணத்துக்கு அதிகாரியாகி புத்திரப் பிராபல்ய முடையவனுகியும், கிராமம், பூமி முதலான லாபமுடையவனுயு மிருப்பான்.

(24) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (திரை லோக்யம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபதி லக்கின கேந்திர திரிகோணங்களி லிருந்தாலும், சந்திரன் ஏழாம் பாவத்தில் இருந்தாலும், ஒரே களத்திர முடையவன். அவளும் நல்ல மனைவி யாவாள், புத்திர புத்திரீயுடன் கூடினவன், ஒரே ஒரு புத்திரன் வெகு காலம் ஆயுளுடையவன்.

(25) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்தில் புதன், சூரியன், சுக்கிரன் இருந்து, சனியால் பார்க்கப்பட்டால் அற்ப வித்தையும், அற்ப புத்திரனும் உடைய ஜாதகனுகி வியாபாரத்தில் சம்பாதித்த தனமுடையவனுகி, தாயாதிகளாலும், வேறு சிநேகிதமில்லாதவர்களாலும் பீடிக்கப் பட்டவனுவான்.

(26) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி ஏழாம் பாவத்தில் அல்லது லக்கினத்தில் சனியிருந்து சூரியன் ஐந்தாம் பாவத்தில் இருந்து லக்கினத்திற்கு ஒன்பதாம் பாவத்தில் பாபக் கிரகமிருந்தால் ஜாதகனுக்குச் சந்தானத்துக்கு இடைஞ்ச லுண்டாகும். சிம்சு மாரதானமும், ஆடு தானமும், (செவ்வாய் பிரீதி) ஹரிவாஸர தினத்தில் கோதானமும், திங்கட்கிழமையில் சனிப் பிரீதியும் செய்து, ஸ்வர்ணத்தால் சூரியப் பிரதமை செய்து நன்றாக அதைப் பூஜித்து, பிராமணனுக்குக் கொடுத்தால் சகல தோஷங்களும் சூரியனுலேயே விலகி சீக்கிரமாக நல்ல புத்திரன் பிறப்பான்.

(27) ஜென்ம லக்கினம் விருச்சிகம் (தனதாம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபதி சூரியனுடன் கூடியிருக்க லக்கினத்துக்கு ஒன்பதாம் பாவத்தில் கேது இருந்தால் ஜாதகன் வேறு மனைவியிடமாவது அல்லது முதல் மனைவியிடமாவது அந்தியக் காலத்திலாவது புத்திரப் பிராப்தி யடைவான்.

(28) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி சூரியன் குருவு னுடைய ராசியில் இருந்தால் ஜாதகனுடைய தகப்பன் விஷ்ணு வுக்கு தர்மம் செய்த புண்ணியங்களால் புத்திர புத்திரீ சுகமுடை யவன் ஆவான், ஜாதகனுடைய தகப்பன் ஜாதகனுடைய நான் காந் திசையில் மரிப்பான்.

(29) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி சுக்கிரன் சனியுடன் கூடி யிருந்தாலும், சனியால் சுக்கிரன் பார்க்கப்பட்டாலும் ஜாத கன் யோகவானும், சுகவானுயும், நல்ல மனைவி, புத்திரர் இவர்களை யுடையவனுயு மிருப்பன்.

(30) ஜென்ம லக்கினம் விருச்சகம் ஆகி பத்தாம் பாவாதிபதி நான்காம் பாவத்தில் புதன், சுக்கிரனுடன் கூடியிருந்தால் ஜாத கன் வயோதிக வயதில் புத்திரனுல் யோகமடைவான்.

(31) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி ஏழாம் பாவாதிபதி சுய க்ஷேத்திரத்திலிருந்து இரண்டாம் பாவாதிபதி மித்திர ராசியில் மேஷத்தில் இருந்தால் ஜாதகன் ஒரே மனைவியுடையவன், ஜாதக னுடைய இருபத்தினென்றில் புத்திர உற்பத்தியும், முப்பத்திரண்டில் பிதுரு நாசமும் நேரிடும். யோகவானுயும், கீர்த்திவானுயு மிருப் பான்.

(32) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி ஐந்தாம் பாவாதி பதி மேஷத்தில் மித்திர ராசியிலிருந்து ஒன்பதாம் பாவாதிபதி சுக்கிரனுடன்கூடி ரிஷபத்தில் இருந்து ஐந்தாம் பாவத்தில் செவ் வா யிருந்தாலும், பார்த்தாலும், ஜாதகனுடைய புத்திரர் சிலர் இறந்து விடுவர். ஜாதகர் மூன்று புத்திரரும், நான்கு புத்திரிகளு முடையவர். இவர்களைவிட அதிகம் பிறந்தாலும் மரித்துவிடும்.

(33) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி (மேக்ஷத்தில் குரு வும், ரிஷபத்தில் பாக்கியாவஸ்திதையில் சந்திரனுமுள்ள) சகட யோகத்தில் பிறந்தவன் அதிக பாக்கியமும், யோகமுமடைவான், ஆயினும் யோக பங்க மேற்படும் என்ற விசாரமடைவான். ஜாத கன் புத்திரன் பிரபலனுக லோகத்தில் கொண்டாடப்பட்ட கீர்த்தி யடைவான்.

(34) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி யாகிய குரு தன் உச்ச ராசியிலிருந்து புதனுடன் கூடியிருந்தால் ஜாதகன் பிதா மகன் பிரசித்த யோகவான், புத்திரனுல் சுகமும்,

நற்புகழுமடைவான். ஜாதகனுடைய ஜன்ம திசையில் ஜாதகனுடைய பாட்டன் மரிப்பான்.

(35) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி சூரியனும் சனியும் ஒருவருக் கொருவர் பார்த்துக்கொண்டு சுய க்ஷேத்திரங்களில் இருந்தால் ஜாதகன் யோகமுடையவன், ரூப லக்ஷணமான மனைவியுடையவன், இருபத்திரண்டாம் வயதில் முதலில் புத்திரியுடையவன், இருபத்தைந்தில் நற்கீர்த்தியும், சற்புத்திர ஜனனமு முடையவன். வயோதிக வயதில் புத்திர யோகமுமடைவான்.

(36) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி தன் உச்ச ராசியில் புதனுடன்கூடி ஒன்பதாம் பாவத்திலிருந்தாலும் அல்லது ஜென்ம லக்கினம் விருச்சிகமாகி சந்திரன் ஐந்தாம் பாவத்திலிருந்து கேதுவுடன் கூடியிருந்து, செவ்வாயால் ஷை சந்திரன் பார்க்கப்பட்டாலும் ஜாதகனுக்குச் சில புத்திரர் மரித்து விடுவார். ஜாதகனுக்கு மூன்று புத்திரரும், மூன்று புத்திரிகளும் ஆயுளுடையவராவர். இவர்களைவிட அதிகம் பிறந்தாலும் இவர்கள் தவிர அதிகமானவர்கள் மரித்து விடுவார்கள். நாக சாந்தி செய்தால் ஜாதகனுக்குப் புத்திரர் விருத்தியுடையராவர்.

(37) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி சூரியன் லக்கினத்திற்கு ஐந்தாம் பாவத்தில் இருந்தாலும் அல்லது ராகுவுடன்கூடி நான்காம் பாவத்திலு மிருந்தாலும் ஜாதகன் சந்தானத் தடையுடையவன். சிசுக்கள் ஆண் பெண் எதுவும் இறந்துவிடும். காலங் கடந்து சந்ததி யுண்டாகும். பானுவார விரதமும், நாக சாந்தியும், சொர்ன சூரிய தானமும் செய்தால் தீர்க்காயுளுடைய இரண்டு புத்திரரும் இரண்டு புத்திரிகளு முண்டாவார்கள்.

(38) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி ஏழாம் பாவாதிபதி நீச்ச ராசியிலிருந்து, ஏழாம் பாவா ரூடத்தில் கேது இருந்தால் ஜாதகன் மறு மனைவி யுடையவன். முதல் மனைவி நற்புத்திரனுடையவள், இரண்டாம் மனைவியும் சற்புத்திர னுடையவள், ஜாதகன் மூன்று புத்திரனுடையவன். சிலர் நான்கு புத்திரனுடையவனென எண்ணுகின்றனர். ஸ்திரீ பிரஜைகளு மிப்படியே யுடையவன்.

(39) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி ஐந்தாம் பாவாதிபதி நீச்ச ராசியில் அலிக் கிரகத்துடன் கூடியிருந்து லக்கினத்திற்கு ஏழாம் பாவத்தில் செவ்வாயிருந்தால் ஜாதகர் சந்தான தடையுடையவர். அந்த தோஷ பரிகாரமாகும்படி குருப் பிரீதியும் பாலகிருஷ்ண தானமும் செய்தால் புத்திர விருத்தியுடையவராகி இரு புத்திரரும் இரு புத்திரிகளு முடையவராவர்.

(40) ஜென்ம லக்கினம் விருச்சிகம் ஆகி கேது நான்காந் திசாநாதனுகவாகி அவர் சிம்ம ராசியிலிருந்து சுபரால் பார்க்கப்பட்டால் ஜாதகர் அத்திசையில் விசேஷ பாக்கியம் பெற்றுத் தேசாதிபதியால் சர்வ காரிய சுதந்திர ராவார், நற்கீர்த்தியும், புத்திர வர்க்கத்தில் சுபமும் உடையவராவார்.

[இதற்கு மேற்பட்ட அயிட்டங்களுக்கு இந்தப் புத்தகத்தின் இரண்டாவது மலரை வாங்கிப் பார்க்கவும்.]

———

# 9-வது அத்தியாயம்.

—:※:—

## தனுசு லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் தனுசு (சிவதாம்சம்) ஆகி சனி இரண்டாம் திசைக்கு அதிபனுக வந்து சனி விருச்சிகத்தில் வர்கோத்தமாம்சத்தில் ஒன்பதாம் பாவத்தில் பத்தாம் பாவாதிபதியுடன் கூடியிருந்தால் அந்த சனியில் விசேஷ சுகமும், இருபத்தேழு வயதிற்குமேல் நல்ல பிரசித்தியும், ராஜாங்க பிரசித்தியும், இருபத்தெட்டாவது வயதில் புத்திரப் பேறுடையவனுயும் இருப்பன்.

(2) ஜென்ம லக்கினம் தனுசு (சிவதாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன், மேஷத்தில் அல்லது தன்னுச்ச ராசியிலிருக்க, குரு கேதுவுடன் கூடியிருந்தாலும், கேதுவால் பார்க்கப்பட்டாலும் ஜாதகனுக்குச் சந்தானத்துக்கு இடைஞ்சல் உண்டாகும். அந்த தோஷ பரிகாரமாக அவசியம் சேது ஸ்நானம் செய்தால் புத்திரோற்பத்தி யுண்டாகும்.

(3) ஜென்ம லக்கினம் தனுசு (முத்கராம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் சனியுடன் கூடியல்லது சனியால் பார்க்கப்பட்டாலும், ஏழாம் பாவாதிபன் ராகுவுடன் கூடியிருந்தாலும் ஜாதகன் சந்தான நாசத்தால் சோகத்தை யடைவான்.

(4) ஜென்ம லக்கினம் தனுசு (முத்கராம்சம்) ஆகி கும்பத்தில் குரு சூரியனுடன் கூடியிருக்கச் சகட யோகத்தில் பிறந்த ஜாதகனுக்குச் சந்தானத்துக்கு இடைஞ்சல் உண்டாகும்.

(5) ஜென்ம லக்கினம் தனுசு (முத்கராம்சம்) ஆகி சகட யோகத்தில் குரு பாபராசியில் பாபாம்சத்தில் இருந்து சந்திரன் கேந்திரத்திலிருந்தால் ஜாதகனுக்குச் சந்தானத்துக்கு இடைஞ்சலுண்டாகும், தோஷத்துக்கு சாந்தி செய்யவேண்டியது, சந்தான கோபால பிரதிமை தானமும், பதினாயிரம் முதலான சிவார்ச்சனையும், சிம்சு மாரதானமும் செய்தால் புத்திரப் பிராப்தியுண்டாகும்.

(6) ஜென்ம லக்கினம் தனுசு (வாருணாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் சந்திரனுடன்கூடி சுய க்ஷேத்திரத்தில் பலத்துடன் கூடி புத்திர காரகனான குரு தன் உச்ச ராசியிலிருந்து சுக்கிரனால் பார்க்கப்பட்டால் ஜாதகன் ஆண் பிள்ளையின் சோகத்தால் தவிக்கப் பட்டவனாகி அற்ப சந்தான முடையவனாகி இரண்டு புத்திரன்களும், மூன்று புத்திரிகளும் ஆயுளுடையவர்களாகப் பெறுவான், அதிகம் பிறந்தாலும் மரித்துவிடும்.

(7) ஜென்ம லக்கினம் தனுசு (சுமத்யாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி செவ்வாய் மூன்றாம் பாவத்தில் இருந்து; ஐந்தாம் பாவத்தில் கேது இருக்க புத்திரகாரகன் குரு சந்திரனுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு முதலில் பெண் சந்ததியும், பிறகு ஆண் சந்ததியும் உண்டாகும். ஜாதகன் அற்ப சந்தான யோகமுடையவன், குரு, கோச்சாரத்தில் விருஷப ராசித் திரிகோணத்தில் வரும் சமயம் ஜாதகனுக்குப் புத்திர புத்திரிகள் உண்டாவார்கள். இரண்டு ஆண் சந்ததியும், இரண்டு ஸ்திரீ பிரஜைகளும் தீர்காயுளுடையவர்களாக இருப்பார்கள். அதிகம் பிறந்தாலும் நஷ்டமடைந்துவிடும்.

(8) ஜென்ம லக்கினம் தனுசு (சுப்ரபாம்சம்) ஆகி நான்காம் பாவத்துக்குடைய குரு தனக்கு ஏழில் இருக்கப்பட்ட சூரியனால் பார்க்கப்பட்டாலும், செவ்வாயால் பார்க்கப்பட்டாலும் ஜாதக

னுடைய மனைவி புத்திர, புத்திரி சந்தான முடையவள், பலரோ யுடையவள்.

(9) ஜென்ம லக்கினம் தனுசு (சாங்கரியாம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்துக்குடைய செவ்வாய் தன்னுடைய உச்சத்திலிருந்து புத்திரகாரகன் சனியால் பார்க்கப்பட்டால் ஜாதகன் காலாந்திரத்தில் புத்திர னுடையவன். இரண்டு புத்திரர்களும், இரண்டு புத்திரிகளும் நீண்ட காலம் ஆயுளுள்ளவர்கள், அதிகமாக இருந்தாலும் இவர்களுக்குச் சாந்தி செய்தால் சுகமுண்டாகும்.

(10) ஜென்ம லக்கினம் தனுசு (துர்த்தராம்சம்) ஆகி ஆறும் பாவத்துக்குடைய சுக்கிரன், சந்திரனுடன் கூடியிருந்தால் இரண்டு தாரமுடையவன், இரு மனைவியருடனும் கூடிவாழ்வான். மூத்த மனைவி புத்திர பாக்கிய முள்ளவள், குணவதி.

(11) ஜென்ம லக்கினம் தனுசு (துர்த்தராம்சம்) ஆகி ஐந்தாம் பாவத்துக்குடைய செவ்வாய், பத்தாமிடத்தில் கேந்திரம் பெற்று கன்னியிலிருந்து குருவால் பார்க்கப்பட்டால் ஜாதகர் வெகு காலம் புத்திரனில்லாதவரா யிருப்பார்.

(12) ஜென்ம லக்கினம் தனுசு (துர்த்தராம்சம்) ஆகி ஜென்ம லக்கினத்திற்கு எட்டில் புதனிருக்க, புதனுக்கிரண்டில் களத்திர காரகனுடன் சந்திரன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு இரண்டு தாரம் என்று சிலர் சொல்கின்றனர். முதல் தாரம் ஒரே புத்திரி யுடனாவது அல்லது மலடியாகவேவாவது (மரிப்பாள்), மூத்தவளை புத்திரனில்லாததால் ஒரு பக்ஷம் தள்ளியும் இரண்டாவது மனைவியால் புத்திர சம்பத்து முதலானதுகள் சகலமுமடைவான்.

(13) ஜென்ம லக்கினம் தனுசு (அம்புஜாம்சம்) ஆகி ஐந்துக் குடைய புத்திர பாவாதிபதி செவ்வாய், சனி க்ஷேத்திரமான மகரத்திலிருந்தால் ஸ்திரீ பிரஜைகள் ஐந்து அல்லது மூன்று இருக்கும். புருஷப் பிரஜைகள் முன் ஜென்மாந்தர பாபத்தால் மரிக்கும், ஜாதகனுக்கு ஐந்து புத்திரியுடன் ஒரு புத்திரன் அல்லது இரண்டு புத்திரன் இருப்பார், இவற்றிற்குச் சாந்தி செய்ய வேண்டும்.

(14) ஜென்ம லக்கினம் தனுசு (குஞ்சராம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபதி ஒன்பதாம் பாவத்திற் குடையவனுடனும், பத்தாம் பாவாதிபதியுடனும்கூடி ராஜ பூஜ்யாம்சத்தில் இருந்தாலும், சுக்கிர

னுடன்கூடி பாராவதாம்சத்தில் இருந்தாலும், சந்திர கேந்திரத்தில் சுக்கிரனும் இருந்தாலும், ஜாதகன் புத்திர, பௌத்திராதி விருத்தியுள்ளவனுகவும், புத்திரி யுள்ளவனுகவும், ராஜயோக முள்ளவனுகவு மிருப்பன்.

(15) ஜென்ம லக்கினம் தனுசு (தனதாம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபன் குரூர நவாம்சத்திலிருந்தால் ஜாதகனுடைய தாரம் நாசமடையும். மூத்தவனுக்குச் சந்ததியில்லை, உண்டாயினும் உடனே மரிக்கும், இளையவனுக்கு அதிக புத்திரர் உண்டாகி மூன்று பெண்கள், மூன்று புத்திரர்கள் தீர்காயுளுடையவராயிருப்பர், மற்றவர் நாசமடைவர், சாந்தியால் புத்திர சுகமுண்டு. இரண்டாம் விவாகத்திற்குப் பின்பு ஜாதகன் யோகவானுவன்.

(16) ஜென்ம லக்கினம் தனுசு (சிவதாம்சம்) ஆகி மூன்றும் பாவாதிபன், சனியாகி காலாம்சத்தில் கேதுவுடனிருந்து, மூன்றும் பாவத்தில் சகோதர காரகனுன குஜன் இருந்தால் ஜாதகனுக்கு இளைய சகோதரம் இல்லை, மூத்த சகோதரமுண்டு, கொஞ்சகாலம் மானியாக இருப்பான், ஒரு சகோதரி, நான்கு புத்திரர்களுடன் கொஞ்சகாலம் ஜீவித்திருப்பாள்.

(17) ஜென்ம லக்கினம் தனுசு (க்ஷிதிசாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் ஆறும் பாவத்தில் நீசாம்சத்தில் பலமற்றவனு யிருந்தாலும், ஐந்தாம் பாவத்தில் ராகு இருந்து குரு, சனி இவர்களால் பார்க்கப்பட்டாலும், ஜாதகனுக்குப் புத்திரனில்லை என்று சிலர் சொல்லுகிறுர்கள். ஏகாதசியில் கோதானம், அரசமரப் பிரதிஷ்டை, பொன் சந்தான கோபால மூர்த்திதானம் முதலிய சாந்தி செய்ய சந்ததி உண்டாகும்.

(18) ஜென்ம லக்கினம் தனுசு (க்ஷிதிசாம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபன் கேந்திரத்திலிருந்து, ஏழாம் பாவம் சுபரால் பார்க்கப்பட்டால் ஜாதகன் அதிக மனைவிகளுடையவன், அல்லது மூன்று தார முடையவன், மூன்று மனைவியரோடு அல்லது போக மாதரின் சேர்க்கையோடு இருப்பான். சாந்தி தானத்தால் புத்திரப் பேறுண்டாகும்.

(19) ஜென்ம லக்கினம் தனுசு (க்ஷிதிசாம்சம்) ஆகி குரு புத்திர ஸ்தானத்தையாவது, ஸ்தானுதிபனையாவது பார்த்தால் ஜாதகன் சாந்திகளால் சந்தான மடைவான். இரண்டு மூன்று தடவை

கர்ப்பம் தரித்து நாசமடையும், பின்னால் புருஷ சந்ததி உண்டாகும். முதல் கர்ப்பம் இரட்டை கர்ப்பம் தரிக்கும்.

(20) ஜென்ம லக்கினம் தனுசு (பிரபாம்சம்) ஆகி எட்டாம் பாவாதிபன் சந்திரன் லக்கினாதிபனுடன்கூடி குரு வாருணாம்சத்தில இருக்க சக்ர யோகத்தில் ஜெனித்த ஜாதகனுக்கு இரண்டாம் திசையில் செல்வப் பெருக்குண்டாகும், பிரபல உத்தியோகம், சந்தான உற்பத்தி, சகோதரி பொருள் கிடைத்தல் முதலியன உண்டாகும்.

(21) ஜென்ம லக்கினம் தனுசு (பிரபாம்சம்) ஆகி பாக்கியாதிபனான சூரியன், ரிஷப இராசியில் குமாராம்சத்திலும், பஞ்சமாதிபனான குஜன் ரிஷபத்திலேயே மங்களாம்சத்திலும் இருக்க குரு லக்கினத்தில் வாருணாம்சத்தில் இருக்க ஜெனித்த ஜாதகன் புத்திரன் உண்டயவன், சூத்திர ஜென்மமுடையவன், புகழுடையவன், புத்திரன்சொல் கேட்ப்பவன், ராக்ஷச குணமுடையவன், சுகவான்.

(22) ஜென்ம லக்கினம் தனுசு (பிரபாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் மங்களாம்சத்தில் சூரியன், புதனுடன்கூடி வாருணாம்சத்தில் இருக்க, ஜெனித்த ஜாதகன் அற்ப சந்ததி யோக முடையவன்.

(23) ஜென்ம லக்கினம் தனுசு (பிரபாம்சம்) ஆகி லக்கினத்திற்கு மூன்றும் பாவத்தில் சனி வாருணாம்சத்தில் இருந்து, வாருணாம்சத்தில் குரு இருக்கும் ஜாதகனுக்கு அநேக சந்ததி மரிக்கும். ஒரு புத்திரன் தீர்காயுளுடையவனாவான்.

(24) ஜென்ம லக்கினம் தனுசு (பிரபாம்சம்) ஆகி தனுசில் வாருணாம்சத்தில் குரு இருக்கும் சக்கரயோக ஜாதகனுடைய பிதாவின் சகோதரிக்குப் புத்திர யோகமுண்டு, இரு சிற்றப்பன்மார்கள், புத்திரனற்றவர்களாவார். ஜாதகனுக்கு இரு புத்திரர், இரு பெண்கள் தீர்காயுளுடையவராவார்.

(25) ஜென்ம லக்கினம் தனுசு (கோகிலாம்சம்) ஆகி சனி மேஷத்தி லிருந்தால் ஜாதகன் புத்திர மித்திரருடன் கூடியவன், ஜாதகன் வாலிபத்தில் கிலேசத்தினால் வருந்துவான், பந்துக்கள் மூலம் சுகமடைவான், விவாகத்திற்கு பிறகு சுகமுண்டு, இருபது

அல்லது இருபத்திரண்டில் பிதா அரிஷ்டமடைவான், முப்ப துக்குமேல் சுகமுண்டு.

(26) ஜென்ம லக்கினம் தனுசு (கோகிலாம்சம்) ஆகி லக்கி னத்தில் சந்திரன் ராகுவுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்கு மூன் ரும் தெசையில் விவாகம் நடக்கும். புத்திரோற்பத்திக்குப் பிறகு சௌக்கியமடைவான். ஐந்தாம் திசையில் தனவரவும், இவன் புத்திரனுக்கு விவாக சௌக்கியமும் உண்டு.

(27) ஜென்ம லக்கினம் தனுசு (கதாம்சம்) ஆகி விருச்சிகத் தில் சனி யிருந்தால் ஜாதகனுக்கு இரு சகோதரிகள் தீர்காயுள், ஒருத்தி புத்திரனுடையவள், சுகமுடையவள். ஜாதகனுக்கு இரு தார மிடமும் புத்திரனுண்டு.

(28) ஜென்ம லக்கினம் தனுசு (காதாம்சம்) ஆகி காதாம்சத் தில் விருச்சிகத்தில் சனி யிருந்தால் ஜாதகனுக்கு ஐந்தாம் தெசை யில் தாரபயமும், அதிக புத்திரர் பிறந்தும் மரிப்பர், மூத்த சகோ தரன் தீர்காயுள், வாலிபத்தில் வயிற்றுவலி பீடைவரும், மரித்த சந்தானம் அதிகம் உண்டு.

(29) ஜென்ம லக்கினம் தனுசு (முத்கராம்சம் பூர்வ பாகம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் லோஹிதாம்சத்தி லிருந்தால் ஜாதகன் சந்தானத்திற்கு வியாகூல மடைவான், காலாந்திரத்தில் நல்ல புத்திரனுடையவனுவான், சிற்றப்பன் புத்திரர்களுக்குப் பீடை நேரும்.

(30) ஜென்ம லக்கினம் தனுசு (முத்கராம்சம்) ஆகி ஏழாம் பாவாதிபன் சூரியனுடன் கூடினால் ஜாதகன் அயல் ஸ்திரீ சம் மந்த முடையவன், இரண்டுதார முடையவன், இருதாரத் திடமும் புத்திரனுடையவனுவான்.

(31) ஜென்ம லக்கினம் தனுசு (பங்கஜாம்சம் உத்திராம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் ஏழாம் பாவ ராசியிலிருந்தால் ஜாதக னுக்குப் புத்திரனில்லை, சுகவான், புத்திர நாசத்தால் வருந்து வான்.

(32) ஜென்ம லக்கினம் தனுசு (பங்கஜாம்சம்) ஆகி மூன்ரும் பாவாதிபன் சனி உச்சக் கிரகத்துடன் கூடியிருந்தால் ஜாதகன் முதுமையில் புத்திரன் மூலம் யோகமுடையவனுவான்.

(33) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி நான்காம் பாவாதிபதி சனியால் பார்க்கப்பட்டு இரண்டாம் பாவாதிபதி சூரியனுடன் கூடியிருந்தாலும், ராகு கத்கதாம்சத்திலிருந்தாலும் ஜாதகன் ரூபவதியான மனைவியையும், மாமியார், மாமனார்களுடையவனையும், வெகு ஆயுசுடைய இரண்டு புத்திரர்களும் இரண்டு புத்திரிகளு முடையவனுவான்.

(34) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி எந்த அம்சத்தில் ஜாதகன் பிறந்தாலும் குரு பலவானுயிருந்தால் அவனுடைய புத்திரன் பிரசித்தி யடைவான், ஷை குருவுடன் செவ்வாய் கூடியிருந்தால் விசேஷ பிரசித்தி உடையவனுவான்.

(35) ஜென்ம லக்கினம் தனுசு ஆகிச் சந்திரன் சிம்ம ராசியிலிருக்கப் பிறந்தவனுக்குச் சனி சிம்ம ராசிக்கு இரண்டாமிடமான கன்னியா ராசியில் இரண்டாவது பரியாயத்தில் கோசாரத்தில் சஞ்சரிக்கும்போது, ஜாதகனுக்குப் புத்திரி சந்தானம் உண்டாகும், கீர்த்தியு முண்டாகும்.

(36) ஜென்ம லக்கினம் தனுசு ஆகிச் சந்திரன் சிம்ம ராசியிலிருக்கப் பிறந்தவனுக்குச் சனி இரண்டாவது பரியாயத்தில் சிம்ம ராசிக்கு ஆறுமிடமான மகர ராசியின் கடைசியிலும், ஏழாமிடமான கும்ப ராசியிலும் கோச்சாரத்தில் சஞ்சரிக்கும்போது யத்தன மின்றியே சித்த புருஷ தரிசனமும், அவரால் சம்பத்தும் ஏற்படும், புத்திர உற்பத்தியும் உண்டாகும்.

(37) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி, சிம்மராசி ஜன்ம ராசி (அதாவது சந்திரன் சிம்மராசியிலிருந்து) பிறந்தவனுக்கு இரண்டாம் பரியாயத்தில் ஏழாமிடமான கும்ப ராசியில் கோச்சாரத்தில் சனி சஞ்சரிக்கும் காலையில் மனைவி சுகமும், புத்திர விருத்தியும், கீர்த்தியும் உண்டாகும்.

(38) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி ஏழாம் பாவாதிபதி சனியால் பார்க்கப்பட்டால் ஜாதகன் புத்திர கிலேசம் அடைவான்.

(39) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி லக்கினத்திற்கு மூன்றும் பாவத்தில் குரு இருந்து சனி செவ்வாய் இவர்களால் பார்க்கப்பட்டாலும் சனி செவ்வா யிவர்களுடன் குரு கூடியிருந்தாலும் குரு மிருத புத்திராம்சத்தி லிருந்தாலும் ஜாதகனுக்குப் புத்திரர் பிறந்து பிறந்து மரித்து விடுவார்.

(40) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி ஐந்தாம் பாவாதிபதி சுய க்ஷேத்திரத்திலிருந்து, குரு ராகுவுடன் கூடியிருந்தால் ஜாதகனுக்குத் தலைப்பிள்ளை மறித்துவிடும், பிறகு சாந்தி செய்தால் மூன்று புத்திரகளிருப்பார்கள்.

(41) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி ஐந்தாம் பாவத்தில் குரு இருந்தால் ஜாதகன் அற்ப சந்தான முடையவன்.

(42) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி ஏழாம் பாவாதிபதி சுய க்ஷேத்திரத்தில் இருந்து சூரியனுடன் கூடியிருந்து சுக்கிரன் கேந்திர கோணத்தில் இருந்தால் ஜாதகன் இரண்டுதார முடையவன். மூத்த மனைவி புத்திரனில்லாதவள், இரண்டாம் மனைவி வம்சு பாக்கிய விருத்தியுடையவள்.

(43) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி ஒன்பதாம் பாவாதிபதி யாவது தன காரகனுவது மித்திரக் கிரகத்துடன்கூடி தன் உச்சத்தில் அல்லது சுய க்ஷேத்திரத்தில் இருந்தால் ஜாதகன் அனேக கிராமங்களுடையவன், சற்புத்திரர் உடையவன்.

(44) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி ஐந்தாம் பாவாதிபதியுடன் ஆறும் தாராதிபதியாய் வரும் ராகு பன்னிரண்டாம் பாவத்திலிருந்தால் அவர் திசையில் யோகவானுயும், புத்திர வர்க்கத்தில் சுப முடையவனுயும், ஜாதகன் புத்திரன் பிர்பலம்மடைந்து அவனும் தனம் சம்பாதிப்பவனுகவும் ஆவான். (ஜென்ம நட்சத்திரம் அசுவனி, மகம், மூலமானுல் இராகு ஆறுந் தாராதிபதியாக வருவார் என்று அறியவும்).

(45) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி ஏழாம் பாவாதிபதி செவ்வாயுடன்கூடி மூன்றும் பாவத்திலிருந்து சுக்கிரன் சூரியனுடன் கூடி இரண்டாம் பாவத்தில் இருந்தால். ஜாதகன் மறுதார முடையவன், ஜாதகனுடைய மூத்த மனைவி சந்ததியில்லாதவள்.

(46) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி நான்காந் தாராதிபதியாகிய புதன் இரண்டாம் பாவத்தில் செவ்வாயுடன் கூடியிருந்து அவர் திசை வந்தால் ஜாதகன் அந்தத் திசையில் க்ஷேத்திர விருத்தியும், புத்திரனுல் சுகமு மடைவான். (ஜென்ம நட்சத்திரம் திருவாதிரை, சுவாதி, சதயமானுல் புதன் நான்காந் தாரா்திபதியாக வருவார் என்று அறியவும்.)

(47) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி கேந்திரத்தில் லக்கின பாவத்தில் ஐந்தாம் பாவாதிபதி இருந்து குரு நீச்ச ராசியில் தன் உச்ச நவாம்சையி லிருந்தால், கோச்சாரத்தில் கன்னி, மீனம் இந்த இராசிகளில் குரு வரும்போது ஜாதகனுக்குப் புத்திரி, புத்திரரின் ஜனனமாவது, கர்ப்பாதானமாவது நேரிடும். மூன்று புத்திரரும், மூன்று புத்திரிகளும் தீர்க்காயுசா யிருப்பார்கள், சிலர் ஜாதகனுக்குச் சந்தானம் அற்பமாகும் என்று எண்ணுகின்றனர், விவாகத்திற்குப் பிறகு ஜாதகன் சுக மடைவான்.

(48) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி (சிம்ம ராசியிலுள்ள) சந்திரனுக்கு மூன்ருமிடத்தில் ராகு இருந்து சுபக்கிரகத்துடன் கூடியிருந்தாலும சுபக் கிரகத்தால் ராகு பார்க்கப்பட்டாலும் லக்கினுதிபதி தெசையில் பிராம்மண பிரபுவால் சுகமும், புத்திர சுகமும் ஏற்படும்.

(49) ஜென்ம லக்கினம் தனுசு ஆகி ஐந்தாம் பாவாதிபதி ஒன்பதாம் பாவத்திலிருந்து, குரு, புதனுடன் கூடி பதினேராம் பாவத்திலிருந்து பலத்துடனு மிருந்தால் ஜாதகன் காலங் கடந்து முப்பது வயதிற்குமேல் புத்திரனை யடைவான், இருபத்து மூன்ரும் வயதில் ஸ்திரீ பிரஜை பிறந்து மரித்துவிடும், பிறகு ஸ்திரீ பிரஜை பிறந்து சுகமடையும், அதற்கு பிறகு புத்திர சந்தான மடைவான். இந்த ஜாதகனுக்கு மேஷ திரிகோணத்தில் குரு வரும்போது அல்லது துலா இராசியில் அல்லது அதன் திரிகோண இராசியில் குரு வரும்போது, புத்திரி புத்திரர் ஜனிப்பார்கள். ஜாதகன் மூன்று புத்திரரும், மூன்று புத்திரிகளும் சுக முடையவர்களாக யுடையவன். இவர்களைவிட அதிகம் பிறந்தாலும் அச் சந்ததிகள் இறந்துவிடும்.

[இதற்கு மேற்பட்ட அபிட்டங்களுக்கு இந்தப் புத்தகத்தின் இரண்டாவது மலரை வாங்கிப் பார்க்கவும்.]

# 10-வது அத்தியாயம்.

—:※:—

## மகர லக்கின ஜாதகம்.

(1) ஜென்ம லக்கினம் மகரம் (காளிகாம்சம்) ஆகி சனி பத்தாம் பாவத்திலும், குரு ஏழாம் பாவத்திலுமிருந்தால் ஜாதகன் இரு மனைவியருடையவன், மானி, புத்திர புத்திரிகளுடையவன்.

( ) ஜென்ம லக்கினம் மகரம் (விஷ நாசாம்சம்) ஆகி லக்கினாதிபனான சனி கும்பத்தில் ஸுசிராம்சத்தி லிருந்தால் ஜாத்கன் புத்திர ருடையவனாவான்.

(3) ஜென்ம லக்கினம் மகரம் (விஷ நாசாம்சம்) ஆகி லக்கினாதிபன் கும்பத்தில் சுசிராம்சத்திலிருந்து லாபாதிபனான குஜனுடன் கூடினால் ஜாதகன் இறந்த சந்தான யோகமுள்ளவன், காலாந்திரத்தில் புத்திரனை அடைவான்.

(4) ஜென்ம லக்கினம் மகரம் (விஷ நாசாம்சம்) ஆகி லக்கினாதிபனான சனி கும்பத்தில் சுசிராம்சத்தில் இருந்தால் ஜாதகனுக்கு அதிக சந்தானமுண்டு, அநேக சந்ததி மரிக்கும், இருவர் அல்லது மூவர் புத்திரர்கள் தீர்காயுளுடையவராவார்.

(5) ஜென்ம லக்கினம் மகரம் (விஷ நாசாம்சம்) ஆகி ராகு பாக்கிய ஸ்தானமாகிய கன்னியில் ரிஷபாம்சத்தி லிருந்தால் ஜாதகனுக்கு மூன்றுவது திசையில் புத்திரோற்பத்தி யுண்டாகும்.

(6) ஜென்ம லக்கினம் மகரம் (காந்தாம்சம்) ஆகி மூன்றும் பாவாதிபனான குரு, தன் உச்ச சுய க்ஷேத்திரங்களில் இருந்தால் ஜாதகன் காலாந்திரத்தில் நல்ல புத்திரனுடையவனாவான்.

(7) ஜென்ம லக்கினம் மகரம் (காந்தாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் ஆறும் இராசியில் இருந்து சூரியனுடன் புத்திர காரகனான குரு கூடியிருந்தால் ஜாதகனுடைய மனைவி கர்ப்ப சிராவத்தால் வருந்துவாள், அல்லது சிசு பிறந்தாலும் சீக்கிரத்தில் மறிக்கும்.

(8) ஜென்ம லக்கினம் மகரம் (காந்தாம்சம்) ஆகி எட்டாமிடத்திற்குத் திரிகோணத்தி லிருந்தால் ஜாதகனுக்கு ஜோதிடர்

சாபகாரணமாகக் குழந்தைகள் மரிக்கும், என்பத்தோர் பத சக்கரத்தைக் கால மறிந்தவனுக்குத் தானம் செய்ய சாந்தி யுண்டாகும்.

(9) ஜென்ம லக்கினம் மகரம் (காந்தாம்சம்) ஆகி சூரியன் துலாத்தி லிருந்தால் ஜாதகனுக்குக் காலாந்திரத்தில் புத்திரப் பிராப்தி யுண்டாகும்.

(10) ஜென்ம லக்கினம் மகரம் (காலாம்சம்) ஆகி புத்திர ஸ்தானாதிபனான சுக்கிரன் மிதுனம்சத்தில் சர லக்கினத்தில் இருந்தால் ஜாதகன் அற்ப சந்தான யோகமுடையவன். உத்திராம்சம் ஆனால் மூன்றாவது திசையில் காலாந்திரத்தில் புத்திரப் பேறு அல்லது வேறு தாரத்திடமாவது புத்திரப் பேறு அடைவான்.

(11) ஜென்ம லக்கினம் (காலாம்சம்) ஆகி ஐந்தாம் பாவாதிபன் லோஹிதாம்சத்தி லிருந்தால் ஜாதகன் அற்ப சந்தான யோகமுடையவன், இறந்த சந்தானம் அதிகம் உண்டாகும் யோகமுடையவன், பூர்வ பாகமானால் முதுமையில் புத்திர சோக மடைவான்.

(12) ஜென்ம லக்கினம் மகரம் (காலாம்சம் பூர்வ பாகம்) ஆகி ஜாதகன சகடயோக முடையவனானல் ஜாதகன் புத்திர நாசத்தால் வருந்துவான்.

(13) ஜென்ம லக்கினம் மகரம் (துருவாம்சம்) ஆகி லக்கினத்திற்கு ஐந்தாம் வீட்டுக்கு ஐந்தாமிடத்தில் சனி இருந்து விப்ர காலத்தில் ஜெனித்த ஜாதகன் காலாந்திரத்தில் தத்துப் புத்திரனால் புத்திர னடைவான்.

(14) ஜென்ம லக்கினம் மகரம் (சுப்பிரபாம்சம்) ஆகி லக்கினத்திற் கேழில் பாபக்கிரக மிருந்தால் ஜாதகனுடைய மனைவிக்குப் பீடை யுண்டாகும், ஜாதகன் அதனால் விசாரமடைவான், அந்த ஏழாம் பாவாதிபதி பாபக் கிரகத்துடன்கூடி ஜாதகத்தில் எவ்விடத்திலிருந்தாலும் ஜாதகன் இரண்டு மனைவி அடைவான், அப்படி ஏழாம் பாவாதிபதி பாபருடன் கூடியும், லக்கினத்திற்கு ஏழில் பாபக் கிரகமுமிருக்க ஜாதகன் ஒரே தாரத்துடனிருந்தால் ஜாதகன் மனைவி கர்ப்ப காலத்தில் சங்கர தோஷத்தால் பீடிக்கப் படுவாள்; ஏழாம் பாவத்தில் ராகு இருந்தால் கர்ப்பப் பையில் புழுக்களிருக்கும்.

(15) ஜென்ம லக்கினம் மகரம் (சுப்பிரபாம்சம்) ஆகி ஐந் தாம் பாவத்தில் அல்லது ஒன்பதாம் பாவத்தில் சனியிருந்து வந்தி யாம்சத்தை அடைந்திருந்தால் ஜாதகன் மனைவி மலடியாகிக் கிலேச முற்றிருப்பாள், ஷை சனி குருவால் பார்க்கப்பட்டிருந் தால் ஜாதகன் மனைவி வெகு காலம் கடந்து பிரசவிப்பாள்.

(16) ஜென்ம லக்கினம் மகரம் (சுப்பிரபாம்சம்) ஆகி ஐந் தாம் பாவாதிபதி பன்னிரண்டாம் பாவத்திலிருந்து சனி ஐந்தாம் பாவமல்லது ஒன்பதாம் பாவத்திலிருந்தால் ஜாதகனுக்குச் சந் தானத்துக்கு இடைஞ்சலுண்டாகும். முன் ஜென்மாந்திரத்தில் ஜோதிஷ பிராமணனுடைய சாபத்தினால் ஜாதகனுடைய சந்த திக்கு இடைஞ்சல் உண்டாகும். ஜாதகனுடைய ஏழாம் பாவத் தில் ராகு இருந்தால் அந்த தோஷத்திற்காக நாக சாந்தி செய்ய வேண்டும். பிராம்மண சாபத்தின் பொருட்டுச் சாந்தியாக நாக சர்ப்பத்தை ஆபரணமாகப் பூண்ட (சிவாகாரமுள்ள) சிவ சொ ரூபமான சிவ லிங்கத்தை நாகாபரணத்துடன் பிரதிஷ்டை செய்து சிவ கல்பத்திற்குச் சொன்ன விதிப்படி சொர்ணத்தால் செய்யப் பட்ட முன் சொன்ன சிவலிங்கத்தை சிவபெருமானின் பிரதிமை யை நன்றாக அறிந்த ஜோதிஷனைக் கொண்டே ஊழ்வினை யறிந்து நன்றாய்ப் பூஜித்து, ஜோதிடனுக்காக தானம் ஜோதிடனுக்கே செய்யவேண்டும்; ஐந்தாம் பாவத்தில் சந்திரனிருந்தால் நல்ல புத்திமானவன், சந்தான கோபாலனையும் அர்ச்சித்து பூஜித்து தானம் செய்யவேண்டும், வேறு சிலர் சிவபிரானை அர்ச்சனை செய்து, சுப்ரமண்ய விரதமும், வெள்ளிக்கிழமை விரதமும் ஷஷ்டி திதி விரதமும், விதரனையுடன் சந்தான கோபாலப் பிரதி மை தானமும் செய்து, நாக சாந்தியும், சேது முதலிய ஸ்நான மும், பல புண்ணிய தீர்த்த ஸ்தானமும் செய்தாலும், சீக்கிரத்தி லேயே நல்ல புத்திரனை அடைவான், இந்த சாந்தியை ஜாதக னுடைய ஐந்தாம் திசையில செய்தால் நல்ல புத்திரனை ஜாதகன் அடைவான், ஒரே ஒரு புத்திரனும், ஒன்று அல்லது இரண்டு புத்திரியுமாவது பிறப்பார்.

(17) ஜென்ம லக்கினம் மகரம் (சுப்பிரபாம்சம்) ஆகி ஐந் தாம் திசையாக ரிஷபத்திலுள்ள குரு திசை வந்தால், ஜாதக னுக்கு, தன்னுடைய புக்தியில் கர்ப்பாதானமும், புத்திர லாப

